Presented to the library
of Jangamwadi Math
by
The International Institute
of Saiva Siddhant Research
Dharmapuram.

[signature]
Director
10 XI 88



பதிகயி லாய பரம்பரை நந்திக்குக்
கதிதரும் கல்லாற் கடவுள்உப தேசம்.

உ

சிவமயம்

இந்நூல்

திருக்கயிலாய பரம்பரைத்

தருமை ஆதீனக் குருமுதல்வர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக

பரமாசாரிய சுவாமிகள்

குருபூஜை விழா மலராக

பிரபவ - வைகாசி 4௳ (18—5—87) அன்று

மலர்ந்து

ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள்

300 ஆவது ஆண்டு நினைவு

மூன்றாவது,

அனைத்துலக சைவ சித்தாந்தக்

கருத்தரங்க விழாவில்

வெளியிடப்பெற்றது

9—12—1988.

தருமை ஆதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண். 377.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# மெய்கண்ட சாத்திரம்

( சைவ சித்தாந்தம் )

இந்நூல்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

திருவுளப்பாங்கின்வண்ணம்

" ஞானசம்பந்தம் பதிப்பகத்தில் "

வெளியிடப் பெற்றது.

தருமை ஆதினம்

9—12—1988.

முதற்பதிப்பு 1942.
இரண்டாம் பதிப்பு 1956.
மூன்றும் பதிப்பு 1988.



பதிப்பாசிரியர் :

தருமை ஆதீனப் புலவர்,
சித்தாந்தக் கலைமணி, மகாவித்துவான்,
திரு. சி. அருணைவடிவேல் முதலியார்
தருமபுரம்.



'ஞானசம்பந்தம் அச்சகம்'
தருமபுரம்.

உ

குருபாதம்

# நூன்முகம்

" ஈராண்டில் சிவஞானம் பெற்றுயர்ந்த
மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க்கு அருள்புரிந்த
அருள்நந்தி நற்றாள் போற்றி
நீராண்ட கடந்தைநகர் மறைஞான
சம்பந்தர் நிழற்றாள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார்
செம்பதுமத் திருத்தாள் போற்றி. "

சைவ சமயத்தின் அருப்பெரும் கண்களாக விளங்குவன தோத்திரங்கள் பன்னிரண்டும், சாத்திரங்கள் பதினான்கும் ஆம். சாத்திரங்கள் பதினான்கையும், "மெய்கண்ட சாத்திரங்கள்" என்னும் பொதுப் பெயரால் குறித்தல் மரபு. இந் நூல்கள் உண்மைகாணும் நோக்கில் தோன்றியன ஆதலின், விருப்பு வெறுப்பு அற்ற ஆய்வு அமைப்பு இவற்றிடையே காணக்கிடக்கிறது. இதற்குச் சான்றாகும் வகையில் 'சிவப்பிரகாசம்' எனும் நூலில் காணும் அவையடக்கப் பகுதி அமைந்துள்ளது.

" தொன்மையவாமெனும் எவையும் நன்றாகா இன்று
தோன்றிய நூல்எனும் எவையுந்தீதாகா துணிந்த
நன்மையினர் நலங்கொள்மணி பொதியுமதன் களங்கம்
நவையாகாது என உண்மை நயந்திடுவர் நடுவாம்
தன்மையினர் பழமையழகு ஆராய்ந்து தரிப்பர் "

என்பது அந்நூற் பகுதியாகும். இறையருள் பெற்ற அருளாளர்கள் இந்நெறியில் அருளிய மெய்கண்ட நூல்கள் பதினான்கையும் துகளறுபோதம் எனும் அரிய நூலுடன் தெளிவாகவும் அழகாகவும் வெளியிடுதற்குத்,

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

திருவுளம் கொண்டருளினார்கள். இதன் முன் இரு பதிப்புக்கள்-தருமை ஆதீனம் 24 ஆவது குருமகாசந்நிதானம் அவர்கள் அருளாணையின் வண்ணம் 1942 ஆம் ஆண்டும், 25 ஆவது குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் 1956 ஆம் ஆண்டும் - வெளிவந்துள்ளன. இது பொழுது தருமை ஆதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானத்தின் அருளாசியுடன் இப்பதிப்பு வெளிவருகிறது. தருமை ஆதீனப் புலவர், மகாவித்துவான் தி. சி. அருணைவடிவேல் முதலியார் பல பிரதிகளை ஆராய்ந்து கண்ட தக்க பாடங்களைக் கொண்டு சீரியமுறையில் இந்நூல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. பாட பேதங்கள் அடிக்குறிப்பாகக் கொடுக்கப் பெற்றுள்ளன. மேலும், இப் பதிப்பில் மெய்கண்ட சாத்திர நூல்களைப்பற்றியும் அவற்றை அருளிய ஆசிரியன்மார்களைப் பற்றியும் ஆராய்ச்சி முன்னுரை ஒன்றும் சேர்க்கப்பெற்றுள்ளது.

மூன்றாவது பதிப்பாக வெளிவரும் இந்நூல், தருமை ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜை விழாமலராக 1987 ஆம் ஆண்டு மலர்ந்து, தருமை ஸ்ரீசொக்க நாதர் திருவடிகளில் சூட்டப்பெற்று, இதுபோது தருமபுரம் ஆதீனம் அனைத்துலகசைவசித்தாந்த ஆராய்ச்சிநிறுவனத்தின் சார்பில் வாரணாசியில் நடைபெறும் மூன்றாவது கருத்தரங்கில் வெளியிடப்பெற்று மணம் பரப்புகிறது. சைவ மெய்யன்பர்கள் கற்றுத் தெளிவு பெறுவார்களாக.

"எல்லாம் அரன் நாமமே சூழ்க!
வையகமும் துயர்தீர்கவே!"

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்
அருளாணையின் வண்ணம்,

வித்துவான்,
சுவாமிநாதத் தம்பிரான்.

தருமை ஆதீனம்,
7—12—1988.

உ

குருபாதம்

தருமை ஆதீனத்தை நிறுவியருளிய

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்திடாமல்
தாரணி அன்பரைஆள அவர்போல் வந்த
சைவசிகா மணி எவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழில் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்கணாளன்
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

— ஸ்ரீ சம்பந்தசரணாலயர்.

ஸ்ரீ வில்லிபுத்தூரில் கார்காத்தவேளாளர் குலத்தில் சுப்பிரமணியப்பிள்ளைக்கும் மீனாட்சியம்மைக்கும் அருந்தவ மகவாக அவதரித்தார் ஸ்ரீ குருஞானசம்பந்தர். மதுரையம் பதிக்குத் தம் பெற்றோருடன் சென்று குலதெய்வமாகிய ஸ்ரீ சொக்கநாதப் பெருமானை வழிபட்டார். திருவருளால் பொற்றாமரைக் குளத்தின் ஈசான மூலையில் பெட்டகக் கோயிலுடன் ஸ்ரீ சொக்கநாதர் கண்ணுக்கினிய பொருளாகக் கைவரப்பெற்றார். சொக்கேசன் அருளால் திருவாரூர் சென்று, ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகரை வணங்கிச் சிவஞானோபதேசம் பெற்றுச் சொக்கநாதர் பூஜையும்

எழுந்தருளச்செய்து கொடுக்கப்பெற்ருர். குருவாணை யின் படியே தருமபுரத்தில் அமர்ந்து பக்குவான்மாக் களுக்கு ஞானேபதேசம் செய்து சைவசித்தாந்தத்தை எங்கும் பரவச்செய்தார். தமது ஆன்மார்த்த மூர்த்தி யாகிய ஸ்ரீசொக்கநாதப் பெருமான்மீது சொக்கநாத வெண்பா பாடித் துதித்தார். சிவபோகசாரம், முத்தி நிச்சயம், சொக்கநாதக் கலித்துறை, ஞானப்பிரகாச மாலை, சோடசகலாப் பிராசாதசட்கம், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல், நவரத்தினமாலை ஆகிய நூல்களையும் அருளிச் செய்தார்.

இவ்வாறு பல்லாண்டுக்காலம் ஞான அரசாட்சி புரிந்து சிவலிங்கத் திருவுருவின் கீழ் ஜீவசமாதி கூடினுர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் இவர்கள்ஜீவசமாதி கூடிய குருமூர்த்தமே தற்பொழுது ஸ்ரீ ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலாக விளங்கி வருகிறது. கி. பி. 16 ஆம் நூற்ருண்டில் ஸ்ரீ குருஞானசம்பந்தரால் தோற்றுவிக்கப் பெற்ற இத்தருமை ஆதீனம் மொழித்தொண்டும், சமயத் தொண்டும், சமூகத்தொண்டும் ஒல்லும் வகையெல் லாம் ஆற்றிவருகிறது. ஸ்ரீ குருஞானசம்பந்தர் பரம் பரையில் தற்பொழுது இருபத்தாருவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளி இருப்பவர்கள் ஸ்ரீல ஸ்ரீ சண்முகதேசிகஞானசம்பந்தபரமாசாரியசுவாமிகள் ஆவார்கள். அவர்களால் தமது ஆதிபரமாசாரிய சுவாமிகளாகிய ஸ்ரீகுருஞானசம்பந்தர்திருப்பெயரில் நிறுவப்பெற்ற "ஞானசம்பந்தம் பதிப்பகம்" அறக் கட்டளை வெளியீடாக இந்நூல் வெளியிடப்பெற்றது.



பொய்கண்டார் காணாப் புநிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்அருள் விளங்குந் திருக்கோலம்.

உ

சிவமயம்

# மெய்கண்ட நூல்கள்

# ஆராய்ச்சி முன்னுரை

தருமை ஆதீனத் தமிழ்ப்புலவர்,

பேராசிரியர்

டாக்டர். திரு. கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ., பிஎச். டி.,

## சைவ சமயம் :

சிவபரம் பொருளையே முதன்மையாகக் கொண்டு இயங்குவது சைவ சமயமாகும். உலகில் உள்ள உயிர்கள் அனைத்தையும் ஒப்ப நோக்கி அவற்றினிடத்து அன்பு செலுத்துவது இச் சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். ''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்''‡ எனவரும் அருள்வாக்கு இதனைப்புலப்படுத்தும். சைவம் என்ற சொல்வழக்குத் திருமூலர் திருமந்திரத்திலேயே முதன்முதல் காணப்படுகிறது. இதன் காலம் கி. மு. ஆறுயிரம் என்பர். இச் சொல்வழக்கைப் பின்வந்த மணிமேகலையும் திருவாசகமும் எடுத்தாளுகின்றன. 'இறைவன் ஈசன் என நின்ற சைவ வாதி' † என்னும் மணிமேகலை. ''ஐயாறதனிற் சைவனாகியும்'', ''சைவா போற்றி தலைவாபோற்றி'' என்னும் திருவாசகம்.

---

‡ திருமந்திரம் - 257. † மணிமேகலை: 27 – 86, 87.

## தொன்மையும் சிறப்பும் :

உலகில் காணும் நாகரிக அமைப்பில் சிந்து வெளி நாகரிகமே தலைமையும் தொன்மையும் வாய்ந்தது என்பர். இங்குக்கண்ட அகழ்வாராய்ச்சிகளின் மூலம் இதன் தொன்மை தெரியவருகின்றது. கல்லினால் செய்த சிவலிங்கங்கள், நந்தி உருவங்கள், கோயில் அமைப்புக்கள், பூசைக்குரிய பொருள்கள் இவ்வகழ்வாராய்ச்சியின் மூலம் கண்டெடுக்கப்பெற்றுள்ளன. இவற்றில்காணும் எழுத்துக்களும் அமைப்புக்களும் இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவை என அறிஞர் கண்டுள்ளனர். இச்சிவ வழிபாடு உலகெங்கும் பரந்தும் விரிந்தும் அமைந்திருந்தமையை மேனாட்டறிஞர்களும் ஒரு படித்தாக ஒப்புக் கொள்கின்றனர். வேதங்களிலும் இதிகாசங்களிலும் சிவபெருமானைப் பற்றிய குறிப்புக்கள் மிகுதியும் உள்ளன. இவ்வாற்றான் இதன் தொன்மை நன்கு விளங்கும்.

## தமிழ் நூல்களில் சைவம் :

இறை, உயிர், தளை ஆகிய முப்பொருள் உண்மையே சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். இவற்றிற்குரிய குறிப்புக்கள் பலவும் தொல்காப்பியம், திருக்குறள், சங்க இலக்கியங்கள் ஆகியவற்றில் ஆங்காங்குக் கூறப்பெற்றுள்ளன. "நுதல் விழி நாட்டத்து இறையோன்"[1] "நீலமணிமிடற்று ஒருவன்"[2] "காரி உண்டிக்கடவுள்"[3] என்பன சிவபெருமானைக் குறிக்கும் தொடர்களாகும். "தீதும் நன்றும் பிறர் தர வாரா"[4] என்பது அக்காலத் தமிழ் மக்கள் கொண்ட வினைபற்றிய கொள்கையாகும். "இம்மை மாறி மறுமையாயினும்"[5] "இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்"[6]

---

[1] சிலம்பு: ஊர்காண். 7. [2] புறம் - 91.
[3] மலைபடுகடாம்: 83. [4] புறம் - 192.
[5] குறுந் - 49. [6] புறம் - 134.

என்பன போன்ற குறிப்புக்கள் உயிர், வினைவயத்தால் மாறி உடம்பெடுக்கும் இயல்பின என்பதை விளக்கும். "பால்வரை தெய்வம்"[7] "வகுத்தான்",[8] என்ற தொடர்கள், வினை, உயிர்களைத் தாமே அடைவதில்லை; அவற்றை உயிர்கள் மாட்டுச் செலுத்த ஒருவன் உளன் என்னும் கொள்கையைக் குறிப்பனவாகும். எனினும் இக்கொள்கைகளை இறை, உயிர், தளை (பதி, பசு, பாசம்) என மூவகைப்படுத்தி முதற்கண் குறித்த பெருமை திருமூலர்க்கே உண்டு. "பதி, பசு, பாசம் எனப் பகர் மூன்றில் பதியினைப்போல் பசு, பாசம் அனாதி"[9] என்பது திருமந்திரம்.

### சமய நூல்கள் :

மேற்கூறியவாறு பரந்தும், விரிந்தும், இருந்த சைவ சமயம் சங்க காலத்தை அடுத்துப் பிற சமயத்தாலும், அரசியல் மாற்றத்தாலும் சற்றுத் தளர நேர்ந்தது. அத்தளர்ச்சியைப் போக்கி உயிர்ப்பைக் கொடுத்தவர்கள் நாயன்மார்கள் ஆவர். காரைக்கால் அம்மையார், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர், ஐயடிகள் காடவர்கோன், நம்பியாண்டார் நம்பிகள், சேக்கிழார் முதலிய அருளாளர்கள் இவ்வகையில் போற்றற்குரிய பேரருளாளர்கள் ஆவர்; திருவருள் வழிப்பட்ட இவர்களின் அரிய தொண்டு பல்லாற்றானும் பாராட்டிப் போற்றுதற்குரியதாகும். இவர்களுள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர் ஆகிய நால்வரும் சமய குரவரெனப் போற்றப் பெறுவர். திருமூலர் முதலாகச் சேக்கிழார் ஈறாக உள்ள இருபத்தேழு பேரருளாளர்கள் தாம் இறைவன்பால் கண்ட இன்ப நுகர்வைப் பிறரும் பெற இசையொடு கட்டியும்,

---

[7] தொல்காப்பியம் - சொல் - 56. [8] திருக்குறள் - 377

[9] திருமந்திரம் - 70.

இயற்றமிழாகத் தனித்தும் பல்வேறு நூல்களை அருளி யுள்ளனர். இவைகள் திருமுறைகள் எனப்பெறும். இறைவனை நேராகப் போற்றியும், அவ்வாறு போற்றற்குரிய நெறிகளை விளக்கியும் கூறுதலின் இவற்றைத் தோத்திரமென்றும் கூறுவர். இவற்றின் பின்வந்தனவே சாத்திர நூல்களாகும். இவற்றின்பின் எழுந்தவை புராணங்களாகும். இவை திருவருள் நெறியில் தோய்ந்து வாழ்ந்தவர்களின் வரலாறு களைக் கூறுவனவாகும். அடுத்து வந்தவை பிரபந்தங்களாகும். திருக்கயிலாய ஞான உலா உள்ளிட்ட நூல்கள் பிரபந்தங்கள் எனப் பெயர் பெறுமாயினும் பிற்காலத்தெழுந்த நூல்களையே பிரபந்தங்கள் என்ற வகையில் அடக்கிக் கூறுதல் மரபாயிற்று. இவ்வகையில் குருஞானசம்பந்தர், குமரகுருபரர்' சிவஞான சுவாமிகள், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலியவர்கள் அருளிச் செய்த பிரபந்தங்கள் குறிப்பிடத்தக்கனவாம். இவற்றொடு இறைவன் எழுந்தருளியுள்ள திருப்பதிகளின் சிறப்பை விளக்கும் முகமாக எழுந்த தலபுராணங்களும் எண்ணற் குரியனவாகும்.

## மெய்கண்ட நூல்கள் :

சைவ சமயக் கோட்பாடுகளை அளவைகளாலும் பொருந்துமாற்றானும் விளக்க வந்தனவே மெய்கண்ட நூல் களாகும். இத்தகைய நூல்கள் 12 ஆம் நூற்றாண்டு முதல் தோன்றி விரிவடைந்தன. இவ்வகையில் எழுந்த நூல்களில் பதினான்கு நூல்கள் சிறப்பாகக் குறித்துப் போற்றப்பெறுவன வாயின. அவையாவன :- 1. திருவுந்தியார், 2. திருக் களிற்றுப்படியார், 3. சிவஞானபோதம், 4. சிவஞான சித்தியார், 5. இருபாஇருபஃது, 6. உண்மை விளக்கம், 7. சிவப்பிரகாசம், 8. திருவருட்பயன், 9. வினாவெண்பா, 10. போற்றிப்பஃறொடை, 11. உண்மைநெறி விளக்கம், 12. கொடிக்கவி, 13. நெஞ்சு விடு தூது, 14. சங்கற்ப நிராகரணம் என்பன. இவற்றிற்கு முன்னும், பின்னும் இவ்

வகையில் நூல்கள் எழுந்திருப்பினும் உபதேச பரம்பரையான் வந்த சிறப்பு இவற்றிற்கு உண்மையின் இவற்றையே சிறப்பாகப் போற்றினர்.

## அருளிய அருளாளர்கள் :

இம் மெய்கண்ட நூல்கள் வேத ஆகமப் பொருள்களேயும், திருக்குறள், திருமுறை ஆகிய நூல்களேயும் உட்கொண்டு, எழுந்தவைகளாகும் இவற்றை அருளியவர்கள் இறைவனும் அவன் அருள் வழிபட்டு வளர்ந்த அருளாளர்களுமே ஆவர். மெய்கண்ட நூல்களை அருளிய அருளாளர்கள் இறைவனேயே குருவாகக் கொண்டு வளர்ந்த உபதேச பரம்பரையில் வந்தவர்கள். இவ்வுண்மையால்தான் சைவம் இறைவனேயே முதல் குரு மூர்த்தியாகக் கொண்டு வளர்ந்தது எனக் கூறக் காரணமாயிற்று இறைவன் திருநந்திதேவர்க்கும், அவர் சனற்குமாரருக்கும், அவர் சத்திய ஞான தரிசினிக்கும், அவர் பரஞ்சோதியாருக்குமாக உபதேசித்தனர். இறைவனைக் குருமூர்த்தியாகக் கொண்ட இவ்வுபதேச பரம்பரையில் வந்த நால்வரும் திருக்கயிலேயில் வீற்றிருந்தவர்களாதலின் இவர்களை அகச்சந்தான ஆசாரியர்கள்என்பர். இவர்களில் நான்காமவரானபரஞ்சோதியார் மண்ணுலகில் வாழ்ந்தமெய்கண்டார்க்கும். அவர் அருள் நந்தி சிவாசாரியர்க்கும், அவர்மறைஞான சம்பந்தருக்கும், அவர் உமாபதி சிவாசாரியருக்கும் உபதேசித்தனர். மெய்கண்டார் முதலாக வந்த இந்நால்வரும் இம்மண்ணுலகில் குருவருள் வழிநின்று அருள் உபதேசம் செய்தவர்களாதலின் இவர்களைப் புறச்சந்தான ஆசாரியர் என்பர். இவர்களுள் மறைஞான சம்பந்தர் என்பார் நூலாக ஒன்றும் அருளவில்லை என்பர். ‡ எனவே புறச்சந்தான ஆசாரியர்களில் மூவரே நூல் செய்தவராகின்றனர். இவர்கள் அருளிய நூல்கள் பத்தே ஆகும்.

‡சதமணிக்கோவை என்னும்நூல் மறைஞானசம்பந்தரால் அருளப்பெற்றது என்பர். தமிழ் இலக்கிய வரலாறு 14 ஆம் நூற்ருண்டு பக், 134. திரு. மு. அ.

இவர்களுக்குக் காலத்தால்முற்பட்ட திருவியலூர் உய்யவந்த தேவ நாயனாரும், திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனாரும் மெய்கண்டாரின் மாணவரான மனவாசகங் கடந்தாரும் சீர்காழி தத்துவநாதரும் ஒவ்வொரு நூல்களைச் செய்ய மெய்கண்ட நூல்கள் பதினான்கு ஆயின. இவர்கள் அருளிய பதினான்கு நூல்களும் கால எல்லையுடன் பின்னர்க் குறிக்கப் பெற்றுள்ளன.

## வரலாறு :

மேற் கூறியவாற்றால் பதினான்கு நூல்களையும் அருளிய அருளாளர்கள் எழுவர் என விளங்கும். அவர்களின் வரலாற்றைச் சுருங்கக் காண்டல் பொருந்துவதாகும்.

## திருவியலூர் உய்யவந்ததேவ நாயனார் :

இவர் திருவியலூர் என்னும் ஊரினர். இறைவனே மானுடச்சட்டைதாங்கி உய்யவந்ததேவர் என்னும்பெயருடன் திருவியலூருக்கு எழுந்தருளினார். அவ்வூரில் வாழ்ந்த ஆளுடையதேவ நாயனார் என்பார் இவரைக் கண்டு வணங்கினார். அவர்தம் பரிபக்குவ நிலையைக் கண்ட இவர், அவருக்குத் தீட்சை செய்து அவர் பொருட்டுத் திருவுந்தியார் என்னும் நூலையும் செய்தருளினார்.

## திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் :

இவர் திருக்கடவூரில் வாழ்ந்தவர். ஆட்டுவாணிப மரபில் தோன்றியவர். திருவியலூர் உய்யவந்த தேவநாயனாரிடத்து அருள்பெற்ற ஆளுடைய தேவநாயனார் இவ்வூருக்கு எழுந்தருளினார். அவரைக் கண்ட இவர் வணங்கினார். ஆளுடைய தேவ நாயனார் இவர்தம் பக்குவத்தை உணர்ந்து தீட்சை செய்து தம் ஞானாசாரியர் பெயரையே இவருக்குச் சூட்டி யருளினார். ஒரு நாள் இவர் சிதம்பரத்திற்கு வழிபாடாற்றச் செல்ல, அவ்வூரிலேயே வழிபாடாற்றிக்கொண்டிருந்த ஒருவர்

| அருளாளர்கள் | அருளிய நூல்கள் | காலம் |
|---|---|---|
| 1. திருவியலூர் உய்யவந்ததேவநாயனார் | 1. திருவுந்தியார் | கி. பி. 1148 |
| 2. திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார் | 1. திருக்களிற்றுப்படியார் | ,, 1178 |
| 3. மெய்கண்ட தேவநாயனார் | 1. சிவஞானபோதம் | ,, 1223 |
| 4. அருணந்தி சிவாசாரியர் | 1. சிவஞானசித்தியார் | ,, 1253 |
| ஷை | 2. இருபா இருபஃது | ,, 1254 |
| 5. மனவாசங்கடந்த தேவநாயனார் | 1. உண்மை விளக்கம் | ,, 1255 |
| 6. உமாபதி சிவாசாரியர் | 1. சிவப்பிரகாசம் | ,, 1306 |
| ஷை | 2. திருவருட்பயன் | ,, 1307 |
| ஷை | 3. வினாவெண்பா | ,, 1308 |
| ஷை | 4. போற்றிப்பஃறொடை | ,, 1309 |
| ஷை | 5. கொடிக்கவி | ,, 1310 |
| ஷை | 6. நெஞ்சுவிடுதூது | ,, 1311 |
| ஷை | 7. சங்கற்பநிராகரணம் | ,, 1313 |
| 7. சீகாழி தத்துவநாதர் | 1. உண்மைநெறிவிளக்கம் | ,, 1350 |

இவரைக்கண்டு வணங்கினர். அவர்தம் பரிபக்குவத்தை உணர்ந்த இவர், அவருக்குத் தீட்சை செய்தருளி, திருவுந்தி யாருக்கு வழிநூலாகத் திருக்களிற்றுப்படியார் என்றநூலையும் செய்தருளிச் சின்னாளில் இறையடி அடைந்தார். இவ்விரு ஆசாரியர்களும் மெய்கண்டாருக்குக் காலத்தால் முற்பட்ட வர்கள் ஆவர்.

## மெய்கண்டார் :

திருப்பெண்ணாகடத்தில் அச்சுதகளப்பாளர் என்ற ஒருவர் இருந்தார். இவர் வேளாண்மரபினர். திருத்துறையூரில் வாழ்ந்த சகலாகமபண்டிதர் அருணந்திசிவாசாரியர் என்பார் இவர்தம் குலகுரு ஆவார். தமக்குப் பன்னாட்களாக மகப்பேறு இன்மையை இவரிடம் தெரிவித்தார். அவரும் அடங்கன் முறையில் கயிறு சாத்திப் பார்த்து அதன்வழி இறைவன் திருவுள்ளத்தை உணர்த்தி அருளினர். ''பேயடையா பிரி வெய்தும்'' எனத்தொடங்கும் திருஞானசம்பந்தர் தம் திருவாக்கின்வழி, களப்பாளரும் அவர்தம் மனைவியாரும் திருவெண்காடடைந்து முக்குள நீராடி இறைவனிடத்துப் பாடு கிடந்தனர். இறையருளால் மகப்பேறு வாய்த்தது. அவ் வருமை மகவைத் திருவெண்காடர் (சுவேதனப் பெருமாள்) எனப் பெயரிட்டு அழைத்தனர். தாய்மாமனின் ஊராகிய திருவெண்ணெய் நல்லூரில் வளர்ந்த இக்குழந்தைக்கு ஈராண்டு தொடங்கியது.

திருக்கயிலையில் இறைவனிடத்திருந்து வழிவழியாக அருளுபதேசம் பெற்றவர்களில் நான்காமவரான பரஞ்சோதி முனிவர் என்பார், தம் தவநெறியால் விண்வெளிச்செல்லும் பொழுது, திருவெண்ணெய்நல்லூரில் இக்குழந்தை விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார். மெய்யுணர்வு கைவரப்பெறும் பக்குவமுடைய அக்குழந்தையிடம் வந்து அதற்கு உபதேசம் செய்து சைவ சித்தாந்த மெய்ப்பொருளை அனைவர்க்கும்

விளங்குமாறு நூல்வடிவில் செய்தருளப்பணித்துத் தம்குருவின் பெயரான "சத்தியஞான தரிசினி" என்ற பெயரினையும் சூட்டினார். சத்திய ஞான தரிசினி என்பதன் தமிழ்வடிவமே மெய்கண்டார் என்பதாகும்.

சிவஞானம் பெற்ற குழந்தையிடம் சிவஞானம் சித்திக்கப் பெற்றது. சிவம் பிரகாசிக்கவும் செய்தது. ஆதலின் குருமூர்த்தியால் பெற்ற மெய்யுணர்வை அனைவருக்கும் கூறியருளும் கடப்பாட்டில் நின்றார் மெய்கண்டார். இவர் தம் மரபிற்குக் குலதருவாக இருந்த சகலாகம பண்டிதர் என்பார் இவர் தந்தையாரைக் காணவந்தார். இக்குழந்தை பாடம் சொல்லிவருவதையும் கேள்விப்பட்டு அவ்விடத்திற்குவந்தார். அதுபொழுது மெய்கண்டார் ஆணவ மலத்தின் இயல்பை விளக்கிக்கொண்டிருந்தார். சகலாகமபண்டிதர் அக்குழந்தையை நோக்கி ஆணவ மலத்தின் வடிவம் யாது? எனக் கேட்டார். அருளுணர்வில் தோய்ந்திருந்த அக்குழந்தை தம் வலக்கைச் சுட்டு விரலால் வினவியவரையே காட்டியது. அவ்வளவில் அருளுணர்வு கைவரப்பெற்ற சகலாகமபண்டிதர் இக்குழந்தை தம்மை ஆட்கொள்ளும் குருமூர்த்தியே என்றெண்ணி இவரை வணங்கினர். சிறிய பெருந்தகையாராக இருந்த இவரும் அவரை மாணாக்கராக ஏற்று அருளுபதேசம் செய்தருளினார்.

இவரிடம் மாணவராக இருந்தவர்கள் நாற்பத்து ஒன்பதின்மர் ஆவர். தமக்குப்பின் சைவ சந்தான குருபரம்பரையை வளர்த்துவரும் பணியை அருள்நந்திசிவாசாரியரிடம் வழங்கினார். பின் ஒரு ஐப்பசிச் சுவாதியில் அண்ணலார் சேவடிக்கீழ் அணைந்தருளினார். இவர் தம் வாழ்நாளில் திருவண்ணாமலைக்கு அருகிலுள்ள மாத்தூரில் தம்பெயரால் ஒரு ஏரியையும், மெய்கண்டதேவேசுரம் என்ற ஒரு திருக்கோயிலையும் அமைத்தார் என்றும், நாள் வழிபாட்டிற்கென ஐந்து வேலி நிலத்தைத் தேவதானமாக வழங்கினர் என்றும்

திருவண்ணுமலைத் திருக்கோயிலுள்ள மூன்ரும்இராசராசனின் பதினருவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுக் குறிக்கின்றது. இவ்வரசனின் காலம் கி. பி. 1216 முதல் 1256 வரையாகும். எனவே இவரது காலமும் அக்காலமேயாகும்.

## அருள்நந்தி சிவாசாரியர் :

அருள்நந்தி சிவாசாரியரின் பிற்பகுதி வரலாறு மெய்கண்டார் வரலாற்ருேடு இயைபுடையது. அது முன்னர்க் கூறப்பெற்றது. அவர்தம் முற்பகுதி வரலாறே ஈண்டுக் காணத்தக்கது. இவர் நடுநாட்டில் உள்ள திருத்துறையூரில் வாழ்ந்தவர். சிவாசாரியர் மரபில் தோன்றியவர். இளமையிலேயே வேத ஆகமங்கள் அனைத்தையும் ஓதியுணர்ந்தவர். ஆதலின் இவரைப் பலரும் சகலாகம பண்டிதர் என்றே அழைத்தனர். இச் சிறப்புப் பெயரே காலப்போக்கில் இவர் தம் இயற்பெயரையும் மறக்கச்செய்தது. வேத சிவாகமங்களில் தோய்வுடையராதல் போலவே திருமுறைகளிலும் இவர் மிகவும் தோய்வுடையராய் இருந்தார் மகப்பேறு இன்றி வருந்திய களப்பாளருக்குத் திருமுறைவழி உய்தி கண்ட திறத்தால் இவ்வுண்மை விளங்கும்.

அச்சுத களப்பாளருக்கு மெய்கண்டார் தோன்றத் திருவருள் இவரைக் கருவியாகக் கொண்டமையும், அத்திருவருள் வழித்தோன்றிய மெய்கண்டாரே இவருக்குக் குருவாய் அமைந்தமையும் திருவருட் செயலே ஆகும். சீகாழியில் தம் மாணக்கரோடு சிலகாலம் தங்கியிருந்தமையின் இவரைச் சண்பையர் தலைவர் எனவும் அழைத்தனர். சீகாழிக்கு உரிய பன்னிரு பெயர்களுள் சண்பை என்பதும் ஒன்று. இவரிடம் மாணக்கராக இருந்த பலருள் மறைஞானசம்பந்தர் என்பாருக்கு ஞானசாரியத் தலைமை நல்கி ஒரு புரட்டாசிப் பூர நாளில் இவர் சிவானந்தப் பெருவாழ்வு அடைந்தார்.

## மறைஞானசம்பந்தர் :

இவர் பெண்ணாகடத்தினர். வேதிய மரபினர். இவர் தம் இயற்பெயர் ஞானசம்பந்தர் என்பதாகும். வேத ஆகமங்களை நன்கு ஓதியமையால் மறை என்ற அடைமொழி கூட்டப் பெற்று மறைஞானசம்பந்தர் என வழங்கப்பெற்றார். அருள் நந்தி சிவாசாரியரிடம் உபதேசம் பெற்ற இவர், சிதம்பரத் திற்கு வடகிழக்கிலுள்ள திருக்களாஞ்சேரியை இடனாகக் கொண்டு வாழ்ந்தார். நாளும் கூத்தப்பெருமானை வணங்கி வரும் கடப்பாடு உடையவராயினர். உமாபதி சிவத்திற்கு உபதேசித்தருளிய இவர் ஓர் ஆவணித்திங்கள் உத்திர நாளன்று வீடுபேறு அடைந்தார்.

## உமாபதி சிவாசாரியர் :

இவர் தில்லைப்பதியினர்; தில்லைவாழ் அந்தணர் என வழங்கப்பெறும் சைவ வேதிய மரபினர். கூத்தப்பெருமானுக்கு வழிபாடு செய்விக்கும் பேறு பெற்றவர். மெய்நூற் பொருளை நன்கு உணர்ந்தவர். இத்தகைய தகுதி காரணமாக இவர் சிவிகையில் ஊர்ந்து செல்லும் இயல்பினராய் இருந்தார். திருக்களாஞ் சேரியில் வாழ்ந்து வந்த மறைஞானசம்பந்தர் ஒருநாள் தில்லைத் திருவீதியில் இவர் சிவிகையில் வரக் கண்டார். அப்பொழுது 'பட்டமரத்தில் பகல் குருடு போகுது பார்' என அவர் கூறினர். அதுவே சிவிகையில் செல்லும் உமாபதி சிவத்திற்கு அருளுரையாயிற்று. சிவிகையினின்றும் இறங்கிய உமாபதி சிவம் மறைஞானசம்பந்தரை வணங்கி அவரிடம் உபதேசம் பெற்றார். தில்லை மூவாயிரவர் இச்செயல் தகுதியற்றது எனக் கருதித் தம் கூட்டத்திலிருந்து இவரை விலக்கி விட்டனர். உமாபதி சிவம் அதற்கு மனந்தளரவில்லை. நாடவர் பழித்துரை அவருக்குப் பூணதுவாயிற்று. தில்லைக்கு அருகிலுள்ள கொற்றவன் குடியில் திருமடம் அமைத்துக் கொண்டு அங்குச் சிவயோகத்தில் அமர்ந்திருந்தார். கூத்தப்

பெருமானை வழிபாடாற்றும் நான்வர இவர் திருக்கோயி லுக்குச் சென்றார். ஆயினும் அங்குள்ளோர் இவரைத் தடுத்து விட்டனர். இவருக்குரிய முறை நாளில் பிறிதொரு அந்தணர் வழிபாடாற்றச் செல்லப் பூசைப் பெட்டகத்தில் பெருமான் காணுதவராயினர். அனைவரும் கேட்க, 'நாம் உமாபதியின் பெட்டகத்தில் இருக்கின்றோம்' என்னும் வானொலி கேட்டது. அதன் மெய்ம்மை உணர்ந்த அந்தணர்கள் இவரை அழைத்து முன்போல் வழிபாடு செய்தருள வேண்டிக் கொண்டனர். இவரும் ஏற்றுச் செய்து வந்தார். கொற்றவன்குடித் திரு மடத்தில் அரிய நிகழ்ச்சியொன்று நடந்தது. பெற்றான் சாம்பான் என்பார் திருமடத்திற்கு நாளும் விறகு கொணரும் திருத்தொண்டைச்செய்துவந்தார். இவர்தாழ்ந்த வகுப்பினர். இவருக்குத் தீட்சையருள இறைவன், உமாபதி சிவத்திற்குத் திருமுகமொன்று அருளினன். அத்திருமுகத்தின்படி இவர் அவருக்கு வீடு பேறளித்தனர். பெற்றான் சாம்பான் என்பா ருடைய மனைவியார் இவ்வுண்மைஉணராது அரசரிடம்சென்று தம் குறையைக் கூற அரசனும் உமாபதி சிவத்திடம் வந்து 'நீர்பெற்றான் சாம்பானுக்கு வீடுபேறளித்தது வாய்மையாயின் என் முன் பிறிதொருவருக்கும் வீடுபேறளிப்பீர்' எனக் கூற இவரும் தாம்நாளும்வழிபட்டுவரும் சிவலிங்கத்திருமேனியின் திருமஞ்சன நீரால் வளர்ந்ததும், கோமுகியின் அருகே இருந்ததுமான முள்ளிச்செடி ஒன்றிற்குத் தம் அருள் நோக் கால் வீடுபேறளித்தார். அது கண்ட அரசனும் பெற்றான் சாம்பானின் மனைவியும், பிறரும் உண்மை யுணர்ந்து அவரை வழிபட்டுச் சென்றனர். பின் ஒருஞான்று தம் குருவாகிய மறைஞானசம்பந்தர் நெசவாளர் வீதி வழியே செல்கையில் அவர்கள் பாவிற்கு இடுதற்காக வைத்திருந்த கஞ்சியை வார்க்கக் கையேற்று உண்டார். உடன் வந்த உமாபதி சிவாசாரியர் தம் ஆசிரியர் கைவழி ஒழுகிய கஞ்சியைக் கையேற்று அருந்தினர். அதைக் கண்ட மறைஞானசம்பந்தர் அவருடைய பக்குவத்தை உணர்ந்து தமக்குப் பின் தம் ஞான பரம்பரையை வளர்க்குமாறு அவருக்குக் கட்டளையிட்டருளி

வீடுபேறடைந்தார். மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் ஏழு நூல்களை அருளியவர் இவர். இவையன்றித் திருமுறைத் திரட்டு, கோயிற் புராணம், திருமுறை கண்ட புராணம், திருத்தொண்டர் புராண சாரம், சேக்கிழார் புராணம், சிவஸ்தல சிவநாம சத்திநாமக்கலி வெண்பா, சதரத்ன சங்கிரகம், ஆகிய நூல்களையும், பௌஷ்கரபாஷ்யம் என்ற பேருரையையும் இவர் எழுதியுள்ளார்.

## மனவாசகங்கடந்தார் :

இவர் திருவதிகையில் தோன்றியவர். மெய்கண்டார் மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மருள் இவரும் ஒருவராவார். இவர் அருள் நந்தி சிவாசாரியரோடு ஒரு சாலை மாணாக்கராவர். இவரைப்பற்றிய வரலாறு வேறொன்றும் தெரிந்திலது.

## சீகாழி தத்துவநாதர் :

இவர் சீகாழிப்பதியினர். சீகாழிச் சிற்றம்பலநாடிகளின் மாணாக்கர். இவரே உண்மைநெறி விளக்கம் எனும் நூலை எழுதியவர் ஆவர். மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் இருபாஇருபஃதிற்கு உரையும் இவர் எழுதியுள்ளார்.

"எண்ணும் அருள்நூல் எளிதின் அறிவாருக்கு
உண்மை நெறிவிளக்கம் ஓதினான் — வண்ணமிலாத்
தண்காழித் தத்துவனார் தாளே புனைந்தருளும்
நண்பாய தத்துவ நாதன்"

"இருபா இருபது உரையெழுதி னோன்முன்
ஒருவா விகற்பம் உணர்ந்தோன் — அருள்உடம்பாம்
பண்புடைய சிற்றம் பலநாடி தாள்பணிவோன்
சண்பைநகர்த் தத்துவ நாதன்"

எனவரும் பழம் பாடல்களால் இவ்வுண்மை அறியப்படும் ஆயினும் உண்மைநெறி விளக்கம் உமாபதிசிவத்தால் அருளப் பெற்றது என்ற கருத்தே பழைய மரபு வழிக் கூறப்படுவ தாகும். உண்மைநெறி என்பதே நூற்பெயர் என்றும், அதனை அருளியவர் உமாபதிசிவம்என்றும், அதற்கு விளக்கந் தந்தவர் சீகாழித் தத்துவநாதரென்றும் 'எண்ணும் அருள்நூல்' எனத் தொடங்கும் பழம் பாடலில் வரும் உண்மைநெறிவிளக்கம் ஓதினான் என்பதற்கு இதுவே பொருளென்றும் கூறுவாரும் உளர். இப்பதிப்பில் பக்கம் 396 இல் இக்கருத்து கூறப் பெற்றுள்ளது. எனினும், திரு. எஸ். அனவரதவிநாயகம்பிள்ளை என்பார் இக்கருத்தை மறுத்து உண்மைநெறிவிளக்கம் எனும் நூல் சீகாழித் தத்துவநாதராலேயே பாடப்பெற்றதென விளக்கியுள்ளார். அவ்வாறு அவர் துணிதற்குக் கூறும் காரணம் மூன்றும். 1. சில ஏட்டுச் சுவடிகளில் உமாபதிசிவம் அருளிய நூல்களில் ஏழு நூல்களே இடம் பெற்றுள்ளன. இந்நூல் இல்லையென்பது. 2. உமாபதிசிவம் அருளிய சிவப் பிரகாசத்துள் கூறப்பெறும் தசகாரியத்திற்கும் இந்நூற்கண் உள்ள தசகாரியத்திற்கும்வேறுபாடுகாணப்படுவது. 3. சீகாழிச் சிற்றம்பலநாடிகள் செய்த துகளறு போதத்தின் கருத்து இந் நூற்கண் பெரிதும் அமைந்துள்ளது என்பது. இவர் கருத்தைத் திருச்சிற்றம்பலம் திரு. மு. அருணசலம் அவர்கள் ஏற்று வலியுறுத்தியுள்ளமை அவர்தம் நூலால் அறிய இயலுகின்றது. ஆதலின், உண்மைநெறிவிளக்கத்தின் ஆசிரியர் சீகாழித் தத்துவநாதரே எனத் தெளிய முடிகின்றது.

இவர்களின் காலத்தை அறுதியிடுதற்குத் திருவண்ணா மலைக் கல்வெட்டும், உமாபதிசிவம் அருளிய சங்கற்ப நிரா கரணமும் துணையாகின்றன.

## மெய்கண்ட நூல்களின் பொருளமைப்பு :

மெய்கண்ட நூல்கள் பதினான்கனையும் நான்கு வகையில் எண்ணலாம். 1. ஒன்றற்கொன்று விளக்கம் தந்து ஒத்தவகை

யில் அமைந்தவை. 2. வினுவகையிலும் வினுவிடை வகையி லும் அமைந்தவை, 3. மறுப்புவகையில் அமைந்தவை. 4. ஒவ்வொரு நோக்கில் அமைந்தவை.

1. ஒன்றற்கொன்று விளக்கம் தந்து ஒத்த வகையில் அமைந்தவை :—

இவ்வகையில் அமைந்த நூல்களை இரு திறனுகக் காணலாம். ஒன்று, திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் ஆகும். இரண்டு, சிவஞானபோதம், சிவஞானசித்தியார் — சுபக்கம், சிவப்பிரகாசம் என்பனவாகும்.

## 1. திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் :

இவ்விரு நூல்களும் மெய்கண்டார் காலத்துக்கு முன் தோன்றியவை. இவ்விரு நூற்பெயர்களின் முன்னும்பின்னும் திரு, ஆர், என்னும் சிறப்பு அடைமொழிகள் உள்ளன. திருக் கோவையாரும் இச்சிறப்புக்குரியதாகும், உபதேச பரம்பரை யில் வந்த இவ்விரு நூல்களும் ஒன்று ஒன்றற்கு விளக்கமாக அமைந்து நிற்கின்றது. 45 பாடல்களை உடைய திருவுந்தி யாரின் கருத்தைத் திருக்களிற்றுப்படியார் 100 வெண்பாக் களால் விளக்கி நிற்கின்றது.

## பொது நிலை :

சிவபெருமானே தவமுதிர்ச்சியால் பக்குவமடைந்த உயிர் களுக்குக் குருவாக எழுந்தருளி அருள்செய்வன். அத்தகைய திருவருளைப் பெற்றபின் உலகியல் வழிப்பட்ட பழக்கங்களி னின்றும் விடுத்துத் திருவருள் வழிப்பட்ட பழக்கமே பழக்க மாகக் கோடல்வேண்டும், திருவருளால் பெற்ற இன்பம் மாற்றம் மனங்கழியநின்றது. இவ்வாறு அவன் உயிர்களுக்குச் சுரக்கும் தண்ணளியை அவனருளால் உயிர்கள் பெறலாமே யன்றி உயிரின் முனைப்பால் பெறமுடியாது. இறைவனை

அடைதற்கு உரிய நெறிகளில் யோகநெறி என்பது ஒன்று. அது ஆதாரயோகம், நிராதார யோகம் என இருவகைப்படும். உடலில் உள்ள ஆறு ஆதாரங்களில் ஒன்றில் இறைவனின் திருவுருவை எழுந்தருளுவித்துக்கொண்டு அப்பரம்பொருளை வழிபட்டு வரும் ஞான முதிர்ச்சியால் ஒன்றுபடும் நிலை ஆதார யோகம் எனப்படும். காலத்தொடு கற்பனை கடந்த பரம் பொருளே எல்லாப்பொருள்களினூடும் தோய்ந்தும் தோய்வற நின்று விளங்குகிறது என நினைந்து அப்பொருளுடன் ஒன்று படல் நிராதார யோகம் எனப்படும். யோகத்தின் பயனாக உடம்பினுள் உயிர்ப்புக் காற்றும் நாத கலையும் கூடிச்சுழுமுனை வழியாக உச்சியிற் சென்று அருள் வெளியை அடையும். அவ் விடத்து நிலைபெறுவோர் வீடுபேறு அடைவர். அவ்வருள் வெளியே இறைவனுக்குரிய இடமாகும். இத்தகைய வீடு பேற்றை அடைதற்கு உரிய தகுதியும் உரிமையும் உடையது உயிர். இதனிடத்து ஆணவமாகிய கொடி படர்ந்தமையால் உடம்பாகிய பழம் பழுத்துவிட்டது. அப்பழம், பிறவிக்குப் பகையாகும். ஆதலின் அதன் வழி நுகர்வதை விடுத்துத் திருவருள் இன்பத்தை நுகரவும், அதற்குக் காரணமான வற்றைச் செய்யவும் தலைப்படல் வேண்டும். இக்கருத்துக்கள் இரு நூல்களினும் பொதுவாக விளக்கப்பட்டுள்ளன.

தனிநிலை :

திருவுந்தியார் :- உந்தீ பறத்தல் என்பது மகளிர் விளை யாட்டு வகைகளில் ஒன்றாகும். பண்டைக்காலத்தே சமயத் தோய்வுடைய மகளிர் விளையாடும் பொழுதும் இறையருளை நினைந்தே விளையாடினர். "வண்டல் பயில்வன வெல்லாம் வளர்மதியம் புனைந்த சடை, அண்டர்பிரான் திருவார்த்தை-அணைய வருவன பயின்று" எனவரும் திருத்தொண்டர் புராணத்தானும், திருவெம்பாவை, திருச்சாழல் முதலியவற்றா னும் இவ்வுண்மை அறியபெறும். மகளிர் பலரும் சேர்ந்து. காலில் உள்ள பெருவிரல்கள் ஒன்றையொன்று பொருந்தப்

பறவைகள் பறப்பதைப் போன்று கைகளை அசைத்து விளையாடும் விளையாட்டே உந்தீ பறத்தல் என்பதாகும். பெண்கள் விளையாடும் விளையாட்டு என்பதற்கேற்ப இந்நூலில் இரண்டாவது பாடல் 'உழப்புவது என்பெணே' எனவுள்ளது அறியத்தக்கது. இவ்வாறு விளையாடுகின்ற பொழுது உடலசைவு ஏற்படும். 'கொங்கை குலுங்க நின்று உந்தீபற', 'இளமுலை குலுங்க நின்று உந்தீபற' எனவரும் திருவாசகத் திருவுந்தியார்த் தொடர்கள் இவ்வுண்மையை விளக்கும். முதலிரண்டு அடிகளை ஒரு பெண் கூறுவாள். மூன்றாம் அடியைப் பிறிதொருபெண் கூறுவாள். உந்தீபற என்னும் சொல் ஏனைய சொற்றொடர்களோடு தொடர்பின்றிப் புறத்து உறுப்பாய் நிற்பதாகும். இவ்வகையில் அமைவதே இப் பாடல் முழுவதுமாகும். அரிய மெய்ப்பொருளை இவ்வினிய மகளிர் விளையாட்டின் மூலம் விளக்க முற்பட்டிருக்கும் ஆசிரியரின் திருவுள்ளம் எண்ணி மகிழ்தற்குரியது ஒன்றாகும். இவ்வாறன்றி உந்தீபற என்பதை உம்+தீ+பற எனப்பிரித்து உமது பழமையாகவே குற்றங்களை விளைவித்துவரும் மும்மலங் களையும் உடல், உலகு, கரணங்கள் ஆகியவற்றையும் உம்மிடம் விட்டு நீங்குமாறு இஞ்ஞான நூலின் கருத்தையே கருத்தாகக் கொண்டு நிற்பாயாக எனத் தத்துவ உரை காண்டலும் பொருந்துவதாகும்.

இந்நூற்கண் அறியப்படும் உண்மைகள் பல. அவற்றுள் ஓரிரு உண்மைகள் ஈண்டுக் குறித்தல்தகும். உயிர், உடல் முதலிய கருவி கரணங்களைப் பெறாது ஆணவத்தோடு கட்டுண்ட நிலையைத் தனிநிலை (கேவல நிலை) என்பர். உடல் முதலிய கருவிகளைப் பெற்று உலகில் வினைப்பயன்களை நுகரும் நிலையைக் கலப்பு நிலை (சகல நிலை) என்பர். வினை நீக்கம் பெற்று இறைவனின் அருட்பதிவால் உயிர் வீடுபேறடைந்து இன்புறும் நிலையைத் தூயநிலை (சுத்தநிலை) என்பர். முதலிரு நிலைகளையும் விடுத்து உயிர் மூன்றாம் நிலையைப் பெறுதற்கு உதவுபவரே குருமூர்த்தியாவர். இவர்தம் பெருமையை,

" மூலை இருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென்று உந்தீபற
தவத்தில் தலைவர் என்று உந்தீபற "

எனவரும் திருப்பாடலால் ஆசிரியர் விளக்குகிறார். உயிருடன் ஒன்றியிருக்கும் திருவருளை உணரச்செய்வதே தீக்கையின் பயனாகும். அவ்வாறு உணரப்பெற்றபின் அத்திருவருளோடு ஒன்றியிருத்தலே உயிர் உய்திபெறுதற்குரிய வழியாகும். இதனைக்

'' கிடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி
உடந்தை உடனே நின்று உந்தீபற
உன்னையே கண்டதென்று உந்தீபற ''

எனவரும்பாடல்விளக்குகின்றது. இறைவனுடைய திருவருளைப் பற்றிப் பாசத்தால் விளையும் உடல் முதலிவற்றைக் கைவிட்டவரே ஞானியராவர். இவரை 'வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர்' என இந்நூல் குறிக்கும். இறைவனைக் 'கள்ளர்' என்றும், 'எட்டுக்கொண்டார்' என்றும் இந்நூல் கூறியிருப்பது இறைவன் உயிர்க்குயிராகவும் உலகெலா மாகவும் நிற்கும் திறத்தைக் குறிக்கும்.

## ii. திருக்களிற்றுப்படியார் :

இதன் பெயர்க்காரணம் சுவையுடையது. ஆசிரியர் தாழ்ந்த இனத்தவர் என்பதால் இந்நூலைப் பலரும் ஏற்றுக் கொள்ள மறுத்தனர். 'மெய்ப்பொருள் காண்பதறிவு' என்ற வகையில் ஏற்றுக்கொண்டசிலர், இந்நூலைத் தில்லையில் கூத்தப்பெருமான் எழுந்தருளியுள்ள பஞ்சாட்சரப்படியில் எடுத்துச்சென்று வைத்தனர். அவ்வாறு வைத்த அளவில் அப்படியிலுள்ள கல்லானை தன் துதிக்கையால் எடுத்து மேற் படியில் கொண்டு அந்நூலை வைத்தது. இதனைக்கண்ட

பலரும் இந்நூலின் பெருமையை உணர்ந்தனர். இதனுல் இந்நூல் இப்பெயர்பெற்றது என்று கூறுவர்.

இந்நூலில் பல்வேறு அரிய குறிப்புக்கள் உள்ளன. குருவருள், குருவடிவின் இன்றியமையாமை, அடியவர் வரலாறு முதலியன இந்நூலில் மிக ஆழமாக எண்ணப் பட்டுள்ளன. கடல்நீரை நேரே பயன்படுத்துதற்கியலாது. மேகம் அந்நீரை முகந்து மழையாகப் பொழியின் அதனை நாம் அனைவரும் பயன்படுத்தலாம். அதைப்போன்றே மெய்ந் நூற்பொருளையும் நேரே உணர்தல் அருமை உடையதாகும். அதனை முன்னமேயே உணர்ந்து அனுபவப்பயனுகக் கொண் டிருக்கும் ஞானுசிரியனைக் கொண்டு உணரமுற்படின், எளிதிலும் இனிதிலும் உணரலாம் என இந்நூல் கூறுவது எண்ணற்குரியது. ஆவின் மலத்தைக் கொண்டு பிற மலங் களைப் போக்குதலைப் போன்றே, ஞானுசிரியனும் உருவத் திருமேனிகொண்டே பிற உயிரின் உருவங்களைப் (அஃதாவது பிறப்பினை) போக்குவன் எனக் கூறியிருக்கும் உண்மை தெளிவாக அனைவரும் புரிந்துகொள்வதற்குரியதாகும். சிவ தன்மத்தை வல்வினை, மெல்வினை என வகைப்படுத்தி விளக்கி யிருப்பது இந்நூற்குரிய சிறப்புக்களில் ஒன்ருகும். இவ்வாறே தாம் எடுத்துக்கொண்ட அரிய பல உண்மைகளை விளக்கு தற்கு அடியவர்களின் அருட்செயல்களை ஆங்காங்கு கூறி யிருப்பதும் இந்நூற்கே உள்ள தனிச்சிறப்பாகும். சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், மங்கையர்க்கரசியார், அரிவாட்டாயர், சிறுத்தொண்டர், சண்டேசுவரர், திருக் குறிப்புத்தொண்டர், ஏயர்கோன் கலிக்காமர், மூர்க்கர், மூர்த்தியார், கண்ணப்பர், சேந்தனுர் ஆகியோரின் அருட் செயல்களும், வரலாறுகளும் இவ்வகையில் இடம்பெற்றுள்ளன. அடியவர்களின் வரலாறுகளேயன்றி அவர்களின் அருள் மொழிகளும் இந்நூற்கண் பொன்னேபோல் போற்றப் பெற்றுள்ளன. ''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை'',

''ஈருய் முதலொன்ருய்'', சிவனென யானும் தேறினன் காண்க'' என்ற அருள்மொழிகள் இவ்வகையில் இடம் பெற்றுள்ளன. இவ்வாறே 'சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின்', 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' என்ற திருக்குறட்பாக்களும் கொண்டெடுத்து மொழியப்பெற்றுள்ளன.

## ஆ. சிவஞானபோதம், சிவஞானசித்தியார் — சுபக்கம், சிவப்பிரகாசம்:

திருவருள் சமயகுரவர்களைக்கொண்டு சைவ சமயத்தைப் பரவச்செய்ததைப் போன்றே, அதன் தலையாயதும் நிலையாயதுமாய ஒப்பற்ற கொள்கைகளையும் சந்தான குரவர்களைக் கொண்டு பரவச்செய்தது. அவ்வருள்வழிநின்று சமயக் கொள்கைகளை அளவைகளானும் பொருந்துமாற்ருனும் தெளிவாக எடுத்துக்கூறிய முதற்குரவர் மெய்கண்டாரே ஆவர். வேத ஆகமப்பொருள்களிலும் திருமுறைகளிலும் காணும் கருத்துக்கள் அனைத்தையும் அடிப்படையாகக் கொண்டு ஐயந்திரிபிற்கு இடனின்றி எடுத்துரைத்த முதல் நூலும் இதுவேயாகும். மிண்டிய மாயாவாதம் என்னும் சண்டமாருதம் சுழித்தடித்து ஆர்த்து மக்களை எங்கோ திசை திருப்பி அழைத்துச்செல்லும் சமயத்தில் ஞானக் கதிரவன் எனத் தோன்றி, மலைவுற்றிருந்த மக்களை மலைவறத் திருப்பிய பெருமை மெய்கண்டாருக்கே உரியதாகும். 'பொய்கண்டார் காணுப் புனிதமெனும் அத்துவித மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ?' எனப் பின்வந்த அருளாளராய தாயுமானர் உளங்கொண்டு போற்றுவது இத்திருப்புமையத்தை நினைவுகூரக் கூடியதே ஆகும். சைவசித்தாந்தச் சாத்திரத் திருமரபு மெய்கண்டாரையே முதன்மையாகக் கொண்டுவளர்ந்துவருகின்றது. இதன்வழிநூலாகத்திகழ்வதே சிவஞான சித்தியாராகும். 'மெய்கண்டான் நூல் சென்னியில்

கொண்டுசைவத்திறத்தினைத்தெரிக்கலுற்ரும்,' என அருணந்தி சிவாசாரியார் கூறுவது தம் வழிநூல் அமைப்பைக் குறிப்ப தாகும். இந்நூல் சிவஞானபோதக் கருத்தை முழுமையாகத் தழுவிச் செய்யப்பெற்றதாகும் 'சிவத்திற்குமேல் தெய்வமில்லை சித்திக்குமேல் நூலில்லை' என வரும் பழமொழியானும், 'பார் விரித்த நூலெல்லாம் பார்த்தறியின் சித்தியிலே ஓர் விருத்தப் பாதி போதும்' என வரும் குருஞானசம்பந்தர் திருவாக்கானும், 'வள்ளுவர் நூல் அன்பர் மொழி வாசகமே' என வரும் பழம் பாடலானும் இந்நூலின் பெருமை விளங்கும்.

இந்நூல் இருபிரிவுடையது. ஒன்று சுபக்கம்; பிறிதொன்று பரபக்கம் என்பது. பரபக்கம் என்ற பகுதியில் கூறப்பெறும் கருத்துக்கள், மறுப்பு வகையில் அமைந்த நூல்கள் என்ற பகுதியில் விளக்கப்பெறும். சுபக்கம் என்பது தமது கொள்கை ஒன்றையுமே எடுத்துக்கொண்டு ஆராய்வதாகும். சிவப் பிரகாசம் என்பது இவ்விரு நூல்களையும் தழுவி எழுந்ததொன்ரு கும். 'இதனைத்தெரித்த குருமுதல்வர்' எனத்தொடங்கும் அவர் திருவாக்கினுல் உணரலாம். இவ்விரு நூல்களையும் தழுவிச் செய்யப்பட்டதேனும் இந்நூலின் அமைப்புமுறை அவற்றினும் ஒருவாற்ருன் தனித்தன்மை பெற்றதே ஆகும். ஆதலின் இதனைச் சார்பு நூல் என்பர். சிவஞானபோதமும் சிவஞான சித்தியாரும் பொது, உண்மை என இரு அதிகாரங்களாகப் பிரித்துக் கொண்டதைப் போலவே, இந்நூலும் பிரித்துக் கொள்கிறது. எனினும் அந்நூல்கள் பிரமாணஇயல், உண்மை இயல், சாதன இயல், பயனியல் எனப் பிரித்துக்கொண்டு பேசியதைப்போன்று இந்நூலில் பேசப்பெறவில்லை. எனினும் முப்பொருள் உண்மைபற்றிக் கூறிய கருத்துக்கள் முழுமையும் ஒத்தவை.

ஆதலின் இம்மூன்று நூல்களினும் பொதுவாகவும் ஒத்ததாகவும் கூறப்பெறும் முப்பொருள் உண்மையைக் கீழ்க் கண்டவாறு சுருக்கிக் காணலாம்.

## இறை (பதி) :

உலகம் தோன்றி நின்று அழியுந் தன்மையது. அது இவ்வாறு தோன்றி நின்றழியினும் அதில் ஒரு நெறிமுறை அமைந்துள்ளது. ஆதலின் அது ஒருவனால் தோற்றுவிக்கப் பெற்றிருத்தல் வேண்டும். அவ்வொருவனே அழித்தற் கடவுளாய சிவபெருமானாவன். அவன் அரு, உரு, அருவுரு ஆகிய மூவகைத் திருமேனிகளையும் கொண்டு உயிர்களை ஆட்கொள்வன். அவனது பேராற்றலே சத்தி எனப்பெறும். அது விருப்பு (இச்சை), அறிவு (ஞானம்), செயல் (கிரியை) ஆகிய முத்திறப்படும். இறைவன் அவற்றின் மூலம் உயிர் களைத் தொழிற்படச் செய்வன். இறைவன் உயிர்களைக் காத்தற்காக ஐந்தொழில்களையும் ஐவரைக் கொண்டு நிகழ்த்துவன். அவ்வைந்தொழில்களாலும் உயிர்கள் பக்குவ மடைந்து வீடுபெறும். இதனால் இத்தொழில்களை அவன் செய்விப்பது தன்பொருட்டன்று; உயிர்களின் பொருட்டே என்பதும் விளங்கும். அயன்முதலிய ஐவராலும் அத்தொழில் களை அவன் செய்தலின் அவற்றால் தான் வேறுபடுதல் இலன். இறைவன் உயிர்களிடத்து ஒன்றாயும், வேறாயும், உடனாயும் இருந்து உதவுவன். உயிர்களுக்கு இறைவன் அறக்கருணை கொண்டும் மறக்கருணை கொண்டும் இன்பத் துன்பங்களை நுகர்விப்பன். மறக்கருணை என்பது மருத்துவன் அறுவை சிகிச்சை செய்வது போலவும், பெற்றோர் தம் இன்புதல்வரைத் திருத்த ஒறுப்பது போலவும் ஆகும். அவன் அருளின்றி உயிர்கள் உணரவோ உய்யவோ வழியில்லை.

## உயிர் (பசு) :-

உயிர்கள் எண்ணிலாதன; அழிவற்றன; ஆணவத் தோடு பிணிப்புற்று நிற்பதால் அறியாமை உடையனவாய் விளங்குகின்றன. இம்மல வேறுபாட்டால் உயிர்களைமூவகைப் படுத்தலாம். ஆணவமலம் மட்டும் உடையவரை விஞ்ஞான கலர் என்பர். ஆணவம், கன்மம் ஆகிய இரு மலமும் உடைய

வரைப் பிரளயாகலர் என்பர். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் உடையவரைச் சகலர் என்பர். இவருள் முன்னவர்க்கு இறைவனே உள்நின்று அருள்வன். இரண்டாமவர்க்கு நாற்றோளும் முக்கண்ணும் மானும் மழுவும் கொண்டு தெய்வவடிவில் எழுந்தருளி வந்து வீடுபேறு அளிப்பன், மும்மலமுடையார்க்கு மானுடவடிவம் தாங்கிக் குருவாகவந்து அருள்பாலிப்பன். உயிர்ஆணவத்தால்செய்யும் இருவினைகளின் தன்மைக்கேற்ப இறைவன் உடல் நல்குவன். அவற்றின் வாயிலாக அவைநுகருங்கால் மேலைக்கு வித்தாகிய இருவினைகளைப் புரிந்து பிறப்புப், பிணி, மூப்பு, இறப்பு ஆகிய வற்றைப் பெற்றுக் காற்றாடி போலவும், சுழலும் வண்டிச் சக்கரம் போலவும் பல பிறவிகள் எடுத்துத் திரியும். அப் பிறப்புக்கள் நால்வகைத் தோற்றத்தன. அவை முட்டையில் தோன்றுவனவும்,வியர்வையில்தோன்றுவனவும், வித்து, வேர் முதலியவற்றில் தோன்றுவனவும், கருப்பையில் தோன்று வனவுமாம். இந்நால்வகைத் தோற்றத்தினுள்ளும் உயிரினங் கள் எழுவகைப் பிறப்பினை எடுக்கும். அவையாவன 1. தாவரம் 2. ஊர்வன, 3. நீர்வாழ்வன 4. விலங்கு 5. பறவை 6. மனிதர் 7. தேவர் என்பன. இவை 84 நூறாயிரம் பிறப்பு வேற்றுமை யுடையன. தாவரம் 19நூறாயிரம் பிறப்பு வேற்றுமையுடையன. ஊர்வன 15 நூறாயிரப் பிறப்பு வேற்றுமை உடையன. நீர் வாழ்வன, பறவை, விலங்கு ஆகியன ஒவ்வொன்றும் 10 நூறாயிரம் பிறப்பு வேற்றுமையுடையன. மனிதர் 9 நூறாயிரம் பிறப்பு வேற்றுமையுடையர். தேவர் 11 நூறாயிரம் பிறப்பு வேற்றுமையுடையர். 'உரை சேரும் எண்பத்து நான்கு நூறா யிரமாம் யோனி பேதம்' என்னும் ஞானசம்பந்தர் திருவாக்கு இவ்வுண்மையை உணர்த்தும்.

## தளை (பாசம்) :

நெல்லினிடத்து உமியும், செம்பினிடத்துக் களிம்பும் தொன்றுதொட்டே உளவாதல்போல உயிரினிடத்தும்ஆணவ மலம் தொன்றுதொட்டே இருந்துவருகிறது. இவ்வாணவம்

இருளினும் கொடியது. இருள் பிற பொருளைக் காட்டாதாயி னும் தன்னையேனும் காட்டும். இது தன்னையும் காட்டாது ஆதலின் அதனினும் கொடியதாம். இவ்வாணவ மலத் தால்தான் உயிர் அறியாமையைப் பெறுகிறது. அதனால் துன்பமும் அடைகின்றது. இதனை நீக்கவே இறைவன் உடல் முதலிய கருவி கரணங்களைத் தருகின்றான். இவற்றை இறைவன் மாயையினின்றும் தோற்றுவிக்கின்றான். இவற்றை இறைவன் தருவது உயிரை மேலும் மயக்குதற்கன்று; விடியு மளவும் விளக்கினைக் கொள்வது போல, வினை தீங்குமளவும் இவற்றைக் கொள்ளவேயாம். இதனை மாயா மலம் என்பர்.

இவ்வாறு உயிர் உடலொடுகூடி வாழுங்கால் முன்செய்த வினைக்கீடானவற்றை நுகர்வதோடு மேலும் சில நல்வினை தீவினைகளையும் செய்து விடுகின்றன. அவற்றால் மேலும்மேலும் பிறவியில் கட்டுண்ணும் நிலை உயிர்க்கு ஏற்படுகின்றது. இவ் வாறு வரும் நல்வினை தீவினைகளையே கன்மம் என்பர். இவ் வினைப்பயனை இறைவன் ஒரேபிறவியில்நுகரவைப்பதுமுண்டு. அடுத்துவரும் பிறவிகளில் நுகரவைப்பதுமுண்டு. உயிர்களால் அளவின்றி ஈட்டப்பெற்ற வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் நுகர்ந்தனவும், பிறந்த உடம்புகளான் முகந்து நின்றனவும் ஒழியப்பின்னும் நுகர்தற்குரியனவாய்க் கிடக்கும் வினைகளைப் பழவினை (சஞ்சிதம்) என்பர். பிறந்த உடம்பால் முகந்து நின்றவற்றை நுகர்வினை (பிராரத்துவம்) என்பர். நுகர்ந்து வரும்பொழுது மேலும் ஈட்டப்பெறும் வினைகளை ஏறும் வினை (ஆகாமியம்) என்பர். இவற்றுள் பழவினை குருவின் அருள்நோக்கத்தால் நீங்கும். வருவினை குருவருள் வழிநின்று முனைப்பின்றிச் செய்யப்படும் சிவ புண்ணியத்தால் வாராது ஒழியும். எனவே பிறந்த உடம்பால் முகந்து நின்ற வினை ஒன்றே நுகர்ந்து ஒழிப்பதற்குரியதாகும். இறையருள் வழிநின்று 'உலகினில் என்செயலெல்லாம் உன்விதியே! நீயே உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும், நிலவுவதோர் செயல் எனக்கு இன்று உன் செயலே

என்றும் நினைந்தும் வாழ்ந்தும் வரின் இவ்வினைப் பயனாலும் துன்புறாது வாழலாம். இம்மூவகை மலங்களோடு மறைப் பாற்றல் (திரோத மலம்), மாயேயம் என்ற இரண்டையும் கூட்டிப் பஞ்சமலம் என்றலும் உண்டு. இறைவனிடமாகத் தோன்றும் இம்மறைப்பாற்றல் உயிர் வினைப் பயனை நுகர்ந்து தீர்க்குமளவும் உண்மையை உணரவொட்டாமல் மறைக்கும். அவ்வாறு செய்வது உயிர் வினையினின்றும் நீங்குதற்காகவேயாகும். எனினும் வினைப்பயனை நுகருமளவும் உண்மை உணராது மறைத்தல்பற்றி இவ்வருட் சத்தியையும் மலமென்பர். இதுவே மறைப்பாற்றலாம் (திரோதான சத்தி யாம்). உயிர்மலநீக்கம் பெறும் அளவும் மறைத்துநின்ற இம் மறைப்பாற்றலே, அம்மலம் நீங்கிய வழி இறைவனிடத்துச் சேர்த்தற்கும் அருள்செய்வதாகும். எனவே, ஒரு கால எல்லை யில் மலம் எனப் பெயர் பெற்றது பின் அருள்சுரக்கும் தாயாக நின்றருளும். இறைவன் நேரே ஐந்தொழில் நடத்துதற்கு இடனாக இருக்கும் மூலப்பொருளைச் சுத்தமாயை என்பர், அப்பெருமான் உயிர்வினை மாசு நீங்குதற்கு உதவும் காலம், நியதி, கலை, வித்தை, அராகம், மாயை ஆகியவற்றைக் கூட்டுதற்கு உரிய நிலைக்களன் அசுத்தமாயை எனப்படும். இவற்றோடு கூட்டுவிக்கப்பட்ட உயிர் புருடன் எனப்பெறும். இப்புருடனுக்கு வினைவழிப்பெற்ற இன்ப துன்பங்களை இயைந்து அனுபவித்தற்குரிய உடல், கருவி, உலகு, நுகர்வு ஆகியவற்றைப் பெற்று அவற்றான் அவ்வினையைத் தொலைத் தற்குரிய நிலைக்களன் பிரகிருதிமாயை எனப்படும். மாயையின் விளைவாகத் தொன்றிய இவ்வுடல் கருவி முதலியனவே மாயேயம் என்ப்படும். இவை உயிர் ஆணவக்கட்டினின்றும் நீங்குதற்கு உதவி செயயினும் தம்வழிப்பட்ட உயிரை மயக்கவும் செய்தலின் இவற்றையும் மலம் என்றனர். 'மையல் மானுடமாய் மயங்கும் வழி ஐயனே தடுத்தாண்டு அருள் செய்க' எனவரும் சேக்கிழார் வாக்கும் இவ்வுண் மையை விளக்கும்.

இருளினும் கொடியது. இருள் பிற பொருளைக் காட்டாதாயி னும் தன்னையேனும் காட்டும். இது தன்னையும் காட்டாது ஆதலின் அதனினும் கொடியதாம். இவ்வாணவ மலத் தால்தான் உயிர் அறியாமையைப் பெறுகிறது. அதனால் துன்பமும் அடைகின்றது. இதனை நீக்கவே இறைவன் உடல் முதலிய கருவி கரணங்களைத் தருகின்றான். இவற்றை இறைவன் மாயையினின்றும் தோற்றுவிக்கின்றான். இவற்றை இறைவன் தருவது உயிரை மேலும் மயக்குதற்கன்று; விடியு மளவும் விளக்கினைக் கொள்வது போல, வினை தீங்குமளவும் இவற்றைக் கொள்ளவேயாம். இதனை மாயா மலம் என்பர்.

இவ்வாறு உயிர் உடலொடு கூடி வாழுங்கால் முன்செய்த வினைக்கீடானவற்றை நுகர்வதோடு மேலும் சில நல்வினை தீவினைகளையும் செய்து விடுகின்றன. அவற்றால் மேலும்மேலும் பிறவியில் கட்டுண்ணும் நிலை உயிர்க்கு ஏற்படுகின்றது. இவ் வாறு வரும் நல்வினை தீவினைகளையே கன்மம் என்பர். இவ் வினைப்பயனை இறைவன் ஒரேபிறவியில்நுகரவைப்பதுமுண்டு. அடுத்துவரும் பிறவிகளில் நுகரவைப்பதுமுண்டு. உயிர்களால் அளவின்றி ஈட்டப்பெற்ற வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் நுகர்ந்தனவும், பிறந்த உடம்புகளான் முகந்து நின்றனவும் ஒழியப்பின்னும் நுகர்தற்குரியனவாய்க் கிடக்கும் வினைகளைப் பழவினை (சஞ்சிதம்) என்பர். பிறந்த உடம்பால் முதந்து நின்றவற்றை நுகர்வினை (பிராரத்துவம்) என்பர். நுகர்ந்து வரும்பொழுது மேலும் ஈட்டப்பெறும் வினைகளை ஏறும் வினை (ஆகாமியம்) என்பர். இவற்றுள் பழவினை குருவின் அருள்நோக்கத்தால் நீங்கும். வருவினை குருவருள் வழிநின்று முனைப்பின்றிச் செய்யப்படும் சிவ புண்ணியத்தால் வாராது ஒழியும். எனவே பிறந்த உம்பால் முகந்து நின்ற வினை ஒன்றே நுகர்ந்து ஒழிப்பதற்குரியதாகும். இறையருள் வழிநின்று 'உலகினில் என்செயலெல்லாம் உன்விதியே! நீயே உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும், நிலவுவதோர் செயல் எனக்கு இன்று உன் செயலே

என்றும் நினைந்தும் வாழ்ந்தும் வரின் இவ்வினைப் பயனாலும் துன்புறாது வாழலாம். இம்மூவகை மலங்களோடு மறைப் பாற்றல் (திரோத மலம்), மாயேயம் என்ற இரண்டையும் கூட்டிப் பஞ்சமலம் என்றலும் உண்டு. இறைவனிடமாகத் தோன்றும் இம்மறைப்பாற்றல் உயிர் வினைப் பயனை நுகர்ந்து தீர்க்குமளவும் உண்மையை உணரவொட்டாமல் மறைக்கும். அவ்வாறு செய்வது உயிர் வினையினின்றும் நீங்குதற்காகவேயாகும். எனினும் வினைப்பயனை நுகருமளவும் உண்மை உணராது மறைத்தல்பற்றி இவ்வருட் சத்தியையும் மலமென்பர். இதுவே மறைப்பாற்றலாம் (திரோதான சத்தி யாம்). உயிர்மலநீக்கம் பெறும் அளவும் மறைத்துநின்ற இம் மறைப்பாற்றலே, அம்மலம் நீங்கிய வழி இறைவனிடத்துச் சேர்த்தற்கும் அருள்செய்வதாகும். எனவே, ஒரு கால எல்லை யில் மலம் எனப் பெயர் பெற்றது பின் அருள்சுரக்கும் தாயாக நின்றருளும். இறைவன் நேரே ஐந்தொழில் நடத்துதற்கு இடனாக இருக்கும் மூலப்பொருளைச் சுத்தமாயை என்பர், அப்பெருமான் உயிர்வினை மாசு நீங்குதற்கு உதவும் காலம், நியதி, கலை, வித்தை, அராகம், மாயை ஆகியவற்றைக் கூட்டுதற்கு உரிய நிலைக்களன் அசுத்தமாயை எனப்படும். இவற்றோடு கூட்டுவிக்கப்பட்ட உயிர் புருடன் எனப்பெறும். இப்புருடனுக்கு வினைவழிப்பெற்ற இன்ப துன்பங்களை இயைந்து அனுபவித்தற்குரிய உடல், கருவி, உலகு, நுகர்வு ஆகியவற்றைப் பெற்று அவற்றான் அவ்வினையைத் தொலைத் தற்குரிய நிலைக்களன் பிரகிருதிமாயை எனப்படும். மாயையின் விளைவாகத் தொன்றிய இவ்வுடல் கருவி முதலியனவே மாயேயம் என்ப்படும். இவை உயிர் ஆணவக்கட்டினின்றும் நீங்குதற்கு உதவி செய்யினும் தம்வழிப்பட்ட உயிரை மயக்கவும் செய்தலின் இவற்றையும் மலம் என்றனர். 'மையல் மானுடமாய் மயங்கும் வழி ஐயனே தடுத்தாண்டு அருள் செய்க' எனவரும் சேக்கிழார் வாக்கும் இவ்வுண் மையை விளக்கும்.

## தனிநிலை :

### i. சிவஞானபோதம் :

பன்னிரு நூற்பாக்களை உடையது. 40 வரிகளைக் கொண்டது. தொடக்கத்தில் பொல்லாப் பிள்ளையாருக்கு வணக்கம் கூறப் பெற்றுள்ளது. வாழ்த்து, வணக்கம், வரு பொருள் உரைத்தல் ஆகிய மூன்றற்கும் பொருந்த இவ் வணக்கம் அமைந்திருப்பது போற்றற்குரியது. பின்வரும் நூற்பாக்களைப் போலவே இவ்வணக்கமும் சுருங்கிய சொல்லால் விரித்துப் பொருள் விளக்கும் பெற்றியது. அடுத்துள்ள அவையடக்கப் பாடலும் தனிச் சிறப்புடையது. தம்மையும் தம் தலைவனையும் உணர்ந்தவர்களுக்குரிய சிறப்பையும், அவ்வாறு உணராதவர்களுக்கு உரிய சிறப்பின்மையையும் இப்பாடல் எடுத்துரைக்கின்றது. இறை, தளை, உயிர் ஆகிய மூன்றும் உள்பொருளே என்பதை முதல் மூன்று நூற்பாக்களும் நிறுவுகின்றன. ஆதலின் இவற்றைப் பிரமாண இயல் என்பர். அடுத்துள்ள மூன்று நூற்பாக்களும் இவற்றின் இலக்கணங்களை விரித்துரைப்பன. ஆதலின் அவற்றை இலக்கண இயல் என்பர். இம்முப் பொருள்களில் உயிர் இறையருள்வழிநின்று ஏனைய இரண்டையும் உணர்தற் குரியது. ஆதலின் அவ்வுயிர் தவத்தால் குருவருளைப் பெற்று உய்திபெற வேண்டுமென்பதை அடுத்துள்ள மூன்று நூற் பாக்களும் கூறுகின்றன. ஆதலின் அவற்றைச் சாதன இயல் என்பர். அச்சாதனத்தால் உயிர் பாச நீக்கமும் சிவப்பேறும் பெற்று அச்சிவப் பேற்றினின்றும் வழுவாது இருத்தற்குரிய அருமையும் பெற்று வாழும், வாழவேண்டும் என்பதை அடுத்துள்ள மூன்று நூற்பாக்களும் கூறுகின்றன. ஆதலின் அவற்றைப் பயனியல் என்பர். தாம் எடுத்துக்கொண்ட கருத்துக்களை ஏதுக்களானும் எடுத்தமொழியானும் ஆராய்ந்து உணர்தற்கு ஏதுவாக முப்பத்தொன்பது அதிகரணங்களையும், எண்பத்தொரு வெண்பாக்களையும் ஆசிரியர் அருளியுள்ளார்.

நூற்பாக்களும் வெண்பாக்களும் சுவையுடையன. 'அமைச்சு அரசு ஏய்ப்ப, 'விளங்கிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு அளந்தறிந்து அறியா ஆங்கவை போல, 'உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவ,' 'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்' எனவரும் உவமைகள் மிக எளிமையும் இனிமையும் உடையன. இவை நூற்பாக்களில் உள்ளன. இவை போன்றே 'பண்ணையும் ஓசையும்போலப் பழமதுவும் எண்ணும் சுவையும் போல்,' அரக்கொடு சேர்த்தியணைத்த அக்கற்போல்', 'பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்கும்' என்பன போன்ற உவமைகள் வெண்பாக்களிலும், 'ஊசல் கயிறற்றால் தாய் தரையேயாந்துணையான்' 'வேப்பு தின்ற புழுப்போல' என்பன போன்ற உவமைகள் அதிகரணங்களிலும இருந்து அணி செய்கின்றன. தத்துவக் கூறுகளை இத்தகைய உவமைகளின் மூலம் விளக்கும் ஆசிரியரின் அருளுள்ளம் அறிதற்குரியது. 'ஐம்புல வேடர்,' 'தண்ணிழலாம்பதி' எனவரும் உருவகங்கள் மிகவும் நுட்பம் வாய்ந்தன.

## ii. சிவஞான சித்தியார் - சுபக்கம் :

சிவஞான போதத்தின் விரிவுரையே இப்பகுதியாகும். விருத்தப்பாவால் ஆய 328 பாக்களையுடையது. இப் பகுதிக்கு முன்னர் இரு தலைப்புக்கள் உள்ளன. ஒன்று பாயிரம்; பிறிதொன்று அளவையியல் என்பது. பாயிரம் ஆறு பாடல்களையுடையது. 'என்னை இப்பவத்தில் சேரா வகையெடுத்து' எனத் தொடங்கும் பாடல் இந்நூலாசிரியர் தம் குருமூர்த்தியாய மெய்கண்டாரிடத்துக்கொண்ட பேரன்பின் ஆழத்தைஉணர்த்துவதாகும். கண்டநூல்ஓதிவீடுகாதலிக்கும் நம்மவர்க்கே இத்தகைய ஞானநூல்கள் தேவைஎனஒருபாடல் கூறுகின்றது. இதனால் ஞானசம்பந்தர், கண்ணப்பர்போன்ற அருளாளர்கள் எத்தகைய மெய்ந்நூல்களைக் கற்று வீடுபேறு பெற்றார்கள் என வினவுவார்க்கு விடையும் கிடைத்து விடுகின்றது. அடுத்துள்ள அளவையியல் பதினான்கு பாடல்களை

யுடையது. ஒரு பொருளை உண்டென்று தெளிவதற்குத் துணையாயினவற்றை அளவை என்பர். அவை காண்டல், கருதல், உரைமுதலாகப்பலவகைப்படும். சைவசித்தாந்தத்துள் கூறப்பெறும்முப்பொருள்களும் உண்டென உணர்தற்கும்தெளி தற்கும் இவை கருவியாய் இருத்தலின் ஆசிரியர் இவற்றைக் கூறுவாராயினர். அடுத்துள்ள பகுதியே சுபக்கம் என்பதாகும் ஒரு வழி நூல் முதல்நூற்கருத்துக்களை எவ்வெவ்வாறுமுகந்து நின்று விளக்கம் தரவேண்டும் என்பதற்கு இலக்கணமாக அமைந்தது இப்பகுதியாகும். சிவஞானபோத விளக்கவுரை யாகவும், சுவை ததும்பும் ஓர் இல்க்கியமாகவும் இப்பகுதி விளங்குகின்றது. பல பாடல்கள் படிப்போரை ஆழ நினையச் செய்து இறைவனிடத்து ஆற்றுப்படுத்தும் தகையன. இறைவன் உருமேனி தரித்துக் கொண்டு உய்விப்பதை விளக்கும் பகுதியும், அவையெல்லாம், 'நந்தம் கருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவுகாணே' எனக் கூறும்பகுதியும், 'அண்டசம் சுவேதசங்கள்', 'நரர்பயில் தேயந்தன்னில்', 'வாழ்வெனும் மையல் விட்டு', 'மானுடப் பிறவிதானும்', 'கருவினுள் அழிவதாயும்', 'அரிசனம் பூசிமாலை', 'பிணத்தினை ஒத்து வாழ்வோர்' என்றற்றொடக்கத்தனவாய முதற்குறிப் புடைய பாடல்கள் பலவும் இவ்வுண்மையை விளக்கும். 'வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்தனை அர்ச்சிப்பர், ஊனெடுத்து உழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ' என்பது போன்றபகுதிகள் ஆசிரியரின் கழிவிரக்க மீதூர்வைக் காட்டுவனவாகும். உயிர் கருவிகளோடு கூடி ஐந்தவத்தைப் படுமாற்றிற்கு, 'அமைச்சு அரசு ஏய்ப்ப' என முதல் நூலில் கூறியிருக்கும் உவமையை, இவர், 'படை கொடு பவனி போதும்' எனத் தொடங்கும் திருப்பாடலில் விளக்கியிருக்கும் திறன் பன்முறையும் எண்ணி மகிழ்தற்குரியது. இதைப் போன்றே 'ஐம்புலவேடரின் அயர்ந்தனை வளர்ந்தென' என முதல்நூற்கண் உள்ள எட்டாம்நூற்பாவை, இவர் 'மன்னவன் தன் மகன் 'எனத் தொடங்கும் திருப்பாடலால் விளக்கியிருக் கும் திறமும் எண்ணி மகிழ்தற்குரிய தொன்றாகும்.

## iii. சிவப்பிரகாசம் :

இந்நூல் 100 பாடல்களையுடையது. பொது இயல்பு, உண்மை இயல்பு என இரு பிரிவுகளை உடையது. நூலின் தொடக்கத்தே பாயிரம் என்ற பகுதியுள்ளது. இதன்கண் காப்பும், கூத்தப்பெருமான், உமையம்மை, விநாயகர், முருகர் ஆகியோருக்கு வணக்கமும் கூறப்பெற்றுள்ளன. அடுத்துத் தமக்கு முன்னிருந்த ஸ்ரீ கண்டர், நந்தியம் பெருமான், சனற்குமாரர், சத்திய ஞான தரிசினிகள், பரஞ் சோதி முனிவர், மெய்கண்டார், அருணந்திசிவம், மறைஞான சம்பந்தர் ஆகிய அகப்புறச் சந்தான குரு முதல்வர்களுக்கும், அடுத்துத் தமக்கு நேர் முக ஆசிரியரான மறைஞான சம்பந்தருக்கும் வணக்கம் கூறுகின்றார் ஆசிரியர். இவ்வாறு வணக்கம் கூறப்பெற்றுள்ள முறை இந்நூற்கே அமைந்த சிறப்பாகும். நுவலும் பொருள் கூறுங்கால் சைவ சித்தாந்தச் சிறப்பு, விளக்கப் பெற்றுள்ளது. இதனையடுத்துத் தீட்சையின் வகைகளும் அதன் பயன்களும் கூறப்பெற்றுள்ளன. நூல் வழியும், நூற் பெயரும், கூறும் முறையும், அவையடக்கம் கூறும் முறையும் இந்நூற்கு அமைந்த தனிச்சிறப்பினை விளக்குவதாகும். நூல் வழியில் சிவஞானபோதம், சிவஞான சித்தியார் ஆகிய இரு நூற் கருத்துக்களையும் அடிப்படை யாகக் கொண்டு அவற்றுடன் ஆகமங்களின் கருத்துக்களை யும் ஏற்று இந்நூலைச் செய்வதாக ஆசிரியர் கூறியுள்ளார். அவையடக்கத்துள் எத்தகைய பொருள் உண்மையும், தொன்மை எனக்கருதி நன்றென்றலும், இன்று தோன்றியது என்பதால் தீதென்றலும் தவறு என்னும் உண்மை மிக அழகா கக் கூறப்பெற்றுள்ளது. நூலுண்மைதேறுவாரைத் தலை, இடை, கடையெனப் பிரித்துத் தலையாயார் சொற்குற்றம் முதலியன உளவாயினும் பொருள் நயங்கருதி ஏற்பர் என்றும் இடையயார் பழமை யழகு, புதுமை ஆகியவற்றைக் காணின் அவற்றை ஏற்று மகிழ்வர் என்றும், கடையாயார் தமக்கென அறிவிலராதலின் பிறர் புகழின் புகழ்ந்தும் பிறர் இகழின்

இகழ்ந்தும் வருவாரென்றும் கூறியிருப்பது எண்ணி மகிழ்தற்குரிய தொன்றாகும். பொது இயலில் இம் முப்பொருள் உண்மைபற்றிய விளக்கம் உள்ளது. உண்மை இயல்பு கூறத் தொடங்குங்கால் இன்ன இன்ன பொருள்களைக் கூறுவன் என நுதலிப் புகுகின்றார் ஆசிரியர். உண்மையியலில் உயிரியல்பு, அது ஐந்தவத்தைப் படுமாறு, உயிர்தானுக யாதொன்றையும் அறியாமை, அத்தகைய உயிர்க்கு இறைவன் உணர்த்தும் முறைமை, சிவஞானத்தின் உண்மை, அதன் பயன், திருவைந்தெழுத்தின் இயல்பு, அணைந்தோர் தன்மை ஆகியவை விரித்துரைக்கப் பெறுகின்றன. நூலின் இறுதியில் நூற்கருத்தும் கேட்டற்குரியார் யாவர் என்பதும் கூறப் பெற்றுள்ளன. உண்மையை உணர வேண்டுமென்னும் வேட்கையும் தகுதியும் உடையவர்க்குத் தீக்கையளித்து இந் நூலைக் கற்பிக்குமாறு ஆசிரியர் கூறியிருப்பது இந்நூற் பெருமையையும், சைவசித்தாந்தம் பயிற்று முறைமையையும் விளக்குவதாகும். சிவஞானபோதம் (மெய்யுணர்தல்) மிகின் சிவஞானம் சித்திக்கும். அது சித்திக்கவே உயிரிடத்துச் சிவம் பிரகாசிக்கும். இம்மூன்று நூல்களும் தம் பெயரானே இவ் வுண்மையைப் புலப்படுத்தி நிற்றலும் ஈண்டு அறியத்தக்க தாகும்.

## 2. வினு விடை வகையிலும் வினு வகையிலும் அமைந்தன :

### அ. வினு விடை வகையில் அமைந்தது – உண்மைவிளக்கம் :

தம் கருத்தைப் பிறருக்கு உணர்த்த எத்துணையோ முறைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று வினுவிடை வகையில் தம் கருத்துக்களைத் தருவதாகும். பல வினுக்களைத் தாமே எழுப்பி அவற்றிற்குரிய விடைகளையும் கூறும் முறையில் அமைந்தது இது. இங்கு வினுவுவோர் மனவாசகங் கடந்தார்

ஆகவும், விடையிறுப்போர் மெய்கண்டாராகவும் விளங்கு
கின்றனர். இதன்கண் எழுப்பப்பெறும் வினாக்கள் ஆறு:
(1) ஆறாறு தத்துவங்கள் எவை? (2) ஆணவம் என்பதென்ன?
(3) கன்மம் என்பதென்ன? (4) உயிர் என்பது எது? (5) இறை
என்பது எது? (6) இறைவன் திருவைந்தெழுத்து உடனாய்
நின்று திருக்கூத்து இயற்றும் நிலை எது? என்பன. இவ்வினாக்
கள் இந்நூலின் இரண்டாவது பாடலில் உள்ளன.
இவற்றிற்கு விடை கூறுமுகமாக இந்நூல் முழுமைபெற்று
விளங்குகின்றது. இவ்வினாக்களுள் ஆறாவது வினாவும் அதற்
குரிய விடையும் இந்நூலகத்து விளங்குதல் இதன் தனிச்
சிறப்பு ஆகும். முடிவில் குருலிங்க சங்கம வழிபாடே பிறவிப்
பிணிக்கு மருந்தாகும் எனக்கூறி நூலை நிறைவு செய்துள்ளார்
ஆசிரியர் மனவாசகம் கடந்தார்.

## ஆ. வினாவகையில் அமைந்தவை :

ஆசிரியர் தாம் உணர்த்தும் கருத்துக்கள் பலவற்றையும்
முறையாகவும் நெறியாகவும் விளங்க எடுத்துரைக்கும் முறை
ஒன்று. அவ்வாறன்றிக் கேட்போர்க்கு உய்த்துணர்வு பெருகு
வான் வேண்டி சிலகருத்துக்களைச் சிந்தனை செய்யுமாறு
தூண்டி யிருத்தலும் உண்டு. இவ்விரண்டாம் வகையில்
அமைந்தனவே இங்குக் குறிக்க இருக்கும் இரு நூல்களு
மாம். இவ்விரு நூல்களையும் அருளிய ஆசிரியர்கள்
ஒருவரல்லர். எனினும் இவ்விருவர்தம் சிந்தனையும் ஒரு
போக்கில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இவ்விரு
ஆசிரியர்களும் தத்தம் நூல்களில் வினாக்களை மட்டும் எழுப்பி
யுள்ளனர். அவை கேட்போரின் சிந்தனையைத் தூண்டி எழுச்சி
யும் ஆர்வமும் மிகுமாறு செய்கின்றன. இவற்றிற்குரிய
விடையை இவர்கள் அருளிய நூல்களிலும் பிற நூல்களிலும்
நாம் கண்டு தெளிதல் வேண்டும். திருஞானசம்பந்தரின்
வினாவுரைப் பதிகங்கள் இத்தகையவை.

இகழ்ந்தும் வருவாரென்றும் கூறியிருப்பது எண்ணி மகிழ்தற்குரிய தொன்றாகும். பொது இயலபில் இம் முப்பொருள் உண்மைபற்றிய விளக்கம் உள்ளது. உண்மை இயல்பு கூறத் தொடங்குங்கால் இன்ன இன்ன பொருள்களைக் கூறுவன் என நுதலிப் புகுகின்றார் ஆசிரியர். உண்மையியல்பில் உயிரியல்பு, அது ஐந்தவத்தைப் படுமாறு, உயிர் தானாக யாதொன்றையும் அறியாமை, அத்தகைய உயிர்க்கு இறைவன் உணர்த்தும் முறைமை, சிவஞானத்தின் உண்மை, அதன் பயன், திருவைந்தெழுத்தின் இயல்பு, அணைந்தோர் தன்மை ஆகியவை விரித்துரைக்கப் பெறுகின்றன. நூலின் இறுதியில் நூற்கருத்தும் கேட்டற்குரியார் யாவர் என்பதும் கூறப் பெற்றுள்ளன. உண்மையை உணர வேண்டுமென்னும் வேட்கையும் தகுதியும் உடையவர்க்குத் தீக்கையளித்து இந் நூலைக் கற்பிக்குமாறு ஆசிரியர் கூறியிருப்பது இந்நூற் பெருமையையும், சைவசித்தாந்தம் பயிற்று முறைமையையும் விளக்குவதாகும். சிவஞானபோதம் (மெய்யுணர்தல்) மிகின் சிவஞானம் சித்திக்கும். அது சித்திக்கவே உயிரிடத்துச் சிவம் பிரகாசிக்கும். இம்மூன்று நூல்களும் தம் பெயரானே இவ் வுண்மையைப் புலப்படுத்தி நிற்றலும் ஈண்டு அறியத்தக்க தாகும்.

## 2. வினா விடை வகையிலும் வினா வகையிலும் அமைந்தன:

### அ. வினா விடை வகையில் அமைந்தது – உண்மை விளக்கம்:

தம் கருத்தைப் பிறருக்கு உணர்த்த எத்துணையோ முறைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று வினாவிடை வகையில் தம் கருத்துக்களைத் தருவதாகும். பல வினாக்களைத் தாமே எழுப்பி அவற்றிற்குரிய விடைகளையும் கூறும் முறையில் அமைந்தது இது. இங்கு வினவுவோர் மனவாசகங் கடந்தார்

ஆகவும், விடையிறுப்போர் மெய்கண்டாராகவும் விளங்கு கின்றனர். இதன்கண் எழுப்பப்பெறும் வினக்கள் ஆறு: (1) ஆருறு தத்துவங்கள் எவை? (2) ஆணவம் என்பதென்ன? (3) கன்மம் என்பதென்ன? (4) உயிர் என்பது எது? (5) இறை என்பது எது? (6) இறைவன் திருவைந்தெழுத்து உடனாய் நின்று திருக்கூத்து இயற்றும் நிலை எது? என்பன. இவ்வினக் கள் இந்நூலின் இரண்டாவது பாடலில் உள்ளன. இவற்றிற்கு விடை கூறுமுகமாக இந்நூல் முழுமைபெற்று விளங்குகின்றது. இவ்வினக்களுள் ஆருவது வினவும் அதற் குரிய விடையும் இந்நூலகத்து விளங்குதல் இதன் தனிச் சிறப்பு ஆகும். முடிவில் குருலிங்க சங்கம வழிபாடே பிறவிப் பிணிக்கு மருந்தாகும் எனக்கூறி நூலை நிறைவு செய்துள்ளார் ஆசிரியர் மனவாசகம் கடந்தார்.

## ஆ. வினவகையில் அமைந்தவை :

ஆசிரியர் தாம் உணர்த்தும் கருத்துக்கள் பலவற்றையும் முறையாகவும் நெறியாகவும் விளங்க எடுத்துரைக்கும் முறை ஒன்று. அவ்வாறன்றிக் கேட்போர்க்கு உய்த்துணர்வு பெருகு வான் வேண்டி சிலகருத்துக்களைச் சிந்தனை செய்யுமாறு தூண்டி யிருத்தலும் உண்டு. இவ்விரண்டாம் வகையில் அமைந்தனவே இங்குக் குறிக்க இருக்கும் இரு நூல்களு மாம். இவ்விரு நூல்களையும் அருளிய ஆசிரியர்கள் ஒருவரல்லர். எனினும் இவ்விருவர்தம் சிந்தனையும் ஒரு போக்கில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இவ்விரு ஆசிரியர்களும் தத்தம் நூல்களில் வினக்களை மட்டும் எழுப்பி யுள்ளனர். அவை கேட்போரின் சிந்தனையைத் தூண்டி எழுச்சி யும் ஆர்வமும் மிகுமாறு செய்கின்றன. இவற்றிற்குரிய விடையை இவர்கள் அருளிய நூல்களிலும் பிற நூல்களிலும் நாம் கண்டு தெளிதல் வேண்டும். திருஞானசம்பந்தரின் வினவுரைப் பதிகங்கள் இத்தகையவை.

## i. இருபா இருபஃது :

இது வெண்பாவும் ஆசிரியமுமாகிய இருவகைப் பாக்களாலும் மாறி மாறி வரும் இயல்பினது; 20 பாடல்களை யுடையது; ஆதலின் இப் பெயர் பெற்றது. பாடல்களை நினைவு கொள்ளுதற்கேற்ப அந்தாதித் தொடையால் அமைந்துள்ளது. தம் குருமூர்த்தியாகிய மெய்கண்டாரைப் பல்லாற்றானும் போற்றிப் பல்வேறு வினாக்களை வினவு முறையில் அருளிச் செய்யப் பெற்றுள்ளது. தாம் கேட்கும் வினாவிற்கு வெல்லும் சொல்லின்றி விடையளித்தல் வேண்டுமென ஆசிரியரிடம் விண்ணப்பித்துக் கொண்டிருப்பது விடை காண்டற்குரியார் சிந்தனையில் எண்ணத்தக்க தொன்றாகும். வினாக்கள் பலவும் இறை, உயிர், தளை ஆகிய முப்பொருள் உண்மைபற்றியவையே. அவற்றுள் சில.

1. குருமூர்த்தியே! நீ என்னை விட்டு நீங்காதிருப்பீரேல் எனக்கு அறியாமை எவ்வாறு வாய்த்தது? ஆணவ மலத்தால் எனின் அதற்குப் பகையாய நீ உடனாயிருக்கும்பொழுது அதுவும் உடனிருப்பது எங்ஙனம் பொருந்தும்?

2. அடியேனுக்கு அறிவுறுத்தும்பொழுது நீ உடனாய் நிற்பையோ? வேறாய் நிற்பையோ?

3. குருவாய் எழுந்தருளி எனக்கருளுமிடத்து எவ்வாறு அருள் புரிகுவை? தகுதி கண்டு அருள் புரிவாய் எனில் தகுதியே அமையும், நீ வேண்டுவதில்லை. தகுதி இன்றெனில் நீ அருளும் மெய்யுணர்வை யான் பெறுதொழிவன். தகுதியின் பயனாக அவை வரும் எனில் தகுதி என்பது அறிவற்றது. அது நின்னை எங்ஙனம் கொணரும்? மலநீக்கம் தகுதியாமெனில் அது தானே நீங்கிற்றா? அன்றி நான் நீங்கினேனா? இவ்விருதிறனுள் எதுவாயினும் நீ தேவையில்லை என்பது பெறப்படும்.

இவற்றிற்கு விடை கூறுவாயாக. இவை முதற் பாடற்கண் காணப்பெறும் வினுக்களாகும். இவ்வினுக்களுக்கு மட்டும் விடை திருமுறையிலிருந்து தொட்டுக் காட்டப்பெற்றுள்ளது. எனவே சித்தாந்தச் செம்பொருளில் ஐயமேற்படின் திருமுறைகளையே தெளிதற்குரிய கருவிகளாய்க் கொள்ளவேண்டும் என்பதும், இதனுல் விளங்குகின்றது. 'காண்பார் யார்? கண்ணுதலாய்க் காட்டாக்காலே' எனவரும் நாவரசர் திருவாக்கும், 'ஆட்பாலவர்க்கருளும்' என வரும் ஞானசம்பந்தர் திருவாக்கும், இவ்வினுக்களுக்கு விடைதரும் என்றறிக எனத் தம் குருமூர்த்தி கூறுவதாகக் கூறியுள்ளார். திருஞானசம்பந்தர் அருளிய திருப்பாசுரத்தைப்', பாண்டியன் கேட்பக் கிளந்த மெய்ஞ்ஞானம்' எனஆசிரியர் குறித்திருப்பது அதன் அருமையை விளக்குவதாகும்.

1. அறிதலும் அறியாமையுமுடைய அடியேன் என்னை அறிவுடைப் பொருள் என்பேனு? அறியாமையுடைய பொருள் என்பேனு?

2. ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலமும் தானே தேடிக் கொண்டவையா? அல்லது நீ கொடுத்தவையா? அன்றி அவை இயல்பாகவே என்னிடத்து அமைந்தவையா?

3. ஆணவ இருள், ஒளியாகிய உன்முன்னும் நில்லாது; அடியேனுக்கும் தானே அறியும் அறிவில்லை. அங்ஙனமிருக்க அடியேன் இருளைப் பற்றிக்கொண்டது எங்ஙனம்?

4. அடியேன் பொறிகளை எவ்வாறு பற்றினேன்? ஐந்தவத்தைகளை எவ்வாறு அடையலானேன்? எவ்வாறு புவனங்கள்தோறும் பிறந்து இறந்து போக்கு வரவு புரிபவன் ஆயினேன்? என்பன போன்ற வினுக்கள் இந்நூலில் எழுப்பப் படுகின்றன. 'இரு நிலனய்த் தீயாகி நீருமாகி,' 'உன்னில்

## i. இருபா இருபஃது :

இது வெண்பாவும் ஆசிரியமுமாகிய இருவகைப் பாக்களாலும் மாறி மாறி வரும் இயல்பினது; 20 பாடல்களை யுடையது; ஆதலின் இப் பெயர் பெற்றது. பாடல்களை நினைவு கொள்ளுதற்கேற்ப அந்தாதித் தொடையால் அமைந்துள்ளது. தம் குருமூர்த்தியாகிய மெய்கண்டாரைப் பல்லாற்றானும் போற்றிப் பல்வேறு வினாக்களை வினவு முறையில் அருளிச் செய்யப் பெற்றுள்ளது. தாம் கேட்கும் வினாவிற்கு வெல்லும் சொல்லின்றி விடையளித்தல் வேண்டுமென ஆசிரியரிடம் விண்ணப்பித்துக் கொண்டிருப்பது விடை காண்டற்குரியார் சிந்தனையில் எண்ணத்தக்க தொன்றாகும். வினாக்கள் பலவும் இறை, உயிர், தளை ஆகிய முப்பொருள் உண்மைபற்றியவையே. அவற்றுள் சில.

1. குருமூர்த்தியே! நீ என்னை விட்டு நீங்காதிருப்பீரேல் எனக்கு அறியாமை எவ்வாறு வாய்த்தது? ஆணவ மலத்தால் எனின் அதற்குப் பகையாய நீ உடனாயிருக்கும்பொழுது அதுவும் உடனிருப்பது எங்ஙனம் பொருந்தும்?

2. அடியேனுக்கு அறிவுறுத்தும்பொழுது நீ உடனாய் நிற்பையோ? வேறாய் நிற்பையோ?

3. குருவாய் எழுந்தருளி எனக்கருளுமிடத்து எவ்வாறு அருள் புரிகுவை? தகுதி கண்டு அருள் புரிவாய் எனில் தகுதியே அமையும், நீ வேண்டுவதில்லை. தகுதி இன்றெனில் நீ அருளும் மெய்யுணர்வை யான் பெறுதொழிவன். தகுதியின் பயனாக அவை வரும் எனில் தகுதி என்பது அறிவற்றது. அது நின்னை எங்ஙனம் கொணரும்? மலநீக்கம் தகுதியாமெனில், அது தானே நீங்கிற்றா? அன்றி நான் நீங்கினேனா? இவ்விரு திறனும் எதுவாயினும் நீ தேவையில்லை என்பது பெறப்படும்.

இவற்றிற்கு விடை கூறுவாராக. இவை முதற் பாடற்கண் காணப்பெறும் வினாக்களாகும். இவ்வினாக்களுக்கு மட்டும் விடை திருமுறையிலிருந்து தொட்டுக் காட்டப்பெற்றுள்ளது. எனவே சித்தாந்தச் செம்பொருளில் ஐயமேற்படின் திருமுறைகளையே தெளிதற்குரிய கருவிகளாய்க் கொள்ளவேண்டும் என்பதும், இதனால் விளங்குகின்றது. 'காண்பார் யார்? கண்ணுதலாய்க் காட்டாக்காலே' எனவரும் நாவரசர் திருவாக்கும், 'ஆட்பாலவர்க்கருளும்' என வரும் ஞான சம்பந்தர் திருவாக்கும், இவ்வினாக்களுக்கு விடைதரும்' என்றறிக எனத் தம் குருமூர்த்தி கூறுவதாகக் கூறியுள்ளார். திருஞானசம்பந்தர் அருளிய திருப்பாசுரத்தைப்', பாண்டியன் கேட்பக் கிளந்த மெய்ஞ்ஞானம்' எனஆசிரியர் குறித்திருப்பது அதன் அருமையை விளக்குவதாகும்.

1. அறிதலும் அறியாமையுமுடைய அடியேன் என்னை அறிவுடைப் பொருள் என்பேனா? அறியாமையுடைய பொருள் என்பேனா?

2. ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலமும் தானே தேடிக் கொண்டவையா? அல்லது நீ கொடுத்தவையா? அன்றி அவை இயல்பாகவே என்னிடத்து அமைந்தவையா?

3. ஆணவ இருள், ஒளியாகிய உன்முன்னும் நில்லாது; அடியேனுக்கும் தானே அறியும் அறிவில்லை. அங்ஙனமிருக்க அடியேன் இருளைப் பற்றிக்கொண்டது எங்ஙனம்?

4. அடியேன் பொறிகளை எவ்வாறு பற்றினேன்? ஐந்தவத்தைகளை எவ்வாறு அடையலானேன்? எவ்வாறு புவனங்கள்தோறும் பிறந்து இறந்து போக்கு வரவு புரிபவன் ஆயினேன்? என்பன போன்ற வினாக்கள் இந்நூலில் எழுப்பப் படுகின்றன. 'இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி,' 'உன்னில்

துன்னி உணுவிடில் துன்னுவை' என்பனவாகிய திருமுறைத் தொடர்கள் இந்நூலில் அமைந்து அணி செய்கின்றன.

## ii. வினவெண்பா :

இந்நூல் மிகச்சிறியது. 13 பாடல்களையுடையது. தம் குரு மூர்த்தியாகிய மறைஞானசம்பந்தரை வினவு முகமாக அமைந்தது. இவற்றுள் 11, 13 ஆகிய இருபாடல்களும் வினவுதலின்றி அமைந்தவை. காண்பான், காட்டுவான், காணப்படும்பொருள் என்ற மூவகை நினைவுகளினின்றும் நீங்கி இறையுணர்வோடு ஒன்றிக்காண்பவர்களே வீடுபேறு அடைந்தவர்களாவர். அல்லாதார் அப்பேற்றினை அடையத் தக்காரல்லர். இறைவன் அருளையே கண்ணுகக்கொண்டு மெய்யுணர்வார்க்கு அச்செம்பொருள் உணர்தற் கெளிதாகி இன்பினை நல்கும். அவ்வனுபவப் பேற்றிற்கு இந்நூல் துணை செய்யும். இந்நூல் உண்மை அறியாதார் ஊமன் கண்ட கனவினை ஒப்ப ஒன்றியிருந்து தெளிதற்கும், தெளிந்த வற்றை உணர்த்துதற்கும் உணராதவராவர். இவையே இப்பாடல்களின் கருத்தாகும். எஞ்சிய 11 பாடல்களில் பல அரிய வினக்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் சில :- மருதூர்ச் சம்பந்தா! ஒளியும் இருளும் ஓரிடத்துக்கூடல் அரிது. அங்ஙனமாகவும் கொடியேனிடத்து நீ எவ்வாறு பொருந்தி நின்ருய்? கேவல நிலையில் ஒன்றுமறியாமலும், சகல நிலையில் வாவற்றையும் மயங்கியும் உணரும் அடியேன் உன் திரு யருளால் யாது பெற வல்லேன்? அருவம் உருவமாகாது; உருவம் அருவமாகாது, அருஉரு இரண்டும் ஒரு பொருட் கண்ணே பொருந்தமாட்டா. அங்ஙனமாயின் நினைவு மாத்திரையில் வடிவம் கொள்ளும் இறைவன் நிலை எத்தகையது? என்பன போன்ற வினக்கள் நூலைக் கற்போரின் சிந்தனையையும் எழுச்சியையும் தூண்ட வல்லனவாகும்.

## 3. மறுப்புவகையில் அமைந்தவை :

### சிவஞான சித்தியார் பரபக்கமும் சங்கற்பநிராகரணமும்:

இவை பிற சமயத்தாரின் கொள்கைகளைக் கூறி மறுக்க எழுந்தனவாகும். ஈண்டுப் பிற சமயங்கள் என்று கூறும் பொழுது நம் சைவ சித்தாந்தம் பிறசமயங்களை எவ்வாறு பாகுபடுத்தி வைத்துள்ளது என்பதையும் ஈண்டு அறிதல் தகும், பல்வேறு சமயங்களையும் நால்வகையில் அடக்கிக் காண்கின்றது சைவசமயம். அவை :- 1. புறப்புறச்சமயம், 2. புறச்சமயம், 3. அகப்புறச்சமயம், 4. அகச்சமயம் என்பன. சைவசித்தாந்தம் முப்பொருள் உண்மையை நாட்டு தற்குக் காண்டல், கருதல், உரை முதலிய அளவைகளை எல்லை களாகக் கொள்ளும். காண்டல் என்பது கண்ணால் காணும் காட்சி அளவையைக் கொண்டே ஒன்றைத் தெளிவிப்பதாகும். கருதல் என்பது இங்ஙனம் அன்றாயின் இது கூடாது என்று உணரும் முகமாக ஒன்றைத் தெளிவிப்பதாகும். உரை என்பது இறைவனாலும் அவனருள் வழிபட்ட அருளாளர் களாலும் அருளிச் செய்யப்பெற்ற நூல்களை மேலெல்லையாகக் கொண்டு ஒன்றைத் தெளிவிப்பதாகும்.

### புறப்புறச்சமயம் :

மேற்கூறிய வகையில் உரை எனக் கருதத்தக்கது வேத ஆகமங்களும் திருமுறைகளுமாகும். வேத ஆகமங்களையும் திருமுறைகளையும் ஒப்புக்கொள்ளாதவர்களைப் புறப்புறச் சமயத்தவர் என்பர். சைவ சித்தாந்தத் துணிவுடையோர் கொள்கை வகையில் இவர்களைத் தமக்கு மிகமிகத் தொலை தூரத்தராகக் கருதுவர். இவ்வகையினர் அறுவர், 1. உல காயதர், 2. சமணர், நால்வகைப்பௌத்தர் ; (3. சௌத்தி ராந்திகர், 4. யோகசாரர், 5. மாத்யமிகர், 6. வைபாடிகர்)

துன்னி உணர்விடில் துன்னுவை' என்பனவாகிய திருமுறைத் தொடர்கள் இந்நூலில் அமைந்து அணி செய்கின்றன.

## ii. வினாவெண்பா :

இந்நூல் மிகச்சிறியது. 13 பாடல்களையுடையது. தம் குருமூர்த்தியாகிய மறைஞானசம்பந்தரை வினவு முகமாக அமைந்தது. இவற்றுள் 11, 13 ஆகிய இருபாடல்களும் வினவுதலின்றி அமைந்தவை. காண்பான், காட்டுவான், காணப்படும்பொருள் என்ற மூவகை நினைவுகளினின்றும் நீங்கி இறையுணர்வோடு ஒன்றிக்காண்பவர்களே வீடுபேறு அடைந்தவர்களாவர். அல்லாதார் அப்பேற்றினை அடையத் தக்காரல்லர். இறைவன் அருளையே கண்ணாகக்கொண்டு மெய்யுணர்வார்க்கு அச்செம்பொருள் உணர்தற் கெளிதாகி இன்பினை நல்கும். அவ்வனுபவப் பேற்றிற்கு இந்நூல் துணை செய்யும். இந்நூல் உண்மை அறியாதார் ஊமன் கண்ட கனவினை ஒப்ப ஒன்றியிருந்து தெளிதற்கும், தெளிந்த வற்றை உணர்த்துதற்கும் உணராதவராவர். இவையே இப்பாடல்களின் கருத்தாகும். எஞ்சிய 11 பாடல்களில் பல அரிய வினாக்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் சில :- மருதூர்ச் சம்பந்தா! ஒளியும் இருளும் ஓரிடத்துக்கூடல் அரிது. அங்ஙனமாகவும் கொடியேனிடத்து நீ எவ்வாறு பொருந்தி நின்றாய்? கேவல நிலையில் ஒன்றுமறியாமலும், சகல நிலையில் யாவற்றையும் மயங்கியும் உணரும் அடியேன் உன் திருவருளால் யாது பெற வல்லேன்? அருவம் உருவமாகாது; உருவம் அருவமாகாது, அருஉரு இரண்டும் ஒரு பொருட்கண்ணே பொருந்தமாட்டா. அங்ஙனமாயின் நினைவு மாத்திரையில் வடிவம் கொள்ளும் இறைவன் நிலை எத்தகையது? என்பன போன்ற வினாக்கள் நூலைக் கற்போரின் சிந்தனையையும் எழுச்சியையும் தூண்ட வல்லனவாகும்.

## 3. மறுப்புவகையில் அமைந்தவை :

### சிவஞான சித்தியார் பரபக்கமும் சங்கற்பநிராகரணமும்:

இவை பிற சமயத்தாரின் கொள்கைகளைக் கூறி மறுக்க எழுந்தனவாகும். ஈண்டுப் பிற சமயங்கள் என்று கூறும் பொழுது நம் சைவ சித்தாந்தம் பிறசமயங்களை எவ்வாறு பாகுபடுத்தி வைத்துள்ளது என்பதையும் ஈண்டு அறிதல் தகும். பல்வேறு சமயங்களையும் நால்வகையில் அடக்கிக் காண்கின்றது சைவசமயம். அவை :- 1. புறப்புறச்சமயம், 2. புறச்சமயம், 3. அகப்புறச்சமயம், 4. அகச்சமயம் என்பன. சைவசித்தாந்தம் முப்பொருள் உண்மையை நாட்டு தற்குக் காண்டல், கருதல், உரை முதலிய அளவைகளை எல்லை களாகக் கொள்ளும். காண்டல் என்பது கண்ணால் காணும் காட்சி அளவையைக் கொண்டே ஒன்றைத் தெளிவிப்பதாகும். கருதல் என்பது இங்ஙனம் அன்றாயின் இது கூடாது என்று உணரும் முகமாக ஒன்றைத் தெளிவிப்பதாகும். உரை என்பது இறைவனாலும் அவனருள் வழிபட்ட அருளாளர் களாலும் அருளிச் செய்யப்பெற்ற நூல்களை மேலெல்லையாகக் கொண்டு ஒன்றைத் தெளிவிப்பதாகும்.

### புறப்புறச்சமயம் :

மேற்கூறிய வகையில் உரை எனக் கருதத்தக்கது வேத ஆகமங்களும் திருமுறைகளுமாகும். வேத ஆகமங்களையும் திருமுறைகளையும் ஒப்புக்கொள்ளாதவர்களைப் புறப்புறச் சமயத்தவர் என்பர். சைவ சித்தாந்தத் துணிவுடையோர் கொள்கை வகையில் இவர்களைத் தமக்கு மிகமிகத் தொலை தூரத்தராகக் கருதுவர். இவ்வகையினர் அறுவர், 1. உல காயதர், 2. சமணர், நால்வகைப்பௌத்தர் ; (3. சௌத்தி ராந்திகர், 4. யோகசாரர், 5. மாத்யமிகர், 6. வைபாடிகர்)

## புறச்சமயம் :

சைவசித்தாந்திகள் வேத ஆகமங்கள் இரண்டையும் ஒப்புக்கொள்வர். இச்சமயத்தார்கள் வேதங்களை மட்டும் ஒப்புக்கொள்வர்; சிவாகமங்களை ஒப்புக்கொள்ளார். ஆதலின் சைவ சித்தாந்தத் துணிபுடையோர்க்கு இவர்களும் தொலை தூரத்தவர்களாகவே ஆகின்றனர்' ஆதலின் இவர்களைப் புறச் சமயத்தவர் என்பர். இத்தகைய சமயங்கள் ஆறாகும். அவை:- 1. நியாயம், 2. சாங்கியம், 3. யோகம், 4. மீமாம்சை 5. வேதாந்தம், 6. பஞ்சராத்திரம் எனப்பெறும் வைணவம்.

## அகப்புறச் சமயம் :

இவர்கள் வேத சிவாகமங்களை ஒப்புக்கொள்பவர். எனினும் சைவசித்தாந்தத் துணிபுடையோர்க்கு ஒரு சில வகையில் கொள்கை வேறுபாடுடையவர்கள் ஆவர். ஆதலின் இவர்களை அகப்புறச்சமயத்தவர் என்பர். இவ்வகைய சமயம் ஆறாகும். அவை :- 1. பாசுபதம், 2. மாவிரதம், 3. காபாலம், 4, வாமம், 5. பைரவம், 6, ஐக்கியவாத சைவம் என்பன. இவற்றுள் முன்னைய ஐந்தும் வேத ஆகமங்களைப் பொதுவாகவே ஒப்புக்கொள்வன. அவற்றோடு அவற்றிற்கு வேறாகிய பாசுபதம் போன்ற நூல்களையும் தமக்கு மேல் எல்லைக்குரிய சிறப்பு நூல்களாகக் கொள்கின்றன. ஆறாவ தாகிய ஐக்கியவாதசைவம் சைவசித்தாந்தத்தோடு பெரிதும் ஒத்திருப்பினும் சைவசித்தாந்தத்துள் இன்றியமையாததாய்க் கூறப்பெறும் ஆணவ மலம் என்பதை ஒப்புக்கொள்ளவில்லை. ஆதலின் இதுவும் அகப்புறச் சமயத்ததாயிற்று.

## அகச்சமயம் :

இவ்வகையில் எண்ணப்படும் சமயங்களி சைவசித்தாந்தத் தோடு மிகவும் நெருங்கியவை. வேத ஆகமங்களை முழுமை யாக ஒப்புக்கொள்பவை. முப்பொருள் உண்மைபற்றிய

கருத்துக்களையும் முழுமையாக ஒப்புக்கொள்பவை. எனினும் முத்தி நிலையில் இவை சைவ சித்தாந்தத்தோடு வேறுபடுகின்றன. ஆதலின் இவற்றை அகச் சமயமென அடக்கினர். இவ்வகையன: 1. பாடாணவாத சைவம், 2. பேதவாத சைவம், 3. சிவசமவாத சைவம், 4. சிவசங்கிராந்தவாத சைவம், 5. ஈசுவர அவிகாரவாதசைவம். 6. சிவாத்துவித சைவம்.

## i. சிவஞானசித்தியார் - பரபக்கம் :

பரபக்கம்-பிறருடைய கொள்கை. இப்பகுதியுள் 14 சமயவாதிகளின் கொள்கைகள் எடுத்துக்கூறப்பெற்று மறுக்கப் பெறுகின்றன. ஆதலின் இப்பகுதி இப்பெயர்பெற்றது. அச்சமயவாதிகள் உலகாயதர், சௌத்திராந்திகர். யோகசாரர், மாத்யமிகர், வைபாடிகர், நிகண்டவாதி, ஆசீவகர், பட்டாச்சாரியர், பிரபாகரர், சத்தப் பிரமவாதி, மாயாவாதி, பாற்கரியன், நிரீச்சுரசாங்கியர், பாஞ்சராத்திரியர் என்போராவர். இவர்களுள் முன்னைய எழுவரும் புறப்புறச்சமயத்தவராவர். சமணருள் நிகண்டவதி ஆசீவகர்என இருவகையினர்உண்டு. அவ்விருவர் கொள்கையும் தனித்தனியே எடுத்து இங்கு மறுக்கப்பட்டுள்ளன. அடுத்துக் கூறப்பெறும் எழுவரும் புறச்சமயத்தவர்களாவர். இவர்களுள் பட்டன், பிரபாகரன் ஆகிய இருவரும் மீமாம்சை மதத்தைத் தழுவியோராவர். நிரீச்சுர சாங்கியமதம் என்பது சாங்கிய மதத்தைத் தழுவியதாகும். இவர்களின் கொள்கைகள் விரிவாகக் கூறப்பெற்று மறுக்கப் பெற்றுள்ளன. பாஞ்சராத்திரியரின் மதத்தின் கொள்கையும் மறுப்பும் ஏனையவைபோலத் தர்க்கரீதியாக இன்றிப் புராணக் கதைகளைக்கூறி மறுப்பதாக உள்ளது. இப்பகுதி 301 பாடல்களையுடையது.

## ii. சங்கற்ப நிராகரணம் :

சங்கற்பம் - கொள்கை; நிராகரணம் - மறுப்பு. பிறரது கொள்கைகளைக்கூறி மறுத்தலின்இப்பெயர் பெறுவதாயிற்று.

இதனுள் ஒன்பது கொள்கைகள் எடுத்துக்கூறி மறுக்கப் பட்டுள்ளன. இச்சமயத்தவர் மாயாவாதி, ஐக்கியவாதி, பாடாணவாதி, பேதவாதி, சிவசமவாதி, சிவசங்கிராந்தவாதி, ஈசுவரஅவிகாரவாதி, சைவவாதி, நிமித்தகாரணபரிணாமவாதி என்போர். இவர்களுள் இரண்டாமவர் முதல் ஏழாமவர்வரை உள்ளவர்கள் அகச்சமயத்தவராவர், முதற் கண்ணுள்ள மாயாவாதி புறச்சமயத்தவராவர். இறுதிக்கண் உள்ள இரு வரும் சைவசித்தாந்தத்தினின்றும் ஒவ்வொரு கூற்றில் வேறுபாடு உடையவர்.

## பொது நிலை :

இரு நூல்களிலும் மாயாவாதிகளின் கொள்கையும் மறுப்பும் இடம் பெற்றுள்ளன. சமயகுரவர்கள் தம் காலத்தில் சமண பௌத்தங்கட்கு ஈடுகொடுக்க நேர்ந்தமைபோல, இவர்கள் தம் காலத்தில் பொதுவாகப் பிற சமயங்கட்கும், சிறப்பாக இம்மாயாவாதக் கொள்கைக்கும் ஈடுகொடுக்க நேர்ந்தமை இதனால் புலனாகின்றது.

## சங்கற்பநிராகரணத்தின் சிறப்பு :

ஆசிரியர் காலத்தைத் தெரிதற்கு இந்நூல் உறுதுணையா கின்றது. 'சொல்லுதல்எளிது, அரிது அத்தொழிற்புரிவு எனப் புல்லிய பழமொழி புதுக்கினையன்றே' எனவரும் அடிகள் 'சொல்லுதல் யார்க்கும் எளிய' என்னும் திருக்குறளின் கருத்தை முகந்து நிற்பதாகும். சுந்தரர் முதலையுண்ட பாலனை அழைத்த வரலாறும், கயிலைபாதி காளத்திபாதி, திருவாசகம், ஞானசம்பந்தர் நாவுக்கரசரின் தேவாரம், காரைக்கால் அம்மையார் அற்புதத்திருவந்தாதி, கருவூர்த்தேவர் திரு விசைப்பா ஆகியநூல்களின் கருத்துக்களும் நூலில்ஆங்காங்கு எடுத்தாளப்பெற்றுள்ளன. 'கரணம் தப்பினால் மரணம்', 'ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீர் நாழிமுகவாது நானாழி' எனவரும் பழமொழிகளும் இந்நூற்கண் இடம்பெற்றுள்ளன

## 4. தனி வகையில் அமைவன :

### i. திருவருட்பயன் :

மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள்ளும் குறள் வெண்பா வால் ஆனது இது ஒன்றே. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கின் திறந்தெரிதற்குத் திருக்குறள் எத்துணைத் தெளிவும் நுண்மையும் சிறப்பும் உடையதாய்த் திகழ் கின்றதோ அதைப்போன்றே சைவசித்தாந்த நுண்பொருளைத் தெளிதற்கும் இந்நூல் பெரிதும் பயன்படுகின்றது. மெய்ந் நூற்பொருள்களைத் தெரிதற்கு விரும்புவார் முதற்கண் இந் நூலைப் பயில்வர்.

நூறு குறள் வெண்பாக்களாலாய இந்நூல் பத்து அதி காரங்களையுடையது. அதிகாரம் ஒவ்வொன்றும் பத்துப் பத்துக் குறள் வெண்பாக்களை யுடையது. பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருள்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியுநெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுந்தருள் நிலை, அணைந்தோர்தன்மை என்பன அவ்வதிகாரத்தலைப்புக்க ளாகும். இதன் ஆசிரியர் இப்பகுப்பிலேயே மூவர் தேவாரங் களை வகுத்துக்கொண்டு, 'தேவார அருள் முறைத்திரட்டு' என்ற நூலையும் திரட்டியருளியுள்ளார். திருமுறைகளை இவ்வாறு எண்ணி மகிழலாம் என்பது ஆசிரியர் திருவுள்ள மாகும். ஆசிரியர் தாம் கூறும் மெய்ந்நூற்பொருளை உணர்வ தற்கு எடுத்தாளும் உவமைகள் மிக நுண்ணியன. 'அனுகு துணையறியா ஆற்றேனில்', 'பாலாழி மீனுளும் பான்மைத்து', 'தாடலைபோல்', 'உற்கை தரும் பொற்கை உடையவர் போல்', 'தூணிழல் ஆர்தற்கு ஆரும் சொல்லார் தொகும் இதுபோல்' என்பன காண்க. ஆசிரியர் பிறிது மொழிதல் என்னும் அணிநலம்பட, பல பாடல்களை அருளியுள்ளார். அவை மிகச் சுவையுடையன. 'இருவர் மடந்தையர்க்கு என் பயன்? இன்புண்டாம் ஒருவன் ஒருத்தி உறின்' 'தித்திக்கும்

பால்தானும் கைக்கும் திருந்திடும் நாப்பித்தத்தில் தான் தவிர்ந்தபின்', 'தரையை அறியாது தாமேதிரிவோர் புரையை அறியா புவி' என்பன காண்க.

'பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு அறிவென்ற பேர்நன்று அற' என உயிரது இயல்பையும், 'பலரைப் புணர்ந்தும் இருட்பாவைக்கு உண்டு என்றும் கணவர்க்கும் தோன்றாத கற்பு' என ஆணவத்தின் இயல்பையும் ஆசிரியர் கூறியிருப்பது நகைச்சுவை ததும்பவுள்ளன. வெள்ளியம்பல வாணமுனிவர் தாம் எழுதிய முதுமொழிமேல்வைப்பு என்னும் நூலில் வீட்டின்பாலுக்கு இந்நூலில் உள்ள குறள் வெண்பாக்களையே எடுத்தாண்டிருப்பதும் ஈண்டு குறித்தற்குரியதாகும்.

## ii. நெஞ்சு விடு தூது :

இது கலிவெண்பாவால் அமைந்தது. இறுதியில் ஒரு தனி வெண்பாவும் உள்ளது. 125 கண்ணிகளையுடையது. தம் ஆசிரியரைத்தலைவராகவும் தம்மைக் காதலியாகவும்கொண்டு அவரிடம் சென்று அவருளைப் பெற்று அதற்கு அடையாள மாக அவரிடம் உள்ள மாலையை வாங்கி வருமாறு தம் நெஞ்சைத் தூதாக விடுப்பதே இதன்பொருள் அமைப்பாகும். தமக்குரிய தலைவன் இறைவனே ஆவன் எனக்கூறி அவனது பெருமையையும், சிற்றறிவுடைய உயிரின் சிறுமையையும் அதற்குக்காரணமாய பாசங்களின் இயல்பையும்முற்பகுதியில் நெஞ்சிற்கு அறிவுறுத்துகின்றார். இடைப்பகுதியில், தான் அடையத்தக்க தலைவனின் பெருமை கூறுமுகமாகத் தசாங்கங் களின் இயல்பைக்கூறுகின்றார். இறுதிப்பகுதியில் அத்தலைவனை அடையுங்கால் இடையில் உலோகாயதன், மாயாவாதி, புத்தன், சமணன், சுமார்த்தன் முதலிய தீயோரிடத்துச் செல்லாது தம் தலைவனிடத்திலேயே சென்று கொன்றை மாலையை வாங்கிவர வேண்டுமெனக் கூறுகின்றார்.

"முன்னம்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றைய வரென்று — நிலைத்தமிழின்
தெய்வப்புலமைத் திருவள்ளுவர் உரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல்"

எனவரும் வரிகள் திருக்குறளின்பால் இவர்வைத்துள்ள பற்றையும், வையத்துள் வாழ்வாங்கு வாழ்தற்கு இதனினும் அரியதொரு நூலில்லை என்பதையும் விளக்குவதாகும்.

"தேற்றற்ற சிந்தை சிவஞான மோனத்தால்
ஏட்டற்று வீற்றிருக்கும் ஊருடையான்"

என்றபகுதி திருவுந்தியாரின்பாடலை நினைவுகூரச்செய்கின்றது.

"இருபொழுதும்
நாள் இருபத்தேழும் நவக்கிரகமும் நலியும்
கோள் இது வென்றெண்ணிக் குறிப்பதோ"

என்ற கண்ணிகள் அடியவரை நாளும் கோளும் நலியாவென உரை செய்த குறிப்பாகும். இறுதியில் உள்ள வெண்பா, நூற்பொருளின் பிழிவாக அமைந்து விளங்குகின்றது.

## iii. கொடிக்கவி :

இது ஐந்து பாடல்களையுடையது. வெண்பா யாப்பில் இயன்றது. கூத்தப் பெருமான் திருவிழாக் கொடியேற்றத் தின் பொழுது கொடி யேறாமல் தடைப்பட்டது கண்டு தில்லைவாழ் அந்தணர் வருந்தினர். அப்பொழுது, 'இங்கு உமாபதி வந்தால் கொடியேறும்' என்ற வானொலி எழுந்தது. தில்லைவாழ் அந்தணர்கள் அவ்வண்ணமே அவரிடம் சென்று வேண்ட அவரும் இக்கொடிக்கவி பாடி அதனை ஏற்றினர் என்பது இந்நூல் பற்றிய வரலாறாகும்.

ஒளியாகிய சிவமும் இருளாகிய மலமும் இருக்குமிடம் ஒன்றே. அது உயிரேயாகும். இவ்விரண்டில் ஒன்று மேலிடில் ஒன்று ஒளிக்கும். எனினும் ஒளியாகிய இறைவன், மலமாகிய இருள், உயிரைத் தாக்கா வண்ணம் உயிர்க்குயிராய் நின்று அருள் புரிவன். ஆயினும் உயிர் வேம்பு தின்ற புழுப்போல முன் நோக்கிய உலகியல்இன்பங்களையே பின்னும் ஓராற்ருன் நோக்கும். இவ்வாறு அவ்வுயிர் நோக்காது இறைவனையே நோக்கி இன்புறுமாறு இக்கொடியைக் கட்டினேன். குரு மூர்த்தியே! மெய்ப்பொருளாகிய நீ யார்? உன் அருட் சத்தி என்பது யாது? கண்ணெனத் தக்க உயிர் என்பது யாது? இருள் என்பது யாது? ஒளி என்பது யாது? நின்னால காக்கப் பெறும். இவ்வுலகனைத்தும் உன்னை உணருமாறு இக்கோபுர வாசலில் கொடி கட்டினேன். மாற்றமனங்கழிய நின்ற மறையோனாகிய இறைவனைப் பிரியாதவாறு ஒன்றுபட்டு நிற்க இக் கொடியேற்றம் அருள வல்லது. திருவைந்தெழுத் தின் பேதங்களாகக் கூறப்பெறும் எழுத்துக்கள் பலவும் நெஞ்சின் கண் அழுந்தி உணரப்பெறின் திருவருள் உயிரைச் சிவத்தொடு சேர்க்கும். இதனையே இக் கொடியேற்றம் அறிவுறுத்தும், இறையருளால் உயிர் வினையின் நீங்கி விளங்கிய அறிவினைப் பெற்று அவ்வறிவிலேயே மாருமல் நிற்கும்; அதுவே சிவப்பேருகும். இதனையே இக் கொடி யேற்றம் கூருமல் கூறுகிறது.

## iv. போற்றிப் பஃருெடை :

இது 95 கண்ணிகளையுடையது. பஃருெடை வெண்பா யாப்பில் அமைந்தது. தம் குருமூர்த்தியாய மறைஞான சம்பந்தர் தம்மை ஆட்கொண்ட அருட்செயலைப் பலவாருகப் போற்றி மகிழுமுகமாக அமைந்துள்ளது.

இறைவனே குருமூர்த்தியாக வந்து ஆட்கொண்டான் என்பதை முதல் 6 கண்ணிகளில் போற்றுகின்ருர் ஆசிரியர்

உயிரின் வினை நீக்கத்திற்கே உடலும் உலகும் கொடுக்கப் பெற்றன என்பதை 7 முதல் 13 வரையுள்ள கண்ணிகளில் குறிப்பிடுகின்றார். மாயை குருடனுக்குக் கொடுக்கப் பெற்ற கோல்போன்றதென்பது. இங்குக் குறிக்கத் தகுந்ததொரு உவமையாகும். வினை வயத்தால் தாய் வயிற்றில் கருவாக வாழ்கின்ற பொழுதும், அது உருப்பெற்று வெளிவருகின்ற பொழுதும், இறைவன் செய்யும் கருணையை 14 முதல் 18 வரையுள்ள கண்ணிகளில் விளக்குகின்றார். குழந்தையாக உருப்பெற்று வெளிவந்தபின் குழந்தையினிடத்துப் பசியை ஏற்படுத்தி அழச்செய்தும், அப்பசி நீங்குவதற்குத் தாயினிடத்துத் தீம்பாலைத் தந்தருளியும் இறைவன் செய்யும் கருணை இருந்தவாற்றை 19 முதல் 22 வரையுள்ள கண்ணிகளில் வியந்துபோற்றுகின்றார். இருவினைவயத்தால் உயிர்க்கு இன்பத் துன்பங்கள் மருவுமாறு செய்யும் அறத்தை 23 முதல் 35 வரையுள்ள கண்ணிகளில் போற்றுகின்றார். உயிர்கள் முன்செய்தனவும், செய்து கொண்டு வருகின்றனவும், அவற்றால் மேலும் வருவனவுமாய வினைப்பயன்களுக்கு ஏற்ப நன்மை தீமைகளைச் செய்து வரும் நிறத்தை 36 முதல் 38 வரையுள்ள கண்ணிகளில் குறிப்பிடுகின்றார். உயிர் தான் செய்த நல்வினையின் பயனாக இந்திரன் முதலிய இறையவர் பதங்களை நுகர்வதும், தீவினையின் பயனாக எரிவாய் நரகில் வீழ்வதும், உயிர்களை உய்யக் கொள்ளும் அறக்கருணை மறக்கருணை ஆகியவற்றையும் 39 முதல் 53 வரையுள்ள கண்ணிகளில் குறிப்பிடுகின்றார். இவ்வாறெல்லாம் உயிர்களைப் பக்குவப்படுத்தி அவற்றை மேலும் மீட்டிங்கு வந்து வினைப் பிறவி சாராவண்ணம் தம் அருட்பதவைச் செய்யும் பெருங் கருணையை 54 முதல் 58 வரையுள்ள கண்ணிகளிலும் விஞ்ஞானகலர், பிரளயா கலர், சகலர் ஆகிய மூவர்க்கும் அருள்புரியும் திறத்தை 59 முதல் 83 வரையுள்ள கண்ணி களிலும் இவவாறெல்லாம் உயிர்களை ஆட்கொண்டருளும் குருநாதன் தம்மையும் ஆட்கொண்டு, அயல்நெறியில் போக விடாது அரிய சைவ சமய நெறியில் நிறுத்திய பெருங்

கருணையை 84 முதல் 95 வரையுள்ள கண்ணிகளிலும் போற்றுகின்றார். நூலின் இறுதியில் உள்ள வெண்பாவில் தில்லையையும் தம் குருநாதன் திருவடிகளையும், அப்பெருமானால் பெற்ற சிவபோகத்தையும் போற்றி மகிழ்கின்றார்.

## உண்மை நெறி விளக்கம் :

இது ஆறு பாடல்களையுடையது. விருத்தப்பாவால் இயன்றது. மிகச்சிறிய நூலாயினும் இதன்கண் பத்துப் பொருள்கள் விளக்கப்பெற்றுள்ளன.

1. தத்துவரூபம்: நிலமுதல் சிவம் ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் நிலையை அறிவது. 2. தத்துவதரிசனம்: மேற்கூறிய முப்பத்தாறு தத்துவங்களும் அறிவற்றன என அறிவது. 3. தத்துவ சுத்தி: உயிர் இவற்றின் வேறாகத் தன்னைக் காண்பது. 4. ஆன்மரூபம்: ஆணவம் நீங்கப்பெற்ற நிலையில் இறையருளால் மெய்யுணர்வைத் தன்னறிவில் காண்பது. 5. ஆன்மசுத்தி: உயிர் திருவருளில் அடங்கித் தான் என வேறின்றி ஒன்றியிருப்பது. 6. ஆன்மதரிசனம்: உயிர் தன்செயலற்று நிற்பது. 7. சிவரூபம்: யாண்டும் நீக்கமற நிற்கின்ற பரம்பொருள், அருளையே தனது வடிவாகக் கொண்டு உயிர்களின் ஆணவம் நீங்குதற்கு உலகைத் தோற்றுவிப்பதும் ஒடுக்குவதுமாகிய செயல்களைச் செய்கின்றது. இவையனைத்தும் தன்பொருட்டன்று; உயிரின் பொருட்டேயாம். இவ்வாறு செய்பவனும் சிவபெருமானேயாம் என உயிர் தன் அறிவில் காண்பது. 8. சிவதரிசனம்: யான் எனதென்னும் செருக்கறத் திருவருள் உயிரின்கண் பொருந்துதலே திருவடியாகும், பார்க்குமிடமெலாம் சிவமாகத் தோன்றலே முகமாகும், சொல்லிறந்து நின்ற பேரின்பமே திருமுடியாகும் எனத்தெளிந்து இவ்வாறு தோன்றும்பொருளை இடையறாது நுகர்ந்து கொண்டிருப்பதன் வாயிலாக உலகியல் உணர்வுகள் தூரச் சிவஞானத்தைப் பெறுவதாகும்.

9. சிவயோகம்: வையத்துள் வாழுங்கால் எதிர்ப்படும் பொருள் யாதாயினும் அதன் உண்மை அறிந்து, அதனைப்பற்றும் உயிரின் இயல்பையும் கண்டு, அவ்வுயிர்க்கு மேலாய அருளை யும் அதற்கு மேலாய சிவத்தையும் உணர்ந்து, அவ் வொன்றினையே பற்றி, உலகில் காணும் குற்றம், குணம், உணர்வு, நுகர்வு, முதலிய எல்லாவற்றிற்கும் அதுவே மூலமாதல் கண்டு அவனன்றி ஓரணுவும் அசையாது என்னும் உணர்ச்சியால் அப்பரம்பொருளோடு ஒன்றுவது.

10. சிவபோகம்: சிவபரம்பொருளோடு ஒன்றிய பெரியவர்கள் ஊழ்வினை வயத்தால் கொலை, களவு, கள்ளுண்டல் முதலிய பாதகங்களைச் செய்திடினும், நெறியல்லா நெறிச் செல்லி னும், தவறுகளே செயினும் அவற்றால் அவர் தாக்குறார். காரணம், அவர் தமக்கென ஒரு செயலின்றி இறையுணர்வின் வயமாகி நின்று செய்கின்றார் ஆதலின். இறைவனும் அவ் வுயிரோடு ஒன்றி உண்ணல், உறங்கல், நடத்தல் முதலிய செயல்களைச் செய்து தன்னுடன் அவர் வேறற நிற்குமாறு செய்துவிடுவன். இந்நுகர்ச்சியை உயிர்பெறுவது சிவபோக மாகும். இந்நூல் இறுதியில் உள்ள வெண்பாவால் இந்நூலைச் செய்தவர் தத்துவநாதர் என அறியலாம்.

## துகளறுபோதம் :

இப்பதிப்பில் மெய்கண்ட நூல்கள் பதினான்கனுடன் இந் நூலும் நிறைவாக இணைத்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. மெய்கண்ட நூல்கள் பதினான்கு எனக் கூறும் பாடலில் இந் நூல் இல்லை. எனினும் மெய்கண்ட நூல்களைக் கொண்ட தொகுப்புச் சுவடிகள் சிலவற்றில் உண்மை விளக்கத்திற்கு மாறாக இந்நூல் காணப்படுகிறது. இதனானும், மதுரைச் சிவப்பிரகாசர், சிவஞானமுனிவர் போன்ற பெருமக்களால் இந்நூற்கருத்துக்கள் எடுத்தாளப் பெறுதலானும் மெய்கண்ட நூல்கள்பதினான்கனோடு இணைத்துப்பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

## ஆசிரியர் :

இதனை அருளியவர் சிற்றம்பலநாடிகள் என்பார். தில்லைச் சிற்றம்பலத்தையே சிந்தை செய்திருந்தமையின் இப்பெயர் பெற்றார். இவர் தோன்றிய ஊர் புள்ளிருக்கு வேளூர் என்பர். சீகாழி என்ற கருத்தும் உண்டு. சீகாழியில் கங்கை மெய் கண்டாரிடம் உபதேசம் பெற்ற இவர் அவருக்குப் பின் அந்த ஞானபரம்பரையில் தலைவராயினர். இவரிடம் உபதேசம் பெற்ற அறுபத்து மூன்று அடியவர் மயிலாடுதுறையில் இவருடன் ஒருங்கு வதிந்திருக்கும் பேறு பெற்று இருந்தனர். உடலூழ் கழியும் நிலையில் இவர் தம் மாணாக்கர் அறுபத்து மூவருடனும் நிட்டை கூடினர். இதனை,

"முத்தர்அறு பத்துமூவர் பணிந்தேத்தும்
சித்தர்வனத் தில்லைச்சிற் றம்பலவா — பத்தர்
பவவிருளை நீக்கியருள் பானுவே துய்ய
தவவடிவே நின்தாள் சரண்"

என வரும் பாடலால் அறியலாம்.

## அருளிய நூல்கள் :

துகளறுபோதம், செல்காலத்திரங்கல், வருகாலத்திரங்கல், நிகழ்காலத்திரங்கல், திருப்புன்முறுவல் என்பனவாம்.

## துகளறுபோதம் :

உயிரிடத்துள்ள துகளாகிய தொல்லைமலம் அறுதற்கு ஏதுவாகிய சிவஞானத்தை விளைவிக்கும் நூலாதலின் இப் பெயர் பெற்றது. துகள் - ஆணவம். காப்புச்செய்யுளுடன் 101 வெண்பாக்களை உடையது. வெண்பாக்கள் எளிய, இனிய

ஆற்றொழுக்கான நடை உடையன. உயிர் படிப்படியாக வளர்ந்தும், உயர்ந்தும் இறையடி அடைதற்கு உரியபடிகள் பத்தாம். இவற்றைத் தசகாரியம் என்பர். இப்பத்து வகை படிநிலைகளையும் நன்கு விளக்குவதோடு திருவைந்தெழுத்தின் பொருள், குருவணக்கம், அவர்தம் சிறப்பு, மாணாக்கரிலக்கணம், சரியை, கிரியை, யோகம் ஆகியவற்றின் விளக்கம் ஆகியவை இந்நூற்கண் கூறப்படுகின்றன. இந்நூற்கண் அமைந்த 100 ஆவது பாடல் உமாபதிசிவம் அருளிய கொடிக்கவியிலும் உள்ளது. இவர் காலம் கி. பி. பதினான்காம் நூற்றாண்டாகும்.

உ

சிவமயம்

## தேவாரம்

ஒன்றென்றொன்றொன்று மொருநான்கொடைந்து
  திருமூன்றொடேழுமுடனாய்
அன்றின்றொடென்று மறிவானவர்க்கு
  மறியாமைநின்றவரனூர்
குன்றென்றொடொன்று குலையொன்றொடொன்று
  கொடியொன்றொடொன்றுகுழுமிச்
சென்றென்றொடொன்று செறிவானிறைந்த
  திருமுல்லைவாயிலிதுவே.

— திருஞானசம்பந்தர்.

## மெய்கண்ட சாத்திரங்கள்

உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் — வந்த அருள்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று.

## சிவபோகசாரம்

ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுள் ஞானப்ர காசன் மெய்த் தொண்டர்களே.

— ஸ்ரீ குருஞானசம்பந்தர்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

திருவியலூர் உய்யவந்ததேவ நாயனர்

அருளிச்செய்த

# 1. திருவுந்தியார்

---

## 1. உபதேசம்

அகளமா யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
 தானாகத் தந்ததென் றுந்தீபற. 1

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பெணே உந்தீபற
 ஒருபொரு ளாலேயென் றுந்தீபற. 2

கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்
பிண்டத்தில் வாராரென் றுந்தீபற
 பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற. 3

[1]இங்ங னிருந்ததென்றெவ்வண்ணஞ்சொல்லுகேன்
அங்ங னிருந்ததென் றுந்தீபற
 அறியும் [2]அறிவதன் றுந்தீபற. 4

---

[1]எங்ஙன், [2]அறிவதென்று.

ஏகனு மாகி அநேகனு மானவன்
நாதனு மானானென் றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற. 5

நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே [1]தந்தானென் றுந்தீபற. 6

## 2. சாதனம்

உள்ளம் [2]உருகில் உடனாவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற. 7

ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தே[3]செல்க உந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற. 8

ஆக்கில்அங் கேயுண்டாய் அல்லதங் கில்லையாய்ப்
பார்க்கிற் [4]பரமதன் றுந்தீபற
[5]பாவனைக் கெய்தாதென் றுந்தீபற. 9

அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத்
துஞ்சா துணர்ந்திருந் துந்தீபற
துய்ய பொருளீதென் றுந்தீபற. 10

தாக்கியே தாக்காது நின்றதோர் [6]தற்பரம்
நோக்கிற் குழையுமென் றுந்தீபற
[7]நோக்காமல் நோக்கவென் றுந்தீபற. 11

---

[1]தந்ததென்று. [2]உருகி. [3]செல. [4]பரமதென்று. [5]பாவனைக் கெய்தான். [6]தற்பரன் [7]நோக்காமை நோக்குமென்று.

## 3. மீதானம்

மூலே யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென் றுந்தீபற
தவத்தில் தலேவரென் றுந்தீபற. 12

ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற் றிடஞ்சிவம் உந்தீபற
தேடும் [1]இடமதன் றுந்தீபற. 13

கிடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி
உடந்தை யுடனேநின் றுந்தீபற
உன்னேயே கண்டதென் றுந்தீபற. 14

பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பரென் றுந்தீபற
[2]பாவிக்க வாராரென் றுந்தீபற. 15

உழவா துணர்கின்ற யோகிகள் ஒன்ருேடுந்
[3]தழுவாமல் நிற்பரென் றுந்தீபற
[4]தாழ்மணி நாவேபோல் உந்தீபற. 16

திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று
நிருத்தனேக் கும்பிடென் றுந்தீபற
நேர்பட அங்கேநின் றுந்தீபற 17

மருளுந் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளே [5]மறவாதே உந்தீபற
அதுவேயிங் குள்ளதென் றுந்தீபற. 18

---

[1]இடமதென்று. [2]பாவிக்கில் வாராதென்று. [3]தழுவாது. [4]தாழ்ந்த மணிநாப்போல். [5]மறவாதென்று. 14. 15 ஆம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னுக மாறியிருக்கின்றன.

## 4. இன்புறுநிலை

கருதுவ தன்[1]முன் கருத்தழியப் பாயும்
ஒருமகள் கேள்வனென் றுந்தீபற
உன்ன அரியனென் றுந்தீபற. 19

இரவு பகலில்லா இன்பவெளி யூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விரைய விரையநின் றுந்தீபற. 20

## 5. வேறு உபாயங்கள்

### (i) தத்துவ ஞானம்

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்கு
அல்லனுய் ஆனுனென் றுந்தீபற
அம்பிகை பாகனென் றுந்தீபற. 21

### (ii) வாசி யோகம்

காற்றினை மாற்றிக் கருத்தைக் [2]கருத்தினுள்
[3]ஆற்றுவ தாற்றலென் றுந்தீபற
[4]அல்லாத தல்லலென் றுந்தீபற. 22

## 6. பயன்

### (i) பாசவீடு

கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாமென் றுந்தீபற
வீடும் எளிதாமென் றுந்தீபற. 23

---

[1]முன்னம். [2]கருத்தினில். [3]ஆற்றுதல். [4]அல்லாத தல்லா தென்று.

எட்டுக்கொண்டார் தமைத் தொட்டுக்கொண்
விட்டார் உலகமென் றுந்தீபற [டேநின்றூர்
வீடேவீ டாகுமென் றுந்தீபற. 24

சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
ஒத்ததே ஒத்ததென் றுந்தீபற
ஒவ்வாத தொவ்வாதென் றுந்தீபற. 25

## (ii) சிவப்பேறு

உள்ளும் புறம்பும் [1]நினைப்பறில் உன்னுள்ளே
மொள்ளா அமுதாமென் றுந்தீபற
முளையாது பந்தமென் றுந்தீபற. 26

அவிழ இருக்கும் [2]அறிவுடன் நின்றவர்க்கு
அவிழும்இவ் வல்லலென் றுந்தீபற
அன்றி அவிழாதென் றுந்தீபற. 27

## 7. ஞானமாவது இறவாத இன்ப அன்பே

வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னூர்களென் றுந்தீபற
[3]பெறுவதங் கென்பெணே யுந்தீபற. 28

## 8. பரமுத்தியின் இயல்பு

சொல்லும் இடமன்று சொல்லப் புகுமிடம்
எல்லை சிவனுக்கென் றுந்தீபற
என்றால்நாம் என்செய்கோம் உந்தீபற. 29

---

[1]நினைப்பொழியினுள்ளே, நினைப்பறின் நின்னுள்ளே, நினைப்பொழியில் உன்னுள்ளே. [2]அறிவுடையார்கட்கு. [3]பெறுவதிங்கு.

## 9. தன்னிழப்பு

வீட்டில் இருக்கிலென் நாட்டிலே போகிலென்
கூட்டில்வாள் சார்த்தி[1]நின் றுந்தீபற
கூடப் படாததென் றுந்தீபற. 30

## 10. சிவநெறியின் சிறப்பு

சாவிபோம் மற்றைச் சமயங்கள் [2]புக்குநின்று
ஆவி[3]யருதேயென் றுந்தீபற
அவ்வுரை [4]கேளாதே உந்தீபற. 31

## 11. அணைந்தோர் தன்மை

துரியங் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய் நின்றதென் றுந்தீபற
[5]துறந்தார் அவர்களென் றுந்தீபற. 32

பெற்றசிற் றின்பமே [6]பேரின்ப மாய்அங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது [7]பந்தம்என் றுந்தீபற. 33

பேரின்ப மான பிரமக் கிழத்தியோடு
ஓரின்பத் துள்ளானென் றுந்தீபற
உன்னையே [8]ஆண்டானென் றுந்தீபற. 34

பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரென் றுந்தீபற
காணாதார் காணாரென் றுந்தீபற. 35

---

[1]என்று. [2]புக்கிருந்து. [3]அருதென்று. [4]கேளாதென்று. [5]துறத்தார். [6]பேரின்பமாம். [7]மாயை. [8]ஆண்டதென்றுந்தீபற.

நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்
நாலாம் நிலையாமென் றுந்தீபற
நாதற் கிடமதென் றுந்தீபற. 36

சென்ற நெறியெல்லாஞ் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
[1]நீசெயல் [2]செய்யாதே உந்தீபற. 37

பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்
அக்கொழு நீயறிந் துந்தீபற
அறிந்தறி யாவண்ணம் உந்தீபற. 38

## 12. பரம சித்தாந்தம்

அதுஇது [3]என்னு வனைத்தறி வாகும்
அதுஇது என்றறிந் துந்தீபற
அவிழ்ந்த [4]சடையானென் றுந்தீபற. 39

## 13. பெரும்பெயர்ப்பொருள்

அவனிவ னுன[5]தவனருளா லல்லது
இவனவ னுகானென் றுந்தீபற
என்றும் இவனேயென் றுந்தீபற. 40

## 14. சிவநெறியின் அறிவடிப்படை

முத்தி [6]முதலுக்கே மோகக் கொடிபடர்ந்து
அத்தி பழுத்ததென் றுந்தீபற
அப்பழ முண்ணுதே உந்தீபற. 41

---

[1]நீசில [2]செல்லாதே. [3]என்னுதனை [4]சடையார். [5]அவனரு ளல்ல(து) [6]முதற்கொடி.

## 9. தன்னிழப்பு

வீட்டில் இருக்கிலென் நாட்டிலே போகிலென்
கூட்டில்வாள் சார்த்தி[1]நின் றுந்தீபற
கூடப் படாததென் றுந்தீபற. 30

## 10. சிவநெறியின் சிறப்பு

சாவிபோம் மற்றைச் சமயங்கள் [2]புக்குநின்று
ஆவி[3]யருதேயென் றுந்தீபற
அவ்வுரை [4]கேளாதே உந்தீபற. 31

## 11. அணைந்தோர் தன்மை

துரியங் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய் நின்றதென் றுந்தீபற
[5]துறந்தார் அவர்களென் றுந்தீபற. 32

பெற்றசிற் றின்பமே [6]பேரின்ப மாய்அங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது [7]பந்தம்என் றுந்தீபற. 33

பேரின்ப மான பிரமக் கிழத்தியோடு
ஓரின்பத் துள்ளானென் றுந்தீபற
உன்னையே [8]ஆண்டானென் றுந்தீபற. 34

பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரென் றுந்தீபற
காணாதார் காணாரென் றுந்தீபற. 35

---

[1]என்று. [2]புக்கிருந்து. [3]அருததென்று. [4]கேளாதென்று. [5]துறத்தார். [6]பேரின்பமாம். [7]மாயை. [8]ஆண்டதென்றுந்தீபற.

நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்
நாலாம் நிலையாமென் றுந்தீபற
நாதற் கிடமதென் றுந்தீபற. 36

சென்ற நெறியெல்லாஞ் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
[1]நீசெயல் [2]செய்யாதே உந்தீபற. 37

பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்
அக்கொழு நீயறிந் துந்தீபற
அறிந்தறி யாவண்ணம் உந்தீபற. 38

## 12. பரம சித்தாந்தம்

அதுஇது [3]என்னு வனைத்தறி வாகும்
அதுஇது என்றறிந் துந்தீபற
அவிழ்ந்த [4]சடையானென் றுந்தீபற. 39

## 13. பெரும்பெயர்ப்பொருள்

அவனிவ னுன[5]தவனருளா லல்லது
இவனவ னுகானென் றுந்தீபற
என்றும் இவனேயென் றுந்தீபற. 40

## 14. சிவநெறியின் அறிவடிப்படை

முத்தி [6]முதலுக்கே மோகக் கொடிபடர்ந்து
அத்தி பழுத்ததென் றுந்தீபற
அப்பழ முண்ணுதே உந்தீபற. 41

---

[1]நீசில [2]செல்லாதே. [3]என்னுதனை [4]சடையார். [5]அவனரு ளல்ல(து) [6]முதற்கொடி.

## 15. ஆன்மலாபம்

அண்ட [1]முதலாம் அனைத்தையும் உட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே உந்தீபற
[2]குறைவற்ற செல்வமென் றுந்தீபற. 42

## 16. உயிர்க்களுக்கு இரங்கல்

[3]காயத்துள்மெய்ஞ்ஞானக்கள்ளுண்ணமாட்டாதே
மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற
வறட்டுப் பசுக்களென் றுந்தீபற. 43

## 17. வாழ்த்து

சிந்தையி னுள்ளும்என் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்தீபற
மடவா ளுடனேயென் றுந்தீபற. 44

## 18. நூற்பயன்

வைய முழுதும் மலக்கயங்[4] கண்டிடும்
உய்யவந் தானுரை உந்தீபற
உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற. 45

---

[1]முதலாய் [2]குறைவற நின்றதென்று, குறைவற்று நின்றதென்று. [3]காயத்து [4]மலக்கயம் – மலக்ஷயம், பாசநீக்கம்.

## திருவுந்தியார் கருத்துள்ள திருக்களிற்றுப்படியார் திருவெண்பாக்கள்

| உந்தியார் | களிற்றுப்படியார் |
|---|---|
| 1 | 4 - 5 |
| 2 | 6 - 7 |
| 3 | 8 |
| 4 | 9 - 10 |
| 5 | 11 |
| 6 | 12 - 13 |
| 7 | 14 - 21 |
| 8 | 22 |
| 9 | 23 - 24 |
| 10 | 25 |
| 11 | 26 |
| 12 | 27 - 28 |
| 13 | 29 |
| 14 | 30 |
| 15 | 31 |
| 16 | 32 |
| 17 | 33 |
| 18 | 34 |
| 19 | 35 |
| 20 | 36 - 37 |
| 21 | 38 - 40 |
| 22 | 41 |
| 23 | 42 - 43 |
| 24 | 44 - 45 |
| 25 | 46 - 50 |
| 26 | 51 - 52 |
| 27 | 53 - 56 |
| 28 | 57 |
| 29 | 58 - 62 |
| 30 | 63 - 64 |
| 31 | 65 - 68 |
| 32 | 69 - 75 |
| 33 | 76 |
| 34 | 77 |
| 35 | 78 - 79 |
| 36 | 80 - 81 |
| 37 | 82 - 83 |
| 38 | 84 |
| 39 | 85 - 91 |
| 40 | 92 |
| 41 | 93 - 94 |
| 42 | 95 - 96 |
| 43 | 97 - 99 |
| 44 | 100 |

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனர்
அருளிச்செய்த

# 2. திருக்களிற்றுப்படியார்

## 1. கடவுள் வாழ்த்து

அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் - [அம்மையப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
அல்லார்போல் [1]நிற்பார் அவர். 1

## 2. அனுபவம் பெறும் முறை

தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்
தம்மில் தலைப்படுதல் தாமுணரின் — தம்மில்
நிலைப்படுவர் ஓரிருவர் நீக்கிநிலை [2]யாக்கித்
தலைப்படுவர் தாம்அத் தலை. 2

## 3. நூல் வழி

என்னறிவு சென்றளவில் யானின்று அறிந்தபடி
என்னறிவி லாரறிக என்றொருவன் - சொன்னபடி
சொல்லக்கேள் என்றொருவன் சொன்னான் [எனக்கதனைச்
சொல்லக்கேள் யானுனக்கச் சொல். 3

---

[1]நிற்பர். [2]ஆக்கில், ஆகத்.

## 4. உபதேசம்

அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போல்உலகில் தங்கி – நிகளமாம்
ஆணவ மூல மலம்அகல [1]ஆண்டனன்கண்
மாணவக என்னுடனுய் வந்து. 4

ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானெங்கே
யோகங்கள் எங்கே யுணர்வெங்கே – பாகத்து
அருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு. 5

சாத்திரத்தை [2]ஓதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே [3]வாய்க்குநலம் [4]வந்துறுமோ - [ஆர்த்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் [5]தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு. 6

இன்று பசுவின் மலமன்றே இவ்வுலகில்
நின்ற மலமனைத்தும் [6]நீக்குவதிங் - கென்றால்
உருவுடையான் அன்றே உருவழியப் பாயும்
உருவருள வல்லான் [7]உரை. 7

கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவரே
[8]அண்டத்தின் அப்புறத்த தென்றதே-அண்டத்தின்
அப்புறமும் இப்புறமும் ஆரறிவுஞ் சென்றறியும்
எப்புறமும் கண்டவர்கள் இன்று. 8

---

[1]ஆண்டான்காண். [2]ஓதவே. [3]வாய்த்தவளம். [4]வந்துறுமே. [5]தணிந்திடுமே. [6]நீங்குவதெங்கு, நீக்கினதாங்கு. [7]உணர். [8]அண்டத்ததப்புறத்தது.

அன்றுமுதல் ஆரேனும் ஆளாய் உடனுகிச்
[1]சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றதிலே - [இன்றிதனை
[2]யிவ்வா றிருந்ததென் றெவ்வணஞ் [சொல்லுகேன்
அவ்வா றிருந்த தது.

ஒன்றுங் குறியே குறியாத லால்அதனுக்
கொன்றுங் குறியொன் றிலாமையினுல் - ஒன்றோ
டுவமிக்க லாவதுவுந் தானில்லை [3]ஒவ்வாத்
தவமிக்கா ரே[4]யிதற்குச் சான்று. 10

ஆற்றுல் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றிஅவ் வாற்றுன் மறித்தாற்போல்-தோற்றிப்
புலன்களெனப் போதம் [5]புறம்பொழியும் நந்தம்
மலங்களற மாற்றுவிக்கும் வந்து. 11

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் [பாடியதும்
காலனைஅன் றேவிக் கராங்கொண்ட - பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம்போல் அல்லாமை காண். 12

தூங்கினரைத் [6]தூய சயனத்தே விட்டதற்பின்
தாங்களே சட்ட உறங்குவர்கள் - ஆங்கதுபோல்
ஐயன் அருட்கடைக்கண் ஆண்டதற்பின்
பைய விளையுமெனப் பார். [அப்பொருளாய்ப்

---

[1]சென்றவர்க்குள். [2]எவ்வாறு. [3]ஓவாத். [4]அதற்குச். [5]புறம்பொழியில். [6]துய்ய.

## 5. சாதனம்

உள்ள முதலனைத்தும் [1]ஒன்ற ஒருவவரில்
உள்ளம் உருகவந் [2]துன்னுடனும் - தெள்ளி
உணருமவர் தாங்கள் [3]உளராக என்றும்
[4]புணருமவ னில்லாப் பொருள். 14

நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானத்தால் [5]நானழியும் - வல்லதனல்
ஆரேனும் அன்புசெயின் அங்கே [6]தலைப்படுங்காண்
ஆரேனுங் காணு அரன். 15

மெல்வினையே யென்ன [7]வியனுலகில் ஆற்றரிய
வல்வினையே யென்ன வருமிரண்டும் - சொல்லிற்
சிவதன்மம் [8]ஆம்அவற்றிற் சென்றதிலே [9]செல்வாய்
பவகன்மம் நீங்கும் படி. 16

ஆதியை [10]அர்ச்சித்தற் கங்கமும் அங்கங்கே
தீதில் திறம்பலவும் [11]செய்வனவும் - வேதியனே
நல்வினையாம் [12]என்றேம் நமக்கும்எளிதானவற்றை
மெல்வினையே என்றதுநாம் வேறு. 17

---

[1]ஒன்ற உருகவரில், ஒன்ற உருக வரும், ஒன்றாய் உருக வரின். [2]துன்னிடனும். [3]உளராகில். [4]புணருவானில்லாப். [5]நானழிய. [6]தலைப்படுவன். [7]வியனுள்ளார்கட்கரிய. வியனுலகுளோர்க்கரிய. [8]ஆகுமிதிற், ஆமதினிற். [9]செல்வார். [10]அர்ச்சித்தாறங்கமும். [11]செப்பினவும். [12]இன்று.

வரங்கள்தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினுல் அன்றுகறி யாக்க - இரங்காதே
கொல்வினையே செய்யுங் கொடுவினையே
வல்வினையே என்றதுநாம் மற்று. [1யானவற்றை

பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டும் - சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
தண்டீசர் தஞ்செயலால் தான். 19

செய்யில் உகுத்த திருப்படி மாற்றதனை
ஐயஇதுஅமுது [2]செய்கென்று - பையவிருந்து
ஊட்டி அறுத்தவர்க்கே ஊட்டி அறுத்தவரை
நாட்டியுரை [3]செய்வதென்னே நாம். 20

செய்யும் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டார் - ஐயா
உழவும் [4]தரிசும் ஒருமுகமே யானுல்
இழவுண்டோ சொல்லாய் [5]இது. 21

ஆதார யோகம் நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே - ஆதாரத்து
ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளாம் ஒன்று
ஆக்காப் பொருளேஒன் றும். 22

---

[1]யானதனை. [2]செய்கவெனப். [3]செய்வதே. [4]தனுசும், தனிசும். [5]இதற்கு 19, 20 ஆம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னுக மாறியிருக்கின்றன.

ஆக்கி ஒரு [1]பொருளை ஆதாரத் தப்பொருளை
நோக்கி அணுவில் அணு [2]நெகிழப் - பார்க்கில்
இவனுகை [3]தாஞெழிந்திட் டேகமாம் ஏகத்து
அவனுகை ஆதார மாம். 23

கொண்டதொருபொருளைக்கோடிபடக்கூறுசெயிற்
[4]கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் - கொண்ட
இருபொருளும் [5]அன்றியே இன்னதிது [6]என்னுது
ஒருபொருளே யாயிருக்கும் உற்று. 24

அஞ்செழுத்து மேஅம்மை அப்பர்தமைக்
[காட்டுதலால்
அஞ்செழுத்தை ஆருகப் [7]பெற்றறிந்தே -
[அஞ்செழுத்தை
ஓதப்புக் குள்ள மதியுங் கெடில் உமைகோன்
கேதமற [8]வந்தளிக்குங் கேள். 25

ஆக்கப் படாத பொருளாய் அனைத்தினிலும்
தாக்கித்தான் ஒன்ருேடும் தாக்காதே - நீக்கியுடன்
நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனுய்
[9]நிற்கை நிராதார மாம். 26

---

[1]பொருளா. [2]நிகழப் பார்க்கில், நிகழப் பார்க்க. [3]காஞெழிந்திட்டு, [4]கொண்டதுவும். [5]இன்றியே. [6]என்ஞு. [7]பெற்றிருந்தும் பெற்றிருந்தல். [8]வந்தளிப்பன். [9]நிற்க. 25, 26 ஆம்பாட்டுக்கள் பிரதிகளில் முன்பின்னுக மாறியிருக்கின்றன.

காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற
[யோகிகளே
காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலை-
[காண்கின்றார்
காண்பானுங் காணப் படும்பொருளும் [1]அன்றியே
காண்கையினாற் கண்டனரே காண். 27

பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான் - பேசாதே
எண்ணொன்றும் வண்ணம் இருக்கின்ற
உண்ணின்றும் போகான் உளன். [யோகிகள்பால்

ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற்று நின்ற இடஞ்சிவமாம் - [2]நாட்டற்று
நாடும் பொருளனைத்தும் நானா விதமாகத்
தேடுமிடம் அன்று சிவம். 29

உணராதே யாதும் உறங்காதே [3]உன்னிப்
புணராதே நீபொதுவே நிற்கில் - உணர்வரிய
காலங்கள் சொல்லாத [4]காலத்துடன் இருத்தி
காலங்கள் மூன்றினையும் கண்டு. 30

பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
[5]பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற - [6]பற்றதனைப்
பற்றுவிடில் அந்நிலையே தானே பரமாகும்
[7]அற்றமிது சொன்னேன் [8]அறி. 31

---

[1]இன்றியே. [2]நாட்டுற்று. [3]உன்னிற். [4]காதலுடன். [5]பற்றைப். [6]பற்றதனிற் பந்றிவிடில். [7]மற்றம், மற்றும். [8]மதி.
30, 31 ஆம் பாட்டுக்கள் பிரதிகளில் முன் பின்னாக மாறியிருக்கின்றன.

அறிவறிவாய் நிற்கில் அறிவுபல வாமென்று
அறிவின் அறிவவிழ்த்துக் கொண்டவ்-வறிவினராய்
வாழ்ந்திருப்பர் [1]நீத்தோர்கள் மானுடரின்
தாழ்ந்தமணி நாவேபோல் தான். [மாணவகா

ஓசையெலாம் அற்றால் ஒலிக்குந் திருச்சிலம்பின்
ஓசை [2]வழியேசென் றொத்தொடுங்கின் -
[[3]ஓசையினின்
அந்தத்தா னத்தான் அரிவையுடன் அம்பலத்தே
[4]வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து. 33

*சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின்
[என்றமையால்
[5]சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு
கெடவொழுகல் நல்ல சமாதியுமாம் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று. 34

## 6. இன்புறு நிலை

அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே
நின்றபடி யே[6]நிற்க முன்னிற்கும் - சென்று
கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்
ஒருமகள்தன் கேள்வன் உனக்கு. 35

---

[1]நீத்தவர்கள். [2]வழிச்சென்றங் கொத்தொடுங்கின், வழியொற்றிச் சென்றொத்தொடுங்கில். [3]ஓசையுடன். [4]வந்தத்தானத்தான். [5]சார்புணரத், சார்புணர்வு. [6]நிற்கில்.
* குறள்மெய்யுணர்தல் 9.

உண்டென்னில் உண்டாகும் இல்லாமை
[இல்லையெனில்
உண்டாகும்ஆனமையில் ஓரிரண்டாம்-உண்டில்லை
என்னும் [1]இவைதவிர்ந்த இன்பத்தை எய்தும்
[[2]வகை
உன்னில் அவன் உன்னுடனே யாம். 36

## 7. தத்துவ ஞானம்

தூல உடம்பாய முப்பத்தோர் தத்துவமும்
மூல [3]உடம்பாம் முதல்நான்கும் - மேலைச்
சிவமாம் பரிசினையுந் தேர்ந்துணர்ந்தார் சேர்ந்த
பவமாம் [4]பரிசறுப்பார் பார். 37

எத்தனையோ தத்துவங்கள் எவ்வெவர்கோட்
[பாடுடைய
அத்தனையும்சென்றங்(கு) அளவாதே-சித்தமெனும்
[5]தூதுதனைப் [6]போக்கிப்போய்த் தூக்கற்ற
பாதிதனைக் கும்பிடலாம் பார். [சோதிதனிற்

சாம்[7]பொழுதில் ஏதும் சலமில்லை செத்தாற்போல்
ஆம்பொழுதி லேஅடைய ஆசையறில் —
[[8]சோம்பிதற்குச்
சொல்லுந் [9]துணையாகும் சொல்லாத
செல்லும் துணையாகும் சென்று. [தூய்நெறிக்கட்

---

[1]அவை. [2]நிலை என்னில் அவனுடனே. [3]உடம்பாய [4]துரிசறுப்பார். [5]தூதுவனைப். [6]போக்கிற்போய்த். [7]பொழுதும் சோம்பு. [9]துணையாகச்.

[1]வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை
[என்றமையால்
*வேண்டின்அஃ தொன்றுமே வேண்டுவது -
[வேண்டினது
வேண்டாமை வேண்டவரும் என்றமையால்
வேண்டாமை வேண்டுமவன் பால். [வேண்டிடுக

## 8. அருள்வழி நிற்றல்

அரண உணர்வுதனில் அவ்வுணர்வை மாற்றில்
கரணமும் காலும்கை கூடும் - புரணமது
கூடாமை யுங்கூடும் கூடுதலுங் கூட்டினுக்கு
வாடாமை யுங்கூடும் வந்து. 41

இன்றிங் கசேதனமாம் இவ்வினைகள் ஓரிரண்டும்
சென்று [2]தொடருமவன் சென்றிடத்தே -
[என்றுந்தான்
[3]தீதுறுவன் ஆனால் [4]சிவபதிதான் கைவிடுமோ
மாதொருகூ றல்லனோ மற்று. 42

அநாதி சிவனுடைமை யால்எவையும் ஆங்கே
அநாதி யெனப்பெற்ற அணுவை - அநாதியே
ஆர்த்த துயரகல அம்பிகையோடு எவ்விடத்தும்
காத்தல் அவன்கடனே காண். 43

---

[1]வேண்டும். [2]தொடருமிவன் [3]தீதொருவன் [4]சிவாபதி.
*குறள் – அவாவறுத்தல் - 2.

தம்மிற் சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பாம் மஞ்சனநீர் தாமாட்டித் -
[தம்மையொரு
[1]பூவாக்கிப் [2]பூவழியா மற்கொடுத்துப் பூசித்தால்
[3]ஓவாமை யன்றே உளன். 44

தன்னைப்பெறுவதன்மேற்பேறில்லைத் தானென்றும்
தன்னைத்தான் பெற்றவன்தான் ஆரென்னில்-
[தன்னாலே
எல்லாந்தன் னுட்கொண்டு கொண்டதனைக்
எல்லாமாய் நிற்கு மிவன். [கொள்ளாதே

துன்பமாம் எல்லாம் [4]பரவசனாய்த் தான்துவளில்
இன்பமாம் [5]தன்வசனா யேயிருக்கில் - என்பதனால்
நின்வசனாயேயிருக்கில்[6]நின்னுடனும் நேரிழையாள்
தன்வசனா யேயிருப்பன் தான். 46

செத்தாரே கெட்டார் கரணங்கள் சேர்ந்ததனோ
டொத்தாரே யோக[7]பர ரானவர்க - ளெத்தாலு
மாராத வக்கரணத் தார்ப்புண்டிங் கல்லாதார்
பேராமற் செல்வர்அதன் பின். 47

கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேறேயுங்
கண்ணுங் கருத்துங் களிகூர - நண்ணி
வடமடக்கி நிற்கும் வடவித்தே போல
உடனடக்கி [8]நிற்பர்கா ணுற்று. 48

---

[1]பூவாகப். [2]பூவழியாதே, பூவொழியாதே. [3]ஓவாதே யாங்கே உளன். [4]பரவசமாய்த். [5]தன்வசமாய்த், தன் வசனாய்த்தானிருக்கில் [6]நின்வசமாம். [7]பரரானார். [8]நிற்பர்கள்

வானகமுமண்ணகமு மாய்நிறைந்தவான்பொருளை
யூனகத்தே யுன்னுமதெ [1]னென்றனையேல் - [யானகத்து
வாதனையை மாற்றும் வகையதுவே மண்[2]முதலா
வாதனமே யன்றோ வதற்கு. 49

கல்லிற் கமரிற் கதிர்வாளிற் சாணையினில்
வல்லுப் பலகையினில் வாதனையைச் - [3]சொல்லு
மகமார்க்கத் தாலவர்கண் மாற்றினர்கா ணையா
சகமார்க்கத் தாலன்றே தான். 50

## 9. சிவப்பேறு

உள்ளும் புறம்பு நினைப்பொழியி லுன்னிடையே
வள்ள லெழுந்தருளு மாதினொடுந் - தெள்ளி
அறிந்தொழிவா யன்றியே யன்புடையை [4]யாகிச்
செறிந்தொழிவா யேதேனுஞ் செய். 51

*கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை [யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பினைக் - கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்று
[5]யாமறியு மன்பன் றது. 52

அவிழ்ந்த துணியி லவிழ்ந்த வவிழை
அவிழ்ந்த மனத்தா லவிழ்க்க - வவிழ்ந்தசடை
வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்
சேந்தனார் செய்த செயல். 53

---

[1]என்றமையால். [2]முதலாம். [3]சொல்லில். [4]ஆயின். [5]ஆரறியும். *திருவாசகம். திருக்கோத்தும்பி – 4.

சுரந்த திருமுலைக்கே துய்ய[1]சிவ ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் - சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு. 54

அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி
யன்பேயன் பாக வறிவழியு - மன்பன்றித்
தீர்த்தந் தியானம் சிவார்ச்சனைகள் செய்வ
[2]சார்த்தும் பழமன்றே தான். [தெல்லாம் 55

எல்லா ரறிவுகளின் ருற்பரிய மென்னறிவு
செல்லு மிடத்தளவும் சென்றறிந்தேன் - வல்லபடி
வாதனையை மாற்றும் வகையிதுவே மற்றவற்று
ளேதமறக் கண்ட திது. 56

## 10. ஞானமும் அன்பும்

வித்துமத னங்குரமும் போன்றிருக்கு மெய்ஞ்
[ஞானம்
வித்துமத னங்குரமு மெய்யுணரில் - வித்ததனிற்
காணுமை யாலதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேணுமை யாலற்ருர் பேறு. 57

## 11. பரமுத்தியின் இயல்பு

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று [3]நானன்று - நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன் றடியன்று தான். 58

---

[1]திருஞானம் [2]சாற்றும். [3]நானென்று.

செய்யாச் செயலையவன் செய்யாமற் செய்ததனைச்
செய்யாச் செயலிற் செலுத்தினு - லெய்யாதே
மாணவக வப்பொழுதே வாஞ்சைக்
மாணவமு [1]மற்ற தறி. [கொடிவளர்க்கு

ஏதேனுங் காலமுமா மேதேனுந் தேசமுமா
மேதேனுந் திக்கா சனமுமா - மேதேனுஞ்
[2]செய்த லொருவலுமாஞ் செய்யாச் செயலதனைச்
செய்யாமற் செய்யும் பொழுது. 60

செய்தற் கரிய செயல்பலவும் செய்துபல
ரெய்தற் கரியதனை யெய்தினர்க - ளையோநாம்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு. 61

இப்பொருள்கள்* யாதேனு மேதேனு மொன்று [செய்த
லெப்பொருளுஞ் செய்யா தொழிந்திருத்தன் - [மெய்ப்பொருளைக்
கண்டிருத்தல் செய்யாதே கண்ட மனிதரெலா
முண்டிருப்ப தென்னே வுரை. 62

[1]அற்றுல், இத்தால். [2]செய்வா னெருவனுமாம். *யாவேனும் என்றிருத்தல் வேண்டும்.

## 12. தன்னிழப்பு

வீட்டிலே சென்று வினை[1]யொழிந்து நின்றிடிலென்
நாட்டிலே நல்வினைகள் [2]செய்திடிலென் - கூட்டில் [வாட்
சாத்தியே நின்றிலையேற் றக்கனூர் வேள்விசெய்த
மாத்திரமே யாங்கண்டாய் வந்து. 63

சிவன்முதலே யன்றி முதலில்லை யென்றும்
சிவனுடைய தென்னறிவ தென்றும் - சிவனவன
தென்செயல தாகின்ற தென்று மிவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான். 64

## 13. சிவநெறியின் சிறப்பு

இன்றிச் சமயத்தி னல்லதுமற் றேழையுட
ஞென்றுசொலி மன்றத்து நின்றவரா - ரின்றிங்கே
யங்க முயிர்பெறவே பாடு மடியவரா
ரெங்குமிலை கண்டா யிது. 65

விரிந்தும் குவிந்தும் விழுங்குவர்கண் மீண்டுந்
தெரிந்துந் தெரியாதும் நிற்பர் - தெரிந்தும்
தெரியாது நிற்கின்ற சேயிழைபா லென்றும்
பிரியாது நின்றவனைப் பெற்று. 66

ஆதனமு மாதனியு மாய்நிறைந்து நின்றவனைச்
சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச் - சேதனனைச்
சேதனனி லேசெலுத்திச் சிற்பரத்த ராயிருப்ப
ரேதமறக் கண்டவர்க ளின்று. 67

---

[1]ஒழித்து நின்றாலும். [2]செய்தாலும்.

தாமடங்க விந்தத் தலமடங்குந் தாபதர்கள்
தாமுணரி லிந்தத் தலமுணருந் - தாமுனியிற்
பூமடந்தை தங்காள் புகழ்மடந்தை போயகலும்
நாமடந்தை நில்லாள் நயந்து. 68

## 14. அணைந்தோர் தன்மை

துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான் - துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் [தன்மைகளும்
[1]ஆக்கியிடும் அன்பர்க் கவன்.

ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்த - லேடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்த லீங்கிவைதா மோங்கு [புகழ்த்
தென்புகலி வேந்தன் செயல். 70

கொல்கரியி னீற்றறையி னஞ்சிற்கொலை தவிர்தல்
கல்லே மிதப்பாய்க் கடல்நீந்தல் - நல்ல
மருவார் மறைக்காட்டின் வாசல்திறப் பித்தல்
[2]திருவாமூ ராளி செயல். 71

மோக மறுத்திடின்நாம் முத்தி கொடுப்பதென
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் -
[தோகையர்பால்
தூதாகப் போகவிடும் வன்றொண்டன்[3]
யேதாகச் சொல்லுவேன் யான். [றொண்டுகளை

---

[1]ஆக்கிடுவன். [2]திருவாரூ சன்றன் செயல். [3]தொண்டதனை.

[1]பாய்பரியே றந்தப் பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து - மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தே. 73

அம்மையிலு மிம்மையிலு மச்சந் தவிர்த்தடியா
ரெம்மையுமாயெங்குமியங்குதலான்-மெய்ம்மைச்
சிவயோக மேயோக மல்லாத யோக
மவயோக மென்றே அறி. 74

மன்னனரு ளெவ்வண்ண மானுடர்பான் மாணவக
அன்ன வகையே அரனருளும் - என்னி
லடியவரே யெல்லாரு மாங்கவர்தா மொப்பி
லடியவரே யெல்லா மறி. 75

உடம்புடைய யோகிகள்தா முற்றசிற் றின்ப
மடங்கத்தம் [2]பேரின்பத் தாக்கத் - தொடங்கி
முளைப்பதுமொன் றில்லை முடிவதுமொன் றில்லை
யிளைப்பதுமொன் றில்லை யிவர். 76

## 15. சத்தி சிவமாதல்

பேரின்ப மான பிரமக் கிழத்தியுட
ஞேரின்பத் துள்ளானை யுள்ளபடி - பேரின்பங்
கண்டவரே கண்டார் கடலுயிர்த்த வின்னமுத
முண்டவரே யுண்டார் சுவை. 77

---

[1]பாய்பரியோன்தந்த. [2]பேரின்பத்தாக்கிற்.

நங்கையினுனுமனைத்துஞ்செய்தாற்போனுடனைத்து
நங்கையினுற் செய்தளிக்கு நாயகனும்-நங்கையினு
நம்பியாய்த் தானடுவே நாட்டப் பெறுமிதுகா
ணெம்பெருமா ஞர்த மியல்பு. 78

பொன்னிறங் கட்டியினும் பூணினும் நின்ருற்போ
லந்நிற மண்ணலு மம்பிகையுஞ் - செந்நிறத்த
ளெந்நிறத்த ளாயிருப்ப ளெங்கள் சிவபதியு
மந்நிறத்த ஞயிருப்ப ஞங்கு. 79

தாரத்தோ டொன்ருவர் தாரத்தோர் கூருவர்
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர் - தாரத்தி
ஞுதாந்தத் தேயிருப்பர் [1]நற்ருனத் தேயிருப்பர்
வேதாந்தத் தேயிருப்பர் வேறு. 80

ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்க
[ளொன்ருக
நின்றுரைத்துநிச்சயிக்க மாட்டாவா-லின்றுரைக்க
வென்ஞலியன்றிடுமோவென்போல்வாரேதேனுஞ்
சொன்ஞற்ரு னேறுமோ சொல். 81

யாதேனுங் காரணத்தா லெவ்வுலகி லெத்திறமு
மாதேயும் பாக னிலச்சினையே - யாதலினுற்
பேதமே செய்வா யபேதமே செய்திடுவாய்
பேதாபே தஞ்செய்வாய் பின். 82

---

[1]நாற்ருனத்தே யிருப்பர்.

நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்தெரியா
மன்றினுணின் ருடன் மகிழ்ந்தானுஞ் - [சென்றுடனே
யெண்ணுறுமைம் பூதமுத லெட்டுருவாய்
பெண்ணுறநின் ருடும் பிரான். [நின்ருனும்

## 16. உணர்விறந்து உணர்தல்

சிவமே சிவமாக யானினைந்தாற் போலச்
சிவமாகி யேயிருப்ப தன்றிச் - சிவமென்
றுணர்வாரு மங்கே யுணர்வழியச் சென்று
புணர்வாரு முண்டோ புவி. 84

## 17. பரம சித்தாந்தம்

அதுவிது வென்று மவனுனே யென்று
மதுநீயே யாகின்ரு யென்று - மதுவானே
னென்றுந் தமையுணர்ந்தா ரெல்லா மிரண்டாக
வொன்ருகச் சொல்லுவரோ வுற்று. 85

*ஈருகி யங்கே முதலொன்ரு யீங்கிரண்டாய்
மாருத வெண்வகையாய் மற்றிவற்றின் - வேரு
யுடனு யிருக்கு முருவுடைமை யென்றுங்
கடனு யிருக்கின்ருன் காண். 86

---

*திருஞான. தேவாரம். திருவீழிமிழலை. பண் – நட்டபாடை. 2.

உன்னுதரத் தேகிடந்த கீட முறுவதெல்லா
[1]முன்னுடைய தென்னுய்நீ யுற்றனையோ -
[மன்னுயிர்க
ளவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுவுஞ்
செவ்வகையே நின்றசிவன் பால். 87

அவனே யவனி [2]முதலாயி னுனு
மவனே [3]யறிவாய்நின் ருனு - மவனேகா
ணுகிப் பெண்ணு யலியாகி நின்ருனுங்
காணுமை நின்ருனுங் கண்டு. 88

இன்றுதா னீயென்னைக் கண்டிருந்துங் கண்டாயோ
அன்றித்தா னுன்னைக் கண்டேனே - வென்ரு
லருமாயை யீன்றவள்தன் பங்கனையார் காண்பார்
பெருமாயைச் சூழல் பிழைத்து. 89

கடலலைத்தே யாடுதற்குக் கைவந்து நின்றுங்
கடலளக்க வாராதாற் போலப் - படியி
லருத்திசெய்த வன்பரைவந் தாண்டதுவு
கருத்துக்குச் சேயனுய்க் காண். [மெல்லாங்

*சிவனெனவே தேறினன்யா னென்றமையா
சிவனவனி வந்தபடி செப்பி-லவனிதனி [லின்றுஞ்
லுப்பெனவே கூர்மை யுருச்செய்யக் கண்டமையா
லப்படியே கண்டா யவன். 91

---

[1]உன்னுடைய தென்னு. [2]முதலாகி நின்றானும். [3]அறிவா யினுனும். *திருவாசகம். திருவண்டப்பகுதி. அடி 62.

## 18. மகாவாக்கியப் பொருண்மை

அவனிவனுய் நின்ற தவனருளா லல்ல
தெவனவனுய் நிற்கின்ற தேழா - யவனிதனிற்
ருேன்றுமரப் புல்லூரி தொல்லுகில லம்மரமா
யீன்றிடுமோ சொல்லா யிது. 92

## 19. பிறப்பின் காரணம்

முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்த தருளென்னும் – கத்தியினுன்
மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கு
மேகக் கொடியெழுங்கா ணின்று. 93

## 20. ஆன்ம லாபம்

அகளத்தி லானந்தத் தானந்தி யாயே
சகளத்திநி றையலுடன் [1]ருேன்றி - நிகளத்தைப்
போக்குவதும் செய்தான்றன் பொன்னடியென்
லாக்குவதும் செய்தா னவன். [[2]புன்றலேமே 94

[3]குற்றமறுத் தென்னேயாட் கொண்டருளித்
[தொண்டனே
றுற்ற தியானத் துடனுறைவார் - முற்றவரின்
மாட்சியுமாய் நிற்பார்யான் மற்ருென்றைக்
காட்சியுமாய் நிற்பார் கலந்து. [கண்டிடினக் 95

---

[1]தங்கி. [2]புன்தலேயில். [3]இதில் ஒருமை வினேயான பாடங்கள் உள, உரையை நோக்கின் அவை பொருந்தா.

## 21. வாழ்த்து

ஆளுடையா னெந்தரமு மாளுடையா னேயறியுந்
தாளுடையான் றொண்டர் தலைக்காவ - ளுளுந்
திருவிசலூ ராளுஞ் சிவயோகி யின்றென்
வருவிசையை மாற்றினான் வந்து. 96

தூலத் தடுத்த பளிங்கின் றுளக்கமெனத்
தூலத்தே நின்று துளங்காமற் - காலத்தாற்
றூளைத்தந் தென்பிறவித் தாளை யறவிழித்தார்க்
காளன்றி யென்மா றதற்கு. 97

இக்கணமே முத்தியினை யெய்திடினும் யானிந்த
அக்கணமே யானந்தந் தந்திடினு - நற்கணத்தார்
நாயகற்கும் நாயகிக்கும் நானடிமையெப்பொழுது
மாயிருத்த லன்றியிலேன் யான். 98

என்னை யுடையவன்வந் தென்னுடனா யென்னளவி
லென்னையுந்தன் னாளாகக் கொள்ளுதலா-லென்னை
யறியப்பெற் றேனறிந்த வன்பருக்கே யாளாய்ச்
செறியப்பெற் றேன்குழுவிற் சென்று. 99

சிந்தையிலு மென்றன் சிரத்தினிலும் சேரும்வகை
வந்தவனை மண்ணிடை [1]நான் வாராமற்-றந்தவனை
மாதினுட னெத்திறமும்வாழ்ந்திருக்கவென்பதலா
லேதுசொலி வாழ்த்துவே னின்று. 100

---

[1]நாம், நான் என்று முன் இருத்தலால் ஈற்றில் யான் என்ற பாடம் பொருந்தாது.

ஆதார மாகி அருளோடு நிற்கின்ற
சூதான இன்பச் சுகவடிவை—ஓதாமல்
உள்ளவர்கள் கூடி உணர்வொழிய நிற்பதலால்
தெள்ளவா ராதே சிவம்.

பொருளும் மனையும் அறமறந்து
போக மறந்து புலன்மறந்து
கருவி கரண மவைமறந்து
கால மறந்து கலைமறந்து
தரும மறந்து தவமறந்து
தம்மை மறந்து தற்பரத்தோடு
உருகி உருகி ஒருநீர்மை
யாயே விட்டார் உய்யவந்தார்.

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# சிவஞானபோதச் சிறப்புப்பாயிரம்

---

### நேரிசை யாசிரியப்பா

மலர்தலை யுலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருள்தீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னுன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

---

"நூல் செய்தான் பாயிரஞ் செயற்பாலனல்லன் ..., இந்தப்பாயிரஞ்செய்தார் யாவரெனில், இதன்வழி சிவஞான சித்தி என்னும் நூலைச் செய்தாரும் அவர் மாணுக்கராகிய நாற்பத்தொன்பது பெயரிற் சண்பைத் தலைவன் நாயனுரு மாகிய அருணந்தி தேவதம்பிரான்" என்பது பாண்டிப் பெருமாள் விருத்தியுரை.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

## மெய்கண்டதேவ நாயனர்

அருளிச்செய்த

# 3. சிவஞான போதம்

---

### மங்கல வாழ்த்து

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

### அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார் - தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

---

# 1. பொதுவியல்பு

---

## 1. பிரமாணவியல்

### முதற் சூத்திரம்

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
ரேற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்றோவெனின், சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாக வுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துத னுதலிற்று.

உரை வகை :— இதன் பொழிப்பு [1]உரைத்துக்கொள்க.

### முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு, உளதாய்ஒருவனொருத்தியொன் றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத் தென்றது.

ஏது :— தோற்றமு மீறும் உள்ளதன்பாலே கிடத்தலின்;

---

[1]விரித்துரைத்து.

உதாரணம் :—

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி — ஞேதாரோ
வொன்றென்றிற் ரேன்றி யுளதா யிறக்கண்டு
மன்றென்று முண்டென்ன வாய்ந்து.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனி, ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யென்றது.

ஏது :— இல்லதற்குத் தோற்ற மின்மையின், உள்ள தற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின்.

உதாரணம் :—

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும் — இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு.

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்ரு ணிற்ற லவர்வினையால் — வித்தகமாம்
வேட்டுவனு மப்புழுப்போல் [1]வேண்டுருவந் தான்
[2]கூட்டானே மண்போற் குளிர்ந்து. ]கொடுத்துக்

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
ருக்காது நின்றுளத்திற் கண்டிறைவ — ஞக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
[3]கண்டவனி னிற்றின்ருங் கட்டு.

---

[1]வேண்டுருவைத். [2]கூட்டானே, கூட்டரனே. [3]கண்டவணில்.

## மூன்றுமதிகரணம்

மேற்கோள் :- இனி, சங்காரமே முதலென்றது.

ஏது :— சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

உதாரணம் :—

ஒன்றலா வொன்று லுளதாகி நின்றவா
றென்றலா வொன்றிலவை யீறுத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு.

## இரண்டாஞ் சூத்திரம்

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்றோ வெனின், புனருற்பவம் வருமா றுணர்த்துத னுதலிற்று.

## முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு, இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் றானேயாய் நிற்கு மென்றது.

ஏது :— அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில், ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு.
உதாரணம் :—

கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள
மிட்டதொரு பேரழைக்க [1]வென்னென்ருங்—கொட்டி
யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா [2]யல்லனுமா மங்கு.

ஒன்றென்ற தொன்றேகா ணென்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளேகா—[3]ணென்றின்ரு
லக்கரங்க ளின்ரு மகர வுயிரின்றே
லிக்கிரமத்தென்னு மிருக்கு.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளொன்றென்னு
தத்துவித மென்றையு [4]மாங்கு.

அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப னின்று.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனுணையின் வருமென்றது.

---

[1]ஏனென்ருங்(கு), [2]யல்லனும், யல்லனுமாய், [3]ஒன்றின் றேல் ஒன்றின்ருள், [4]அங்கு.

ஏது :— ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினை யாகலான்.

உதாரணம் : —

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்
பேராம லூட்டும் பிரானி னுகராரே
லார்தா [1]மறிந்தணைப்பா ராங்கு.

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் [2]செய்கமலத் தாம்.

## மூன்றுமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்வான்மாக்கள் மாறிப்பிறந்து வருமென்றது.

ஏது :— தோற்றமு மீறும் உள்ளதற் கல்லது உளதாதல் இன்மையான்.

உதாரணம் :—

கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினாற்—கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

---

[1]அறிந்தணைப்பர். [2]செய்கை மலர்த்தாம்.

அரவுதன் ரூேலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது,

## நான்காமதிகரணம்

மேற்கோள் :— இனி,நீக்கமின்றி நிற்குமன்றேயென்றது

ஏது :— அவன் ஏகாநேக மிரண்டு மின்றிச் சருவ வியாபியாய் நிற்றலான்.

உதாரணம் :—

எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னி
லெங்கு முளனன் றெவற்றெவனு —மங்கு
ணவையவனன் றில்லைப் பொன்னொளிபோ லீச
னவையுடைமை யாளாநா மங்கு.

## மூன்றுஞ் சூத்திரம்

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
னுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்றோ வெனின், ஆன்மப் பிரகாசம் உணர்த்துத னுதலிற்று.

## முதலதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— ஈண்டு ‡இலதென்றலின் ஆன்மாவுளதென்றது.

பொழிப்புரை :— எவற்றினையும் அன்றன்று எனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளதாகலின் அதுவே அவ் வான்மாவா மென்றது.

உதாரணம் :—

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றொன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
தற்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

---

‡"ஈண்டு மேற்கோளொன்றாயினும் எழுவகை மதங்களை வேறுவேறு மறுக்கும் ஏதுக்க ளேழாகலான். ஆன்மா வுள தென்னு மேற்கோள் அவற்றொடு தனித்தனி கூட்டியுரைக்கப் பட்டு ஏழ்அதிகரணமாயிற்று இச்சூத்திரமென்றுணர்க. இச் சூத்திரத்திற் கூறிய ஏதுவே ஏது; மேற்கோளு மதுவே யாகலின், ஏனைச் சூத்திரங்களுட் போல வேறே ஏதுக்கூற வேண்டாமையின், இவை ஏதுவாமாறும் இவற்றான் மேற் கோளைச் சாதிக்குமாறும் விளங்க வுணர்த்தி வலியுறுத்துதல் மாத்திரையே இவ்வதிகரணங்களுட் கூறப்படுவதென்க" என்பது சிவஞானமாபாடியம்.

## இரண்டாமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— இனி எனதுடலென்றலின் ஆன்மாவுள தென்றது.

பொழிப்புரை :— என்பதி என்மனை யென்ருற் போல என்கை என்காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ் வான்மாவா மென்றது.

உதாரணம் :—

எனதென்ற மாட்டி னெனதலா தென்னு
துனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா
ணுன்னிலவை வேரு முணர்.

## மூன்ருமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— இனி ஐம்புலனறிதலின் ஆன் மாவுள தென்றது.

பொழிப்புரை :— ஐம்புலனுகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின் இவ்வைந்தினுலும் ஐம்பயனு மறிவதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

உதாரணம் :—

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனுய வஞ்செழுத்தை—யொன்றறித
லுள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லே யோர்.

## நான்காமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— இனி, ஒடுக்கமறிதலின் ஆன்மாவுள தென்றது.

பொழிப்புரை :— கனவின்கட் கனவு கண்டாமென்றுங் கண்டில மென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான் மாவா மென்றது.

உதாரணம் :—

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் [1]சென்றடங்கி—யவ்வுடலின்
வேறேன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுடல் நீயல்லை மற்று.

## ஐந்தாமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— இனிக் கண்படில் உண்டிவினை யின்மையின் ஆன்மாவுள தென்றது.

பொழிப்புரை :— ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பஞ் சீவனம் பிரகிருதிக் கின்மையின் ஓடுங்காதவிடத்து இன்பத் துன்பஞ் சீவியா நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

உதாரணம் :—

கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணுதே
யுண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு
முள்ளம்வே றுண்டா யொடுங்கா [2]துடனண்ணி
லுள்ளதா முண்டிவினை யூன்.

---

[1]சென்றொடுங்கி, [2]துடன்மன்னி.

## ஆறுமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— இனி, உணர்த்தவுணர்தலின் ஆன்மா வுளதென்றது.

பொழிப்புரை :— அவன் அறிந்தாங் கறிவனென் றறிவிக்க வறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

உதாரணம் :—

அறிந்து மறிவதே யாயு மறியா
தறிந்ததையும் விட்டங் கடங்கி—யறிந்த
தெதுவறிவு மன்றாகு மெய்கண்டா னென்றி
னதுவதுதா னென்னு மகம்.

## ஏழாமதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— இனி, மாயா வியந்திர தநுவினுள் ஆன்மாவுள தென்றது.

வேறும் ஓர் ஏது :— அவைதாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான்.

உதாரணம் :—

கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை
நிலையாவாந் தீபமே [1]போல—வலையாமன்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லது[2]தநுவாந்
தானத்தின் வேறாகுந் தான்.

---

[1]போலும், [2]தனுவாய்.

# 2. இலக்கணவியல்

## நான்காஞ் சூத்திரம்

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்றோ வெனின், இதுவு மது.

### முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு, இவ்வான்மாவாவது அந்தக் கரணங்களாயுள்ள மனோபுத்தி யகங்கார சித்தங்களி லொன்றன் றென்றது.

ஏது :— அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

உதாரணம் :—

மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கண்
மனமாதி மன்புலனி [1]னல்லன்—மனமே
லுதித்தொன்றை யுள்ள முணர்த லதனி
லுதிக்குங் [2]கடற்றிரையை யொத்து.

---

[1]அல்ல. [2]கடற்றிரையே.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதா யாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேரு
மவ்வேரும் யோதுபோ லாங்கு.

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்து—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவொடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரம னதிதெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்வான்மாச் சகச மலத்தினு லுணர்வின்றென்றது.

ஏது :— அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான்.

உதாரணம் :—

மாயா தநுவிளக்கா மற்றுள்ளங் காணுதே
லாயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றுங் காட்டம்
றன்னைமல மன்றணைதல் தான். [போற்

## மூன்றுமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ்சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனுய் நிற்குமென்றது.

ஏது :— அதுதான் மல [1]சொரூபத்தின் மறைந்து அரூபசொரூபியாய் நிற்றலான்.

உதாரணம் :—

[2]ஒன்றணையா மூலத் துயிரணையும் நாபியினிற்
சென்றணையுஞ் சித்த [3]மிதயத்து – மன்றவே
யையைந்தா [4]நன்னுதலிற் கண்டத்து வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து—மிலாடத்தே
யவ்வவ விந்திரியத் தத்துறைகள் [5]கண்டதுவே
யவ்வவற்றி [6]னீங்கலது வாங்கு.

## ஐந்தாஞ் சூத்திரம்

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே

என்பது சூத்திரம்.

---

[1]சொரூபத்திலே. [2]ஒன்றணையான். [3]இதயத்தின். [4]நன்னுதலிற் கண்டத்தின், நன்னுதலிற் கண்டத்தின், கண்டத்து நன்னுதலின். [5]கண்டடைவே. [6]நீங்கிலது.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்றோ வெனின், இவ்வான்மாக் களிடத்துத் தமது முதலுபகார முணர்த்துத னுதலிற்று.

## முதலதிகரணம்

மேற்கோள் :—ஈண்டு, ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணரு மென்றது.

ஏது :— அவற்றினுன் ஆன்மா ஒற்றித்துக் காணினல்லது அவை ஒன்றையும் விடயியா வாகலான்.

உதாரணம் :—

ஐம்பொறியை யாண்டங் கரசா யுள[1]நிற்ப
வைம்பொறிக ளுள்ள மறியாதா—மைம்பொறியிற்
காணுதேற் காணுது காணுமுளங் காணுதேற்
காணுகண் கேளா செவி.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனி, இதுவுந் தமது முதலாலே யுணரு மென்றது.

ஏது :— இவ்வான்மாத் தன்னுலே யுணரு மிந்திரியங் களைப் போலத் தானுந் தன்னை யுணராது நிற்றலான்.

[1]நிற்க.

உதாரணம் :—

மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியன்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணு வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா
ணெண்ணுன் சிவனசத்தை யின்று.

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—[1]மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு [2]மைம்புலனைக்
[3]கண்டுடனுய் மன்னுதலைக் காண்.

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை—யருளின்
றரனன்றே யில்லை யருட்கண்ணூர் கண்ணுக்
கிரவிபோ [4]னிற்குமர னேய்ந்து.

## ஆறுஞ் சூத்திரம்

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்றோ வெனின் சத்து மசத்தும் வரைசெய் துணர்த்துதனுதலிற்று.

[1]வெய்யோனிற். [2]ஐம்புலனுங். [3]கண்டுடனு நன்னுதலிற். [4]நிற்பனும்.

## முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு, அறிவின லறியப்பட்ட சுட்டு அசத்தென்றது.

ஏது :— அவைதாம் [1]பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

உதாரணம் :—

[2]அசத்தறியாய் கேணீ யறிவறிந்த [3]வெல்லா
மசத்தாகு மெய்கண்டா ணுயின் – அசத்தலாய்
நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரி[4]னவை யின்ருமா ருெப்பு.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று உணரற்பாற்று.

ஏது :— பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவ தின்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசம் இன்மை யானும்.

உதாரணம் :—

எண்ணிய சத்தன் றசத்தன்ரு மென்ருலென்
கண்ணி யுளதென்றன் மெய்கண்டா —னெண்ணி
யறிய [5]விரண்டாமசத்தாதல் சத்தா
மறிவறியா மெய்ச்சிவன்ரு ளாம்.

---

[1]பிரகாசாப் பிரகாசமா நிற்றலான். [2]அசத்தறியா. [3]தெல்லாம். [4]இவை. [5]இரண்டாய்.

[1]உணர்ப வசத்தாத [2]லொன்றுணரா தொன்றை
யுணருநீ தானுணரா [3]யாயி—[4]லுணருமுனிற்
ருனிரண்டா மெய்கண்டான் றன்ளு லுணர்தலாற்
ருனிரண்டாய்க் காணுன் றமி.

[5]பாவகமேற் ருனசத்தாம் பாவநா தீதமெனிற்
பாவகமா மன்றென்னிற் பாழதுவாம்—பாவகத்தைப்
பாவித்த ருனென்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ்.

அறிய விரண்டல்ல ஞங்கறிவு தன்ளு
லறியப் படானறிவி னுள்ளா—னறிவுக்குக்
காட்டாகி நின்ருனைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு.

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியறிவு [6]முண்டே—யதுவென்
றறிய விரண்டல்ல ஞங்கறிவு ணிற்ற
லறியுமறி வேசிவமு மாம்.



---

[1]உணர்வதசத்தால். [2]என்றுணரா. [3]யாகில், தாயின். [4]உணரும்எனில், உணருவில். [5]பாவகமென்ருன். [6]உண்டால்.

# 2. உண்மையியல்பு

## 3. சாதனவியல்

### ஏழாஞ் சூத்திரம்

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி [1]ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்றோவெனின், [2]மேலதற்கோர் புறனடை யுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டுச்,சத்தினிடத்தசத்துப்பிரகாசியா தென்றது.

ஏது :— மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

உதாரணம் :—

அந்நியமி லாமை யரற்கொன் [3]றுணர்வின்று
மந்நியமி லானசத்தைக் காண்குவனே—லந்நியமாக்
காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று.

---

[1]ஆதலிற். [2]மேலதற்கே. [3](று)அறிவின்றும்.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனி, அசத்தினுக் குணர்வின் றென்றது.

ஏது :— அது தான் நிரூபிக்கி லின்றாகலான்.

உதாரணம் :—

பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை
[1]கண்டுணர்வா ரில்லதெனக் காண்.

## மூன்றாமதிகரணம்

மேற்கோள் :— இனி, *இருதிற னறிவுள திரண்டலா வான்மா வென்றது.

பொழிப்புரை :— இவ்விரண்டினையு மறிவதாய் உபதேசி யாய் நின்ற அவ்வறிவு இரண்டன்பாலு முளதாயுள்ள அதுவே அவ்வான்மாவா மென்றது.

---

[1]கண்டுணராது.

*''ஈண்டுச் சத்தெதிர் நில்லாத அசத்துஞ் சத்துந் தம்மு ளொன்றா ஞென்றறியப் படாமையான் ஆன்மாவாலும் அறியப்படாதவழி அவை பயப்பாடின்றிச் சூனியமாய் முடியு மாகலான், இரண்டலா வான்மா இருதிற னறிவுளதேயாம்; தம்முளொன்றாஞென் றநுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையு மநுபவிக்குங் கண்போலுமென அநுமானங் கூறிக்காண்க'' - என்பது சிவஞான மாபாடியம்.

உதாரணம் :—

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
வருவுருவ மன்ருகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்ருது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் ளுெக்கு.

மயக்கம துற்றும் மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசி—லசத்துமலே
நீயறிந்து செய்வினைகள் நீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமைதான்.

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞான முள்ள [1]மணைதல்காண்— மெய்ஞ்ஞானந்
தானே யுளவன்றே தண்கடனீ ருப்புப்போற்
ருனே யுளமுளவாய்த் தான்.

## எட்டாஞ் சூத்திரம்

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்ருே வெனின், ஞானத்தினை யுணரு முறைமையினை உணர்த்துத னுதலிற்று.

---

[1]அணைதலால்.

## முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழுமென்றது.

ஏது:— மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடா வாகலான்.

உதாரணம் :—

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத் — தவஞ்செய்த
நற்சார்பில் வந்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றூர்சூழ் சொல்லுமாங் கண்டு.

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
மிசைத்து வருவினையி லின்ப — மிசைத்த
விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
மருவுவனுஞ் ஞானத்தை வந்து.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள்:— இனி, இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாயுணர்த்து மென்றது.

ஏது :— அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.

உதாரணம் :—

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய் — மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக — ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் பலத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளவாமா னீர்நிழல்போ — லில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று.

## மூன்றாமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்வான்மாக்கள் ஐயுணர்வு களான் மயங்கித் தம்மையுணராவென்றது.

ஏது :— அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.

உதாரணம் :—

பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து — பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு. [ கண்டான்

## நான்காமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேருவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையுமென்றது.

ஏது :— ஊசல்கயிறற்ருற் ருய்தரையேயாந் துணையான்.

உதாரணம் :—

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

எவ்வுருவுந் தானென்னி லெய்துவா ரில்லைதா
ளிவ்வுருவின் வேறே லிறையல்ல—னெவ்வுருவுங்
கண்போ லவயவங்கள் காணுவக் கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல்.

ஐம்பொறியி னல்லையெனு மந்த தரசிவனை
யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி
னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரி
னீங்கானை நீங்கு நினைந்து.

## ஒன்பதாஞ் சூத்திரம்

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்ரோ வெனின், ஆன்மசுத்தி பண்ணுமா றுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு, அம்முதலே ஞானக் கண்ணினுலே காண்க வென்றது.

ஏது :— அவன் வாக்குமனுதீத கோசரமாய் நிற்றலான்.

உதாரணம் :—

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னுலே தன்னையுங் கண்டு தமைக்காணு
ரென்னு மெனவறிவா ரின்று.

காட்டிய கண்ணே தனைக்காணு கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணு—காட்டிய
வுள்ளந் தனைக்காணு வுள்ளத்தின் கண்ணுய
கள்ளன்ரு னுள்ளத்திற் காண்.

### இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனி, *அசத்தாயுள்ள வன்னபேதங் களை அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞானசொரூப மென்றுணரற்பாற்று.

---

*இதனுள் ஏது சொற்பல்காமைப் பொருட்டு ஏகதேச வுருவகமாக வைத்து உடம்பொடு புணர்த்து ஓதப்பட்டது. சிவஞானமாபாடியம் பார்க்க.

உதாரணம் :—

நிற்குணனுய் நின்மலனுய் நித்தியா நந்தனுய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ
லானு வறிவா யளவிறந்து தோன்ருனே
வானே முதல்களையின் வந்து.

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட வினியுளது சத்தேகாண்—சுட்டி
யுணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனுற் பொய்விட்டுப் போம்.

கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா
யண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த
வூனத்தைத் தான்விடுமா றுத்தமனி னெண்கருட
சானத்திற் றீர்விடம்போற் ருன்.

## மூன்ருமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க வென்றது.

ஏது :— இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கெனக் கொள்க.

உதாரணம் :—

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு.

இந்துவிற் பாநுவிலி ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு—முந்தவே
காட்டாக்கிற் ரேன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாணு மோதஞ் செழுத்து.

மண்முத ளைமலர் வித்தை கலாரூப
மெண்ணிய வீசர் சதாசிவமு—நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலையதிலா மச்சிவன்ரு ணேர்.

---

## 4. பயனியல்

### பத்தாஞ் சூத்திரம்

அவனே தானே யாகிய வந்நெறி
யேக ஞகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னெடு வல்வினை யின்றே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்ரே வெனின், பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்துத னுதலிற்று.

### முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்தேகஞகி நிற்க வென்றது.

ஏது :— அவ்வாறுநிற்கவே யானென தென்னுஞ் செருக் கற்று அவனது சீபாதத்தை யணையு மாகலான்.

உதாரணம் :—

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத
ருனெனவொன்றின்றியேதானதுவாய்-நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானு மிறை.

மேற்கோள் :— இனி, இறைபணி வழுவாது நிற்க வென்றது.

ஏது :— அவனருளாலல்லது ஒன்றையுஞ்செய்யானுகவே அஞ்ஞானகன்மம் பிரவேசியாவாகலான்.

உதாரணம் :—

நாமல்ல விந்திரியம் நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமு மரனுடைமை—யாமென்னி
னெத்தநுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை
முற்செயவினை யுந்தருவான் முன்.

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனுய்ச்—சார்ந்தடியார்
தாந்தானுச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்து
லாய்ந்தார்முன் செய்வினையு மாங்கு.

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபான்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையுட னில்லாது மற்றவன்றுன் மெய்ப்பொருளே
யாயவத னுலுணரு மச்சு.

ஏது :— இவ்வான்மாக்கள் அவனையின்றி யமைந் தொன்றையும் விடயியாவாகலான்.

உதாரணம் :—

ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தையும்போ னின்றுணரு மாகலா — னைந்தினையு
மொன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மொன்றொன்றாப் பார்க்கு முணர்ந்து.

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான் விளைந்த பொற்பினு — னேகமா
யுள்ளத்தின் கண்ணுனு னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணுனே வுற்று.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனிப், பத்தியினுன் மறவாதேத்த ஆவனது சீபாதத்தை யணையுமென்றது.

ஏது :— அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்.

உதாரணம் :—

அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணுர்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீச — னருட்கண்ணுற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோ
னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினு—மெண்ணி
யரனடி யோர்பவ ரைம்புலனிற் சென்று
[1]மவர்திற நீங்கா ரதற்கு.

சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணி
[2]னிதமித்தல் பாசத்தி லின்றிக்—கதமிக்
கெரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தி
னருகணையார் சத்தணைவா ராங்கு.

## பதினொன்றாஞ் சூத்திரம்

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே

என்பது சூத்திரம்.

## வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்றோ வெனின், பரமேசுரனது சீபாதங்களை யணையுமா றுணர்த்துத னுதலிற்று.

## முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு, அவ்னும் அவற்றது விடயத்தை யுண்ருமென்றது.

---

[1]அரனடி. [2]இதமிருத்தல்.

ஏது :— இவ்வான்மாக்கள் அவனையின்றி யமைந் தொன்றையும் விடயியாவவாகலான்.

உதாரணம் :—

ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தையும்போ னின்றுணரு மாகலா — னைந்தினையு
மொன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மொன்றொன்றாப் பார்க்கு முணர்ந்து.

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான் விளைந்த பொற்பினு — னேகமா
யுள்ளத்தின் கண்ணுனு னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணுனே வுற்று.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனிப், பத்தியினுன் மறவாதேத்த ஆவனது சீபாதத்தை யணையுமென்றது.

ஏது :— அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்.

உதாரணம் :—

அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணுர்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீச — னருட்கண்ணுற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோ
னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து — தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் ருன்.

நசித்தொன்றி னுள்ளம் நசித்தலா லொன்ரு
நசித்திலதே லொன்ருவ தில்லை — நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்ரு மீசன் கழல்.

பொன்வாண்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் [போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோன் — முன்வாண்
மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

## பன்னிரண்டாம் சூத்திரம்

செம்மலர் நோன்ருள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே

என்பது சூத்திரம்.

### வார்த்திகப் பொழிப்பு

கருத்துரை :— என்னுதலிற்ருே வெனின், அசிந்திதனுய் நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு வழிபடுமா றுணர்த்துத னுதலிற்று.

## முதலதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு, ஆணவம் மாயை கான்மிய மென்னு மலங்களைக் களைக வென்றது.

ஏது :— அவைதாம் ஞானத்தையுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்து மாகலான்.

உதாரணம் :—

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு
மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
வஞ்ஞானங் கட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள் :— இனிச், சிவபத்தர்களோ டிணங்குக வென்றது.

ஏது :— அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்து வராகலான்.

உதாரணம் :—

மறப்பிசதுந் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரு
மெய்த்தவரை மேவா வினை.

## மூன்றுமதிகரணம்

மேற்கோள் :— இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக வென்றது.

ஏது :— அவன்மற் றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாத விடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.

உதாரணம் :—

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற் — றன்னுணரு
நேசத்தார் தம்பா னிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றாம் பதி.

கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமாற் — கண்டவுருத்
தானதுவா யன்றானுன் றானதுவாய்த் தோன்றானே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

## நான்காமதிகரணம்

மேற்கோள் :— இனி, இவ்விடங்களின் வழிபடுக வென்றது.

ஏது :— நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனு மாகலான்.

உதாரணம் :—

அதுவிது வென்ற ததுவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதுவு மல்லான் — பொதுவதனி
லத்துவித மாத லகண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் றொழு.

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா — வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றொழு.

தன்னை யறிவித்துத் தான்றானுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது — முன்னவனே
தானேதா னுச்செய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

---

## நூற்கு அதிகாரிகள்

சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற் — சிவமுண்டா
மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந்நூன் மும்மை மலர்க்கு.

---

## சிறப்புப்பாயிரம்

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல் — சிந்தைசெய்து
தானுரைத்தான்மெய்கண்டான் றாரணியோர்
வேதுதிருட் டாந்தத்தா லின்று. [தாமுணர

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# சூர்ணிக்கொத்து

## முதற்சூத்திரம்

1. சகம் பிறப்பு இருப்பு இறப்பாகிய முத்தொழிலை யுடையது.
2. அது அரனாலே உடையது.
3. முதல்வன் ஒருவனே.

## இரண்டாஞ்சூத்திரம்

1. அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.
2. உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.
3. உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்.
4. தன் தாதான்மிய சத்தியோடு இயைந்து நிற்பன்.

## மூன்றாஞ்சூத்திரம்

1. இல்லையென்கின்ற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.
2. எனது உடல் என்று பொருட்பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிருண்டு.
3. ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கும் வேறாய் உயிர் உண்டு.

4. கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே அக் கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

5. நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுக்கு வேறாய் உயிர் உண்டு.

6. மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

7. எல்லாத்தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கை யினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

## நான்காஞ்சூத்திரம்

1. அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

2. மலமறைப்பால் உயிருக்கு அறிவு விளக்கம் இல்லை.

3. உயிர் மூன்றவத்தைப்படும்.

## ஐந்தாஞ்சூத்திரம்

1. உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும்.

2. அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

## ஆறாஞ்சூத்திரம்

1. உயிரறிவினாலே அறியப்பட்டனவெல்லாம் அழியும்.

2. அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

## ஏழாஞ்சூத்திரம்

1. அரன் பாசத்தை அநுபவியான்.
2. பாசம் அரனை அநுபவியாது.
3. உயிர் அவ்விரண்டையும் அறியும்; அநுபவிக்கும்.

## எட்டாஞ்சூத்திரம்

1. உயிருக்கு நல்லறிவு தவத்தினாலே வரும்.
2. உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.
3. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது.
4. உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.

## ஒன்பதாஞ்சூத்திரம்

1. உயிர் அரன் ஞானத்தினாலே அரனைக் காணும்.
2. உயிர் பாசத்திலே பற்றற்றால், அரன் வெளிப்படுவன்.
3. பஞ்சாக்ஷரசெபம்பண்ணினால், வாசனாமலம் போம்.

## பத்தாஞ்சூத்திரம்

1. அரனுடன் ஒன்றாகி நில், மலம் நீங்கும்.
2. உன்றொழிலெல்லாம் அரன் பணி என்று கொள், மாயையோடு கூடிய வினை இன்றாம்.

## பதினொராஞ்சூத்திரம்

1. ஞானிக்குவருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

2. அரனை மறவாமல் அன்பு செய்தால் அவனிடத்திலே ஒன்றுபட்டு இன்புறுவன்.

## பன்னிரண்டாஞ்சூத்திரம்

1. மும்மலங்களையுங் களைக.

2. சிவஞானிகளுடனே கூடுக.

3. சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக.

4. வழிபடாமையை ஒழிக.

ஆகக் கூடுதல் சூத்திரம் 12-க்குச் சூர்ணிக்கொத்து 39.

முற்றுப்பெற்றது.

உ

குருபாதம்

# சிவஞானபோதம்

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினையின்மையினுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே.

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

முற்றும்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

## திருத்துறையூர் அருணந்திதேவ நாயனுர்

அருளிச்செய்த

# சிவஞானசித்தியார் பரபக்கம்

### கணபதி வணக்கம்

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
நால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
தருமொருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
யிரவுபகலுணர்வோர் சிந்தைத்
திருக்கோட்டு மயன்றிருமால் செல்வமுமொன்
றோவென்னச் செய்யுந் தேவே.

### பாயிரம்

### சிவ வணக்கம்

ஆதிநடு வந்தமிலா வளவில் சோதி
யருண்ஞான மூர்த்தியா யகில மீன்ற
மாதினொடு மொருபாகத் தடக்கி வானோர்
மகுடகூ ளாமணியாய் வையம் போற்றப்

பாதிமதி யணிபவளச் சடைகடாழப்
படரொளியம்பலத்தாடும் பரனார்பாதத்
தாதுமலி தாமரைகள் சிரத்தே வைத்துத்
தளராத பேரன்பு வளரா நிற்பாம். 1

### சத்தி வணக்கம்

ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்ப
மிலயமொடு போகமதி கார மாகித்
தேசருவ மருவுருவ முருவ மாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வ மாகிப்
பேசரிய வுயிரையெல்லாம் பெற்று நோக்கிப்
பெரும்போக மவையளித்துப்பிறப்பினையு
[மொழித்திட்
டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். 2

### விநாயகர் வணக்கம்

இயம்புநூ லிருந்தமிழின் செய்யு ளாற்று
லிடையூறு தீர்ந்தினிது முடிய வேண்டித்
தயங்குபே ரொளியாகி யெங்கும் நின்ற
தலைவனார் மலைமாது தன்னோ டாடிப்
பயந்தவைங் கரநாற்றோண் முக்கணிரு பாதப்
பரியவொரு நீள்கோட்டுப் பெரிய பண்டிக்
கயந்தனடிக் கமலங்க ணயந்து போற்றிக்
கருத்திலுற விருத்திமிக்க காதல் செய்வாம். 3

## குமாரக்கடவுள் வணக்கம்

அருமறையா கமமங்க மருங்கலைநூ றெரிந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங்
[குருவை
திருமறைமா முனிவர்முனி தேவர்கள்தந் தேவன்
சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர்
பெருமறையார் கழல்வீரர்வீரன் கையிற் [தெய்வம்
பூநீர்கொண் டோவாது போற்றுமடி யவர்கள்
கருமறையா வகையருளிக் கதிவழங்குங் கந்தன்
கழலிணைகளெஞ்சிரத்திற்கருத்தில்வைப்பாம்.

## குரு வணக்கம்

பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவர்இ தயகமல முகைக ளெல்லாங்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தருட்கதிரோன்
விண்ட மலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணை மேவு
மெய்க்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர் தாழச் சிரத்தே வாழும்
பொற்பாத மெப்போதும் போற்றல்
[செய்வாம். 5

## அவையடக்கம்

மாலயன்மா மறையறியா வாதி மார்க்கம்
வையகத்தா கமவேத மற்று முள்ள
நூலையெல்லா முணர்ந்திறைவன் கழலே நோக்த
நோன்மையருந் தவர்முன்யா னுவலு மாறு

வேலையுலா வுந்திரைகள் வீசி யேறி
வேறேழு மொன்ருகி நின்ற போது
சாலவுமான் குளப்படியிற் றங்கி நின்ற
சலமதுதா னேரென்னுந் தன்மைத் தாலோ.

## இதுவுமது

நீடுபுக ழுலகுதனின் மைந்தர் மாதர்
நேயமொடு தாம்பயந்த புதல்வர் வாயிற்
கூடுமொழி மழலையொடு குழறி யொன்றுங்
குறிப்பரிதா யிடினுமிகக் குலவிப் போற்றி
மாடுநமக் கிதுவென்று கொண்டு வாழ்வார்
அதுபோல மன்னுதமிழ்ப் புலமை யோரென்
பாடுகவிக் குற்றங்கள் பாரா ரிந்நூல்
பாராட்டா நிற்பர்அருட் பரிசி னலே. 7

## நூற்சிறப்பு

சுத்தவடி வியல்பாக வுடைய சோதி
சொல்லியவா கமங்களெலாஞ் சூழப் போயு.
மொத்துமுடி யுங்கூட வோரி டத்தே
யொருபதிக்குப் பலநெறிக ளுளவா றற்போற்
பித்தர்குண மதுபோல வொருகா லுண்டாய்ப்
பின்ஞெருகா லறிவின்றிப் பேதையோராய்க்
கத்திடுமான் மாக்களுரைக் கட்டிற் பட்டோர்
கனகவரை குறித்துப்போய்க் கடற்கே
[வீழ்வார். 8

## நூற்கு அதிகாரியும் நூல்வழியும் - நூற்பெயரும்

போதமிகுத் தோர்தொகுத்த பேதை மைக்கே
பொருந்திஞே ரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
வேதுநெறி யெனுமவர்கட் கறிய முன்ஞ
ளிறைவனரு ணந்திதனக் கியம்ப நந்தி
கோதிலருட் சனற்குமா ரர்க்குக் கூறக்
குவலயத்தி னவ்வழியெங்குருநா தன்கொண்டு
தீதகல வெமக்களித்த ஞான நூலைத்
தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி யென்றே. 9

## நூற் கருத்து

இறைவனையு மிறைவஞ லியம்பு நூலு
மீண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி
முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லா
மூதுலகி லெமக்கியன்ற முயற்சி யாலே
சிறையுலவும் புனல்நிலவித்தோன்றும்பேய்த்தேர்ச்
செய்கைபோ லுண்டாயபொய்கொண்மார்க்கத்
துறைபலவுங் கடாவிடையாற்சொல்லிப் போக்கித்
துகள்தீர இந்நூலிற் சொல்ல கிற்பாம். 10

## நூல்

### உலகாயதன் மதம்

இந்திர புரோகித னியம்புமொரு நூலின்
றந்திர மெஞதறி விஞேடரு ளிலாமற்
சந்தணை புயத்துமண மாலைக டயங்க
வுந்தியுல கத்திலுல காயத னுரைப்பான். 1

ஈண்டளவை காட்சிமன மாதியிரு மூன்றாய்
வேண்டுமனு மானமுத லானபல வேண்டா
பூண்டபொருள் பூதமவை புகல்கடின சீதந்
தீண்டரிய வெம்மைசல னத்திெனாடு சேர்வே. 2

சாற்றுபெய ரானவை தலம்புனல் கனற்பின்
காற்றுமென லாமிவை கலந்தகுண மோதி
ஞற்றமிர தம்முருவ நற்பரிச மாகும்
போற்றுமிவை நித்தவியல் பாமிவை புணர்ப்பே. 3

ஒத்துறு புணர்ச்சியி னுருக்கள்பல வாகும்
வைத்துறு கடாதிபல மண்ணின்வரு மாபோற்
புத்திகுண நற்பொறி புலன்களிவை யெல்லா
மித்தில்வரு நீரினி லெழுங்குமிழி யொத்தே. 4

பூதமதி னென்றுபிரி யப்புல னிறக்கு
நீதியினி னிற்பன நடப்பனவு முற்போ
லோதும்வகை யாகியுறு காரிய முலந்தா
லாதியவை யாமிதனை யறிவதறி வாமே. 5

இப்படி யன்றிக் கன்ம
முயிரிறை வேறுண் டென்று
செப்பிடு மவர்க்கு மண்ணோர்
செய்திடுங் குற்ற மென்னே
வொப்பிலா மலடி பெற்ற
மகனொரு முயற்கொம் பேறித்
தப்பிலா காயப் பூவைப்
பறித்தமை சாற்றி னாரே. 6

செய்திடுங் கன்ம மெல்லாஞ்
செய்தவர் தம்மைப் பற்றி
யெய்திடு மென்னி னிங்கே
மாய்ந்திடு மேய்வ தெங்ஙன்
மெய்தரு தூலங் கெட்டுச்
சூக்கமாய் மேவு மென்னி
லையனே தீபம் போனு
லதனொளி யாவ துண்டோ. 7

மாய்ந்துபின் வயலி லிட்ட
வைதழை பலிக்கு மாபோ
லேய்ந்திடுங் கன்ம மென்னி
லிட்டிடத் திசையு மேனி
யோய்ந்துவந் தவரை யுண்ணப்
பண்ணுஞ் சோறுதரத் தற்றால்
வாய்ந்திடும் பலம் வயிற்றிற்
கொண்டிடும் வழக்கு வைத்தாய். 8

உருவமும் உணர்வுஞ் செய்தி
யொத்திரா கன்ம மென்னின்
மருவுகை விரல்க டம்மின்
வளர்வுடன் குறைவுண் டாகி
வருவதிங் கென்ன கன்மஞ்
செய்துமுன் மதியி லாதாய்
பெருகுபூ தங்க டம்மின்
மிகுகுறைப் பெற்றியாமே. 9

இன்பொடு துன்ப மெல்லா
        மெய்துவ கன்மமென்னி
னன்புனல் சந்த ஞதி
        நணுகவு மணுக வொண்ணு
மின்பொலி யழலி ேைடு
        மேவவு நன்மை தீமை
யென்செய்த தியம்பி டாய்நீ
        யிவையெலா மியல்ப தாமே.            10

காயத்தின் குணம தன்றிக்
        கண்டதான் மாவுண் டாயின்
மாயத்திற் சொல்லி டாதே
        மனமுத லாறி னுக்கு
நேயத்த தாக வேண்டு
        மன்றியே நிகழ்த்து முண்மை
தேயத்தின் முயற்கொம் பெல்லே
        செப்புவோர் செய்தி யாமே.            11

அருவமே இறைவ ஞகி
        லறிவின்ரு காய மாகு
முருவமே யென்னிற் பூதக்
        கூட்டத்தி ஞெருவ ஞகு
மருவிய விரண்டுங் கூடி
        நிற்பவ னென்னின் மண்மே
லிருவிசும் பொருகல் லேந்தி
        நிற்குமோ வியம்பிடாயே.            12

பூதத்தே யன்ன மாகி
யன்னத்தா லுடம்பு புத்தி
பேதித்தே மனமு மாகிப்
பிரிந்தமை திருந்த வின்று
வேதத்தே யுரைக்க வென்னே
மேதினி யோர்க ளெல்லாங்
கேதத்தே வீழ்ந்து வேறு
நெறியல கேட்கு மாறே. 13

போகத்தை மண்ணிற் கண்டு
விட்டுப்போய் விண்ணிற் கொள்ள
மோகத்த ராகி யல்லன்
முயன்றுழன் மூட ரெல்லாந்
தாகத்திற் றண்ணீர் கண்டு
விட்டுப்போய்த் தண்ணீர்கேட்டுச்
சோகித்தே யுண்ணவெண்ணித்
துயருறு வார்க ளந்தோ. 14

வாழவே வல்லை வாமி
வலக்கைதா வென்னு யிர்க்குத்
தோழனீ யுன்னையொப்பார்
சொல்லிடி னில்லை கண்டாய்
கோழைமா னுடர்தீ தென்னுங்
கொலைகள வாதி கொண்டே
சூழும்வார் குழலார் மொய்ப்பச்
சுடரெனத் தோன்றி னுயே. 15

ஈசனு ரயனூர் மாலோ
டிந்திரன் றெரிவை மார்பாற்
பேசொணு வகைக ளெல்லாஞ்
செய்தன்றே பெரியோ ராஞு
ராசையா லவர்போ னுமு
மாகவே வேண்டு மாயின்
வாசமார் குழலா ரோடும்
வல்லவா கூடி வாழ்மின். 16

தையலா ரூட லாடத்
தாமவ ரோடுங் கூடிச்
செய்யதா மரையை வென்ற
சீறடி செம்பஞ் சூட்டி
மெய்யெலாம் பாதஞ் சூடும்
வேடத்தார் மெய்யிற் கூடா
மையுன்மா னுடர்பொய்ம் மார்க்க
வேடத்தே மாய்கின்றூரே. 17

வாசமார் குழலி னூர்கண்
மணியல்குற் றடத்தே மூழ்கி
நேசமார் குமுதச் செவ்வா
யமுதினை நிறைய வுண்டு
தேசுலா மணிமென் றேண்மேற்
சேர்ந்துவீற் றிருந்தி டாதே
மாசுலா மனத்தோ ரெல்லா
மறுமைகொண் டழிவர் மன்னே. 18

மதிநிலா நுதலா ரோடு
மணிநிலா முன்றி லேறி
முதிர்நிலா வெறிப்பச் செவ்வா
யிளநிலா முகிழ்ப்ப மொய்த்த
கதிர்நிலா வடங்கொள் கொங்கைக்
கண்கள் மார்பகல மூழ்கும்
புதுநிலா வியநன் போகம்
விடுவர்புன் சமயத் தோரே. 19

ஊடுவ துணர்வ துற்ற
கல்விமங்கையரை யுள்கி
வாடுவ தடியில் வீழ்ந்து
வருந்துவ தருந்த வம்பின்
கூடுவ துணர்வு கெட்டுக்
குணமெலாம் வேட்கை யேயாய்
நீடுவ தின்ப முத்தி
யித்தினின் ருர்கள் முத்தர். 20

வீட்டினை யுளதென் ருேடி
மெலிவதிங் கென்னை வீடு
காட்டுவோர் கண்டோர் கேட்டோர்
கரியவை யுண்டேற் காட்டீர்
நாட்டினி லரச ஞணைக்
கிசைய்வே நடந்து நாளு
மீட்டிய பொருள்கொண் டிங்கே
யின்பத்து ளிசைந்தி டீரே. 21

## உலகாயதன் மத மறுதலை

உள்ள தாவது கண்ட தென்றுரை
　　கொண்ட தென்னுல கத்துநீ
பிள்ளை யாய்வளர் கின்ற நாளுனைப்
　　பெற்ற தாயொடு தந்தையைக்
கள்ள மேபுரி கால ஞருயி
　　ருண்ண வின்றொரு காளை யாய்
மெள்ள வேயுள ரென்று கொண்டு
　　விளம்பு மாறு விளம்பிடே. 1

இடித்து மின்னி யிருண்டு மேக
　　மெழுந்த போதிது பெய்யுமென்
றடுத்த தும்மகில் சந்த முந்தி
　　யலைத்து வார்புன லாறுகொண்
டெடுத்து வந்திடமால்வ ரைக்க
　　ணிருந்து கொண்டல் சொரிந்த தென்று
முடித்த தும்மிவை காட்சி யன்றனு
　　மான மென்று மொழிந்திடே. 2

காண்ட லேயனு மான மாவதுங்
　　காட்சி முன்னதுங் காட்சியேற்
பூண்ட பூத வுடம்பி னுள்ளெழு
　　போத மென்கொடு கண்டனை
மாண்ட வாயின் மனங்கொண் ஞான
　　முணர்ந்த தும்மனு மானமென்(று)
ஈண்டு பூத மியைந்த திவ்வுட
　　லென்ப தென்பிர மாணமே. 3

பழுதி லாமறை கண்ட நூல்பழு
　　தின்றி யுண்டது பாரின்மேன்
மொழிவர் சோதிட முன்னி யின்னது
　　முடியு மென்பது முன்னமே
யழிவி லாதது கண்ட னம்மவை
　　யன்றி யுஞ்சில வாக மங்களி
னெழுதி யோர்படி யேன்று கொண்டிரு
　　நிதியெ டுப்பது மெண்ணிடே. 4

பூத மானவை நித்த மென்று
　　புகன்ற தென்னை யுருக்களா
யாத லோடழி வாகு மாதலி
　　னுக்கு வோர்வர வேண்டிடுங்
காத லோடு கடாதி மண்கொ
　　டியற்று வோருளர் கண்டனஞ்
சீத நீரி லெழுந்த கொப்புள்
　　நிகழ்ந்த மாருதச் செய்கையே. 5

நீரின் வந்தெழு கொப்பு ணீரது
　　வாயெ ழுந்நிகழ் பூதமு
மோரின் வேறுணர் வாயெ ழாவவை
　　பூத மாகி யுதித்திடுந்
தேரி னூறடை காய்செ றிந்தவை
　　சேர வேறு சிவப்பெழும்
பாரி னிற்பிரி யாது புந்தி
　　பழிப்பு டம்பு கிடக்கவே. 6

கூறு சேர்வையின் வந்த போது
சிவப்பெ னுங்குண மொன்றுமே
வேறு வேறு புலன்கு ணங்க
ளுடற்கண் வந்து விளைந்ததெ
னூறு காயடை கூடும் வேறொரு
வன்ற ளுலென னேக்கிநீ
தேறு பூத செயற்கும் வேண்டு
மொருத்த னென்று தெளிந்திடே. 7

ஆன வைம்பொறி யுண்டி நித்திரை
யச்ச மைதுன மாதியா
லூனின் வந்திடு முன்பி லாதவை
யென்று ரைக்கி னுலூதைபோல்
வானின் வந்திடு மாத ராணலி
யாகி மானுட ராதியா
யோனி பன்மையு மின்று பூத
முறும்பு ணர்ச்சியொர் தன்மையே. 8

ஐந்து நான்கொரு மூன்றி ரண்டுட
ளென்ற தாயுட லங்களின்
வந்தி டாவுணர் விந்தி யங்களும்
வன்ன பன்மையு மின்மையாம்
புந்தி யோடிய வன்ன போக
குணங்கள் பூத புணர்ச்சிதான்
தந்தி டாதிவை பேத மாயிட
வந்த வாவினை தந்தவா. 9

அறிவு பூதம தென்னின் வேறு
புறத்த றிந்தமை கண்டிலஞ்
செறிவு தானுட லத்தெ னிற்சவ
மான போதுட றேருமோ
குறிகொ ளாதுடல் வாயு வானது
கூடி டாமையி னென்னினீ
பிறித ராதுயிர் நிற்க ஞான
முறக்க மென்பிற வாததே. 10

அறிவு டற்குண மென்னி லானைய
தாதி யந்த மெறும்பதா
உறுமு டற்பெரி தான வற்றி
னுதித்தி டும்பெரி தாகவே
சிறுவு டற்செறி ஞான முஞ்சிறி
தாயி டும்பரி ணுமமும்
பெறுமு டற்சிறி தாவ தென்பெரி
தாவ தென்சில பேசிடே. 11

போத மும்மெலி வாகி யும்மலி
பூத மானவை கூடலிற்
பேத மோடு பெருத்து டற்கள்
சிறுத்த பெற்றிமை யொன்றிடி
ஞேது டற்பெரி தான வுஞ்சிறி
தாயி டாசிறி தானவு
நீதி யிற்பெரி தாயி டாமுன
முள்ள தன்மையி னீடுமே. 12

இயல்பு காணிவை யென்னின் வேறிசை
பெண்ணொ டாணிரு தன்மையாஞ்
செயல்கொ ளாவிவர் செய்தி காரண
மாக வந்து செனிப்பதெ
னியல்ப தாமுடல் பூத காரிய
மாவ தும்மிலை யாகுமான்
மயல தாம்வினை யாலொ ருத்தன்
வகுத்த தன்மையின் வந்ததே. 13

கார ணம்மவை யென்ற தென்னை
கடாதி போனிகழ் காரியம்
நேர ணைந்து சமைந்து நின்றிடு
மென்ப தும்மது நேர்கிலோம்
போர ணைந்திடு மொன்றொ டொன்று
பொருந்து மாயின் வருந்தியும்
நீர ணைந்தொரு தீயி னின்றது
கண்ட தாயி னிகழ்த்திடே. 14

பூத மேவு புணர்ச்சி யேபுரி
காய காரண மாகுமேற்
காத லாணொடு பெண்ணு மேவு
புணர்ச்சி காரண மாவதெ
னோதி யேயுல கத்தி லாணொடு
பெண்ணு மாயணை காரிய
நாத னாயகி யோடு கூடி
நயந்த காரண மென்பரே. 15

கந்தம் வெம்மை கலந்தி டும்புனல்
கன்ம மென்செய்த தென்றனே
சந்த னந்தழல் சார நீரிரு
தன்மை யுற்றிடு மாறதோர்
தந்த கன்ம மிரண்ட ணேந்து
தருஞ்சு கத்தொடு துக்கமுஞ்
சிந்தி யாவெழு சீவ னுற்றிடும்
வேறு டற்கிலே தேறிடே. 16

இன்ப மெய்தி யிருந்து நீவினே
யில்லே யிங்கியல் பென்றிடிற்
றுன்ப மெய்திடு வானென் மற்றிது
சொல்லி டாய்சொல வில்லேயேன்
முன்பு செய்திடு கன்ம மென்றறி
கன்ம மும்முதல் வன்னறிந்
தன்பி னுலுறு விக்கு மப்பய
னுங்க மைப்பொ டநாதியே. 17

அநாதி யேலமை வின்றெ னின்மல
மாயை கன்ம மணுச்சிவ
னநாதி கன்ம மணுக்கள் செய்ய
வறிந்து கன்ம முடற்செயா
வநாதி காரிய மாமு டல்க
ளசேத னம்மணே யாவறிந்
தநாதி யாதி யமைக்க வேண்டு
மமைப்பி னேடு மநாதியே. 18

காணொ ணாகர ணங்க ளுக்குயிர்
கண்டி டாமையி னின்றெனிற்
காணு மோகடங் கண்ட கண்ணினைக்
கண்டு நிற்பதுங் கண்ணதே
காணொ ணாதுயிர் தானு மிப்படிக்
கண்டி டுங்கர ணங்களைக்
காணொ ணாகர ணங்க ளுக்குயி
ருண்மை யாவதுங் கண்டிடே. 19

அங்கி யானது தானு மொன்றை
யணைந்து நின்று நிகழ்ந்திடும்
பங்கி யாதுயிர் தானு மிப்படிப்
பற்றி யல்லது நின்றிடா
தெங்கு மார்தயி லத்தை யுண்டெழு
தீப மான தெரிந்திடு
மங்க தாமுட னின்று கன்ம
மருந்தி யாருயி ராவதே. 20

அறிவு தானுட லத்தின் வேறது
வாயி றந்து பிறந்திடி
னறிவு முன்புள திங்கு வந்து
மறிந்தி டாமைய தென்னெனி
னறிவை யோகன வத்து நீநன
வத்தை யன்றுத ரத்திருந்
தறியு மவ்வறி வோம யக்கறி
வாத லாலறி யாதுகாண். 21

இறந்தி டும்மறி வேபி றந்திடு
மென்ப திங்கிசை யாதெனி
னுறங்கி டும்பொழு தின்றி நின்றுணர்
விங்கு தித்திடு மாறதோர்
பிறந்த விவ்வுடல் போக வேறுடல்
பின்பு வந்தமை பேசிடின்
மறந்தி டுங்கன வத்தில் வேறுடல்
வந்த வாறு மதித்திடே. 22

கரணம் வாயு விடத்த டங்க
வடங்கி வந்தெழு காரிய
மரண மான விடத்து மற்றிவை
மாய்ந்து பின்பு வருஞ்செயல்
கிரண மார்கலை கெட்டு திப்ப
விறப்பி னோடு பிறப்பையுந்
தரணி யோர்கண் மதிக்கு ரைப்ப
ருயிர்க்கு மிப்படிச் சாற்றிடே. 23

பூத மானவை காரி யங்கள்
பொலிந்து மன்னி யழிந்திடு
மாத லாலொரு நாத னிங்குள
னென்ற றிந்துகொ ளையனே
பேத மான கடாதி மண்ணினில்
வந்த வாறு பிடித்திடிற்
கோதி லாத குலால னல்வரு
செய்கை யென்று குறிப்பரே. 24

வேத ஞரண ஞர ணம்மறி
யாவி ழுப்பொருள் பேதைபாற்
றாத ஞயிரு கான டந்திடு
தோழன் வன்மைசெய் தொண்டனுக்
காத லாலடி யார்க ளுக்கெளி
யான டிக்கம லங்கணீ
காத லாலணை யீண்டன் வேண்டின
விம்மை யேதருங் கண்டிடே. 25

பொன்கு லாவு மணிக்க லன்கண்
மலம்பு கிற்கை பொருந்திடா
மின்கு லாமிடை யார்க டாமுல
கத்தின் வேட்கை விடும்பொருள்
புன்பு லான்மல மூத்தி ராதி
பொசிந்து நாறு புலைக்கல
மென்கொ லாமிவர் மேல்வி ழுந்த
திவற்றி னென்பெற வெண்ணியே. 26

தோலி ரத்த மிறைச்சி மேதை
யெலும்பு மச்சை சுவேதநீ
ராலெ டுத்த முடைக்கு ரம்பை
யழுக்கி ஞேடு புழுக்குழா
நூலொ ழுக்கிடு கோழை யீர
னுரைக்கு மூத்திர பாத்திரஞ்
சேல டர்த்தகண் ஞர்க ளென்பது
தேர்ம லத்திர டிண்ணமே. 27

ஆசை யுற்றுழல் சூக ரங்க
ளசுத்த மேவி யளைந்துதின்
றேசு கித்தன வாயி டுஞ்சுக
மேழை யோடுறு மின்பநீ
மாச தற்றொளிர் நித்த சுத்த
வளந்த ருஞ்சுக வாரிகா
ணீச னுக்கடி மைத்தி றத்தி
னியைந்து நாம்பெறு மின்பமே. 28

குரோத மேகுண மாயி ருந்தவர்
சாந்தி நன்மை குறிக்கொளா
ரராக மேயணை வார்க ளாசை
யறுத்த வின்ப மறிந்திடார்
பராவு தேவர் பராவு தூய
பராப ரன்னடி பற்றிநீ
விராவு மெய்யில் விடாத வின்பம்
விளைந்தி டும்மிது மெய்ம்மையே. 29

காம மாதி குணங்க ளைச்சுக
மென்று கொண்டனை காதலாற்
றூம மாரழ லங்கி சீத
மலிந்த போது சுகந்தரு
நாம மார்தரு சீதம் வெம்மை
நலிந்த போது தருஞ்சுகஞ்
சேம மாகிய வின்ப மாமிகு
தெய்வ நன்னெறி சேரவே. 30

படிக்கு நூல்கள் சிவாக மம்பசு
பாச மோடு பதித்திற
மெடுத்தி யம்புவ தீசன் வார்கழ
லேத்தி டுந்தொழி லென்றுமே
விடுத்தி டும்பொருள் காம மாதிகள்
வேண்டி டும்பொரு ளீண்டருள்
முடித்து மும்மலம் விட்டு நின்மல
ஞேடு நின்றிடன் முத்தியே. 31

## 2. பௌத்தரிற் சௌத்திராந்திகன் மதம் I

நீதியார் வேத நூலி
னெறியலா வறங்க ளூ
மோதியோ ரைந்து சீல
முடையரா யுடல மூடிப்
போதிநீண் மரத்தின் மேவு
புத்தர்நால் வரினும் வைத்துச்
சாதிதா னிலாத கொள்கைச்
சௌத்திராந் திகன்முன் சாற்றும். 1

முழுதுணர்ந் துலகிற் கோறன்
முதற்செயன் முனிந்து மற்றும்
பழுதிலா வருளி ஞலே
பரதுக்க துக்க ஞகித்
தொழுதுவா னவரும் போற்றத்
தொல்பிட கங்க ளான
வழுவிலா கமங்கள் சொன்ன
மாதவ ஞத ஞவான். 2

மருவிய வளவை காட்சி
மானமென் றிரண்டி வற்றுற்
கருதிய பொருள்கண் ஞான
ஞேயமாய்க் கணத்திற் பங்கம்
வருமுரு வருவம் வீடு
வழக்கென நான்க தாகித்
தருமவை யொன்றி ரண்டாய்த்
தாம்விரிந் தெட்டி னுமே. 3

உருவியல் பூத மோடங்
*குபாதான ரூப மாகும்
அருவியல் சித்தங் கன்ம
மென் றிரண்டாகும் வீட்டின்
மருவியல் குற்றங் கந்த
மெனவழங் கிடும்வ ழக்கி
னிருவிய லுள்ள தோடங்
கில்லாத்ா மியம்புங் காலே. 4

மண்புன லனல்கால் பூதம்
வலிகந்த மிரத வன்ன
மெண்டரு முபாத்ா னந்தா
னிவையிரு நான்குங் கூடி
யுண்டொரு பொருளு ரூப
முருபுல னுபாங்க மோடக்
கண்டது சித்தங் கன்ம
நன்றுதீ தென்றல் காணே. 5

---

* உபாதாயம் என்பதும் பாடம்.

குற்றவீ டராக மாதி
குணங்களைக் குறைத்த லாகு
மற்றவீ டுருவ மாதி
யைந்தையு மாய்த்த லாகுஞ்
சொற்றருந் தொகை தொடர்ச்சி
மிகுத்துரை யென்று மூன்று
யுற்றிடும் வழக்கி ரண்டு
மொன்று மூன்றாகி யாகும். 6

ஒருவ னென் றோதப் பட்டா
னுருவாதி யைந்துங் கூடி
வருபவ னென்று ரைத்தல்
தொகையுண்மை வழக்க தாகும்
உருவமங் காதி யாய
வைந்தையு மொருவ னின்று
தருவது தொகையி னின்மை
வழக்கதாஞ் சாற்றுங் காலே. 7

காரண காரி யத்தின்
றொடர்ச்சியாய்க் கால மூன்றின்
சோர்வரத் தோன்றுங் கெட்டு
வழியென்கை தொடர்ச்சி யுண்மை
யோர்தரி னொருவ னேயெக்
காலத்து முள்ளா னென்று
தேர்வது தொடர்ச்சி யின்மை
வழக்கதாஞ் செப்புங் காலே. 8

தோற்றிய பொருள்க ளெல்லா
நாசமா மென்று சொல்லு
மாற்றமுன் னுரைத்தன் மற்றை
மிகுத்துரை வழக்கி னுண்மை
போற்றிய பொருள்கண் கட்குப்
போனது போன்மு திர்ந்து
வேற்றுமைப் பட்ட தென்கை
மிகுத்துரை யில்வ ழக்கே. 9

உள்வழக் கில்வ ழக்குள்
ளதுசார்ந்த வுள்வ ழக்கோ
டுள்ளது சார்ந்த வின்மை
வழக்குட னின்மை சார்ந்த
வுள்வழக் கின்மை சார்ந்த
வில்வழக் கென்றே ராறு
*முள்வழக் குளதுண் டென்கை
முயற்கோடின் றில்வ ழக்கே. 10

உணர்வுசார்ந் துணர்வு திக்கை
யுள்ளது சார்ந்த வுண்மை
யுணர்வுபி னின்று மென்கை
யுள்ளது சார்ந்த வின்மை
யுணர்வுமுன் பின்றித் தோன்ற
லில்லது சார்ந்த வுண்மை
யுணரினில் லதுசா ரின்மை
யுள்ளங்கை யுரோம நாணே. 11

---

* உள்வழக் குணர்வுண் டென்கை என்பதும் பாடம்.

## வான் முதல் ஐந்தும் அநித்தியம் எனல்

சொன்னநால் வகையு மன்றிச்
சொல்லிடும் பொருள்க ளெல்லா
மென்னையோ வறிகி லோம்பித்
தேறியோ வான மான்மா
மன்னுகா லங்க டிக்கு
மனமொடு வாக்கி றந்திட்
டுன்னுமோ ரிறையு முண்டென்
றுரைப்பது நித்த மன்றே. 12

### 1. வானம்

ஈங்குவான் செயற்கு வாரா
தியம்பிய பொருள்க ளெல்லாம்
தாங்குவா னுளதே யென்னில்
தரித்திடா தருவ மாத
லோங்குவா னோசைக் காதி
யெனிலதங் குருவின் கூட்டம்
நீங்குவா னின்றி யெங்கும்
நின்றதே லெங்கு மின்றே. 13

### 2. ஆன்மா

போதமுண் டுயிர்கட் கென்னில்
வாயிலைம் புலனு நூலு
மாய்தலின் றெட்டுத் தீட்டுக்
கலப்பினி லறியு மென்னில்

ஏதமுண் டிரவிற் பச்சை
சிவப்புட னேய்ந்த போது
கேதநின் றென்னே வென்னு
மையமுன் கிடத்த லாலே. 14

அறிந்திடா வாயி லின்றே
லறிவின்று மைந்தும் பற்றி
யறிந்திடு மறிவுண் டென்னி
லைந்தினு மறிவொன் ருக
வறிந்திட வேண்டுஞ் சார்பி
னறிந்திடு மென்னி லுன்னை
யறிந்திலோம் புத்த னென்றிங்
கழகிது சொன்ன வாறே. 15

ஞானஞே யங்க ளன்றி
ஞாதுரு வென்று சொல்ல
வானதிங் கறிவோ வன்றே
வன்றெனி லவனி போலுந்
தானதிங் கறிவே யென்னிற்
சமைத்திடு நன்ப ருப்புப்
போனகந் தனக்குத் தானே
கறியெனப் புகன்ற தாமே. 16

உயிரினை யருவ தென்னி
னுருவுட னுற்று நில்லா
துயிரினை யுருவ தென்னி
லுடலினி லுடல டங்காது

உயிரினை யணுவ தென்னி
லுடல்பல துவார மோடு
முயிரினை நித்த மென்னி
லுணர்வுத யாந்த மின்றே. 17

எங்குமாய் நின்ற தான்மா
வென்றிடி னெங்கு மின்றுந்
தங்கிடு நிறைவு தத்தஞ்
சரீரங்க டோறு மென்னின்
மங்கிடு முடலத் தோடே
வடிவினி லோரி டத்தே
யங்கது நின்ற தென்னி
லடிமுடி யறிவின் றுமே. 18

## 3. காலம்

சாற்றிய கால மிங்குத்
தங்கிய வாறி தென்னை
தோற்றுவித் தளித்துப் போக்குந்
தொழிலிவை கால மென்னிற்
போற்றிய பொருளிற் புக்குப்
பிணங்கிடும் பொருட்பி னின்றுந்
தேற்றிய வில்வ ழக்குத்
திரவியத் தியல்பி னுமே. 19

## 4. திக்கு

எனக்குநீ கிழக்கி ருந்தா
யாரின்மேற் கென்று மென்பா
லெனக்குமேற் கிருந்தா னென்பாற்
கிழக்கென வியம்புந் திக்குத்

தனக்குநாங் கொள்வ தெப்பாற்
சாற்றிடா யில்வ ழக்குத்
தனக்குள தாகு முண்மை
தானில தாகு மன்றே. 20

## 5. இறை

உலகினைப் படைத்தா னென்று
யொருவனிங் குள்ள தாகி
லுலகினைப் படைக்க வேண்டா
வில்லையேற் படைக்க வொண்ணு
வுலகினுக் குபாதா னந்தா
னுள்ளதாய்க் காரி யத்தா
முலகினைப் படைக்கி லங்கு
முளதில தாவ துண்டே. 21

உள்ளது கடாதி போல
வுதிப்பித்தா னென்று ரைக்கின்
மெள்ளவே யெங்கு நின்று
விதித்தன னுலகின் மீது
வள்ளறு னின்று னென்னில்
வந்ததா முலக முன்னே
தள்ளிடா தெங்கு நிற்கி
லெங்குமுன் றந்த தாமே. 22

இல்லது கருணை யாலே
யியற்றின னிறைவ னென்னிற்
கொல்லரி யுழுவை நாகங்
கூற்றமுங் கொண்டு தோற்ற

வல்லவன் கருணை யென்னே
வலியினால் வேண்டிற் றெல்லாம்
பல்கவே படைத்தா னுயிர்
பித்தரைப் பணிந்தி டாயே. 23

பெறுவதிங் கென்ப டைத்துப்
பெற்றது விளையாட் டென்னிற்
சிறுமழ விறைய தாகுஞ்
செய்திடுங் கன்மத் தென்னி
னுறுபெருங் கன்மஞ் செய்வோர்
முன்புள ராவ ருண்மை
யறிவுறின் ஞால மெல்லா
மநாதியென் றறிந்தி டாயே. 24

உருவொடு நின்ற னென்னி
லுருவமுன் படைத்தார் வேண்டு
முருவவ னிச்சை யென்னி
லுலகெலா மிச்சை யாகு†
முருவுல கத்து ளோர்கட்
குறுவது கன்மா லென்னி
லுருவுடை யோர்கட் கெல்லா
முற்றது கன்மத் தாமே. 25

அருவெனிற் பவத்தி னின்று
மெடுத்திடா னுகா யம்போ
மருவின னிழல்போ லென்னின்
மருவினோர்க் காகு மாட்சி

†சித்தியார் சுபக்கம் 1, 39, பார்க்க.

பெருகிய வறிவுண் டென்று
　　பேசிடி னேசத் தோடுங்
கருதிட வுருவம் வேண்டு
　　மில்லையேற் கருத லின்றே. 27

எங்கணூ லநாதி யாக
　　விறைவனுண் டென்னு மென்னி
னுங்கணூ லுரைப்பா ரின்றி
　　யோதுவ தழகி தாகு
மங்கவன் றன்னை நூல்கொண்
　　டறிந்தன மவனைக் கொண்டே
யிங்குநூ லறிந்தோ மென்னி
　　னீதொராச் சரிய மாமே.*

உற்றெழு மரங் ளாதி
　　யுயிரின்றிப் பூத ரூபம்
பற்றியிப் பாரின் மீது
　　பாங்கினுற் பலவு மாகிப்
புற்றெடு மயிர்கொம் பாதி
　　போலவே தோன்றி மாயு
மற்றுள யோனி கட்குப்
　　பயனென வழங்கு மன்றே. 28

கொன்றிட லாகா தென்றுங்
　　கொன்றவை கொண்டு நாளுந்
தின்றிட லாகு மண்ணோ
　　டொத்திடுஞ் செத்த வெல்லாம்

* சிவஞானபாடியம் சிறப்புப்பாயிரவுரை பார்க்க.

ஒன்றிய வாச மூட்டி
யுண்ணுநீர் வைத்த வர்க்கோ
சென்றுநின் றுண்ட வர்க்கே
புண்ணியஞ் செப்பி டாயே. 29

அழித்திடு மராக மாதி
யகற்றிநல் லறங்கள் பூரித்
திழித்திடும் புலன்கள் போக்கி
யின்பொடு துன்பம் வாட்டிப்
பழித்திடாப் பழுதில் வாழ்க்கை
யெட்டையும் பாரித் தெல்லா
மொழித்திடு ஞான சீலம்
சமாதியி னுறுதி யாமே. 30

ஓங்கிய வுருவ மோடும்
வேதனை குறிப்பி னேடுந்
தாங்குபா வனைவிஞ் ஞானந்
தாமிவை யைந்துங் கூடிப்
பாங்கினுற் சந்தா னத்திற்
கெடுவது பந்த துக்க
மாங்கவை பொன்றக் கேடா
யழிவது முத்தி யின்பம். 31

---

## சௌத்திராந்திகன் மத மறுதலை

அனைத்தினையு முணர்ந்தானெம் மிறைவ னென்றிங்
   கறியாது புத்தநீ யறைந்தா யென்று
மனைத்தினையு மறிந்திடா னளவி லாமை
   யொன்றொன்றுவனைத்தினையுமறிந்தானென்னி
னனைத்தினையு மளவிறந்த தென்ன வேண்டா
   வளவிலா ஞானத்தா லறியின் ஞான
மனைத்தினையு மறியாது கணத்திற் றோன்றி
   யழிதலா லறிந்தமையின் றாகு மன்றே. 1

சிலபொருளையுணர்ந்தவற்றின் றிறத்தேயொட்டிச்
   சிந்திப்ப னெப்பொருளு மென்னிற் சென்று
பலபொருளா யொன்றுபல பேத மாகிப்
   பயின்றுவரு மாதலாற் பார்க்கு மாறென்
னுலகுதனி லொருபொருளங் குணரும் போதி
   லுற்றுணர்த லாராய்த றெளித லுண்டாய்
நிலவுமத னுணர்வு புன்மை முன்பின்
   நின்றிடா தென்பையெல்லா நினைப்பதெங்கே.

முத்திநலங் கண்டறங்கண் மொழிந்தா னுயின்
   முதன்முழுதும் பொன்றிப்பின் மொழிந்த [வண்ண
மொத்திடுந்தே னெய்கூட்டி யுண்டிறந்தா னொருவ
   னுலகினில்வந்திதுதீதென் றுரைத்தலொக்குஞ்
செத்ததுபி னென்றுரைக்கிற் கதியிற் செல்லாத்
   தேரனுரை நீர்பெருகிச் சென்றாறு
மத்தினள வறியாதிக் கரையோர் தம்மை
   யக்கரைக்கே செல்லவிடு மாசை யாமே. 3

நீர்போல நின்றுயிர்கட் களித்தி டாதே
 நெருப்பாய துயர்ப்பிறப்பி னிகழந்து நின்று
பர்ரோர்கட் களித்தபடி வலையிற் பட்ட
 பலகலைமான்கண்டொருநீள்கலைபாய்ந்தோடி
நேரேசென் றவ்வலைக்கே நேர்ந்தா லொக்கும்
 நீள்பாவக் குழியில்விழு நீர்மை யாகு
மாரோவிங் கவனெப்பா ரறத்தை யாக்கப்
 பிறந்தறமாக் கினனென்னி லடங்க வாமே. 4

அலகிறந்த யோனிகளிற் புகுந்த வெல்லா
 மறத்தையளித்திடவென்னிலவற்றினெல்லாம்
நிலவுவது கன்மத்தா லாகு மன்றி
 நினைந்ததோ ரிச்சையினு னிகழ்ந்தா னுகி
னுலகுதனி லுள்ளோர்க்கு மதுவே யாகு
 மொருத்திவயிற் றினிலிருந்தங் குதரந்தள்ளித்
தலமதில்வந் தானென்னிற் ருயைக் கொன்ருன்
 தருமத்தை யின்றெனக்குச் சாற்றி டேலே. 5

அரியினெடு நரியுழுவை யாதி யாக
 வானபோ தறந்திரிந்து கோற லாதி
பரிவினெடுஞ் செய்தனனு மில்லை யாகிற்
 பசிதனக்குத் தின்பதவன் பழுதை யோதான்
கருதிலவன் பரதுக்க துக்க னுகிற்
 †கணவனிழந் தோர்கட்குங் கண்ணி குத்தித்
திரியுமவர் துயரினுக்கு மிரங்கு வோன்றன்
 செயலறத்துக் கழகியதாஞ் செப்புங் காலே. 6

† கணவனிறந்தோர் என்பது பாடம்.

ஒருபொருளைத் தேடியதற் குரையுந் தேடி
யுரைப்பதன்மு னுணர்விறக்கு முனக்கு
மருவிவரும் சந்தான வழியி லென்னின் [நூலென்
வாயுரைத்த தேயுரைத்து வழங்கு மாகும்
பெருகுவது கெட்டென்னி லதுபோ லாம்பின்
பித்துரைத்த தறியாது பேதை சொல்லுந்
தருவது நூலெப்பரிசு முதனடுவோ டிறுதி
தான்விருத்த மின்றியது சாற்றி டாயே. 7

முன்னாகப் பலவறங்கள் பூரித்தெம் மிறைவன்
முழுதுணர்ந்திங் கருளினா லுயிர்கண்முத்தி
பின்னாகப் பிடகநூ லுரைத்தா னென்று [யடையப்
பேசினா யிவன்முன்பு பேரறங்கள் புரிநூல்
சொன்னாரா ரிவனைப்போன் முன்னொருவ னென்னி
லவனுக்குச் சொன்னாரா ரெனத்தொடர்ச்சி
யன்னாய்பினநவத்தைப் படுமொருவனின்றா [யாகி
மாரோவுன் பாழியிருப் பாரிதனை யறையே. 8

இந்நூலைச் சொன்னவன்றா னிங்கிருந்தா னென்னி
லிவனிருத்தி யேத்துமவ னெங்கிருந்தா
[னெவனே
வந்நூலோ குருவந்த வடைவுமுனக் கில்லை
யடைவுதரின் முடிவின்க ணநாதி போதன்
சொன்னான மவைவேதா கமங்க ளாகுஞ்
சுருக்கியூண் டவம் புரியச் சொல்லுவதெல்
[லோரும்
உன்னூல்கண் கழுவாதேயுதிப்பதன்முன்புலாலோ
டுண்பானே ரூன்பிரியனுரைத்ததொருநூலே.

முன்னூலும் வழிநூலுஞ் சார்பு நூலு
மூன்ருகு முலகத்து மொழிந்த நூல்கள்
இந்நூலி னுன்னூலிங் கெந்நா லென்னி
லிந்நூல்கா ணெந்நூலென் றியம்ப மாட்டா
யுன்னூலு மொருநூலா யுரைப்ப தென்னே
யுலண்டுநூல் பருத்திநூல் சிலம்பி நூல்க
ளந்நூலு மல்லாத பொய்ந்நூல் கொண்டிங்
கறநோற்றுத் திரிந்தவா றழகி தாமே. 10

புத்தனவன் பொன்றக்கெட் டுப்போனு னென்று
போற்றுவதிங் காரைநீ பொய்த்தவஞ்செய்
செத்தவர்க்குச் சிலகிரியை செய்ய விங்குச் [புத்தா
செய்தவர்க்குப் புண்ணியமா மென்று செப்பி
னித்தமுயி ராதலாற் பலிக்குஞ் செய்தி
நினைந்துதரு வானுமுள னுனக்கிவ்வா றில்லை
வைத்தசுடர்த் தீபமற மாய்ந்தக்கா லதற்கு
மருவுதிரி நெய்கூட்டு மதிகேடுன் வழக்கே. 11

‡நூலுரைத்தா னெருவனுள னென்றனுமானத்தா
னூல்கொண்டிங் கறிந்தாற்போனூலா நூலின்
பாலுரைத்த பொருள்களெலா மனுமான
[மென்னிற்
பரலோக பாதாள லோகங்க ளொருசொல்
லாலுரைத்த நூலின்றி யறையா யின்றே
லவையறிந்த படியெனுன தனுமான மன்றே
மேலுரைக்கும் பிரமாண முனக்கில்லை காட்சி
யனுமானம் விட்டபொருள் விளக்குவதா
[கமமே. 12

‡ இச்செய்யுள் சிவஞான சுவாமிகளால் சித்தியார் சுபக்கம் அளவை க. உரையில் எடுத்தாளப்பட்டது.

எப்பொருளு மநித்தமென வியம்பிடுவை யநித்த
மில்லதற்கோ வுள்ளதற்கோ வுளதிலதா
[னதற்கோ
செப்பிடினில் லதற்கில்ல தென்று மில்லை
சென்றடைவ துள்ளதற்கே லுள்ளதென்று
[முண்டா
மப்படிதா னுளதிலதா மப்பொருளுக் கென்னி
னுளதிலதா காதிலது முள்ள தாகா
திப்பொருளுக் கநித்தமிலை யென்றென்றைக்
[காட்டா
யெனிற்றேன்றும் பொருணின்றிங் கிறுதி
[யாமே. 13

அங்குரம்வித் தின்கேட்டிற் றேன்றுமது போல
வனைத்துருவுங் கெட்டுவழி யாகு மென்னி
னங்கவற்றுக் காக்கக்கே டறைந்தா யெல்லா
மநித்தமெனு முரைமறந்தா யருகனுமா னுய்நீ
யிங்குமுளை யிலைமரமா யெழுந்தீண்டிச் செல்லா
திறந்ததே யெழுந்தபடி நில்லா தென்னின்
மங்கியிடா தேபால தருணவிருத் தையாய்
வரும்வடிவு திரிந்துநின்று மாயுங் காணே. 14

உடல்பூத மெனிஞென்றுக்கொன்றுபகையொன்ரு
வுதிரசுக் கிலமென்னின் மரத்தினுளுக் கல்வி
னிடமாகத் தவளையுரு வந்தவா றியம்பா
யிருவினைகா ணெணில்வினைக ளிரண்டுருவாய்
[நிற்குந்

திடமாக வன்னமுரு வெனிலுண்ண வுண்ணக்
சென்றுவள ருங்காயந்தேயுமுணர் வென்னின்
மடவோனே யருவுணர்விங் கசேதனமா யுருவாய்
வளராது வருமில்லா தெனின்மலர்வான்
[வருமே. 15

என்றுமிலா தொன்றின்ருய் வருமுருவம் வித்தி
னெழுமரம்போ லெனின்வித்தினுண்டாய்
[நின்றெழுங்கா
ணின்றதேல் வித்தின்மரங் கண்டதில்லை யென்னி
‡ னெற்கமுகாய் நீளாது நெல்லாயே நீளு
மொன்றிலொன்றங் கிலாமையினு லுதியாகா
[ரணம்பெற்
றுதிப்பதுகா ரியமதுவு முள்ள தாகு
மன்றமதிக் கலைபோலக் கந்த மைந்து
மருவியுளதெனுமுரையுமறந்தனையோவின்றே.

உருவமொலாம் பூதவுபா தாய சுத்தாட்
டகவுரு மென்னினீ யுலவத் துக்கு
மருவுமன லோடுநீர் மண்கந்த மிரதம்
வன்னமிலை வன்னிக்கு வளிநீர்மண் வாசந்
தருமிரத மிலைநீர்க்குத் தழல்கான்மண் கந்தந்
தானில்லை தலத்தினுக்குச் சலமனல்கால் கூடி
வருவதிலை யிந்திரிய விடய மான
மாபூதங் களுமறியாய் மதிகெட் டாயே. 17

† இது சிவஞா.பாடியம் 1 ,- 2 இல் எடுத்தாளப்பட்டது.

மருத்தெண்ணெய் தனின்மருந்து நின்ருற் போல
மறைந்தெட்டுஞ்சூக்குமமாய்மருவு மென்னிற்
றிருத்துமவன் மருத்தெண்ணெய் சேர்த்தாற்
[போலச்
சேர்பொருள்வே றுண்டெல்லா வுருவு
[மெட்டும்
பொருத்தியதே லொருதன்மை யாம்பொருள்க
[ளொன்றின்
குணமொன்றிற்புகாதறைகைபொருளறியாய்
[பூத
வுருப்பொருள்வே றுபாதானப் பொருள்வேறு
[காட்டா
யுபாதாயம் பூதகுணங் குணகுணியா முலகே.

அழிந்துணர்வை யுணர்வுதரு மெனினழிந்த தாக்கா
தாமுணர்விற் பொருள்வினைக ளணையா வாகு
மழிந்திடுவ தாக்கியெனின் முன்ஞெருகா லத்தே
யறிவிரண்டு நில்லாதங் கறக்கே டின்றி
யழிந்துணர்வை யுணர்வுதரு மெனினித்தா நித்த
மடையுமுணர் வுனக்கநித்த மாயே செல்லா
தழிந்தெருவை யாக்குவது போலாக்கு மென்னி
லாம்பொருள்வே றழிந்துசத்தி கிடந்தாக்கு
[மவையே. 19

கேடிலாச் சந்தானத் தேபலிக்கு மென்று
கிளக்கினீ சந்தான நித்த மாகு
மோடுநீர் போலழிந்தா முணர்வொழுக்க மென்னி
லொழுகுநீ ரிட்டதெல்லா முடன்கழிதல்
[போலத்

தேடுபொருள் சிலம்பா வனைகுறிவிஞ் ஞானம்
சென்றவுணர் வோடேகு நின்றுணர்வி னேயா
நீடுநீர் முன்னொழுகிக் கெடாதுநிறைந் தோடு
நிகழுணர்வுங் கேடின்றி நினைந்துசெலும்
[காணே. 20

சந்தானங் காரணமோ காரியமோ விரண்டின்
தன்மையதோ காரணமுங் காரியமு நித்தம்
வந்தாருஞ் சந்தானந் தொடர்ச்சியெனி னதற்கும்
வருநித்தந் தோற்றக்கே டடைதலின்மற்
[றென்றேல்
ஐந்தான கந்தங்க ளன்றாய் நித்த
மடைபொருளா மறிவுமறி வடைவு மன்றிச்
சிந்தர்முன் பின்னாகிப் பின்முன் னாகித்
திரிந்துவருந் திரிவறிந்து தேரா தேரே. 21

ஒருகாலத்துணர்வுகெட்டாமெனினுதிப்பீறென்று
மொருபொருளின் றிரிவுனக்குக் கால மானால்
வருகால நிகழ்காலங் கழிகால மென்று
வழங்குவதென் பொருள்வரவு நிலைகழிவா
[லன்றேல்
திரிகாலஞ் செப்பிடாய் பொருட்செயலு
[மொன்றுஞ்
செயன்மூன்று மொருகணத்தேசேருமென்னில்
தருகால மூன்றுகுந் தாமரைநூ றிதழில்
தள்ளூசி யுங்கால மூன்றினையுந் தருமே. 22

உணர்வுகாரணமுணர்வுக்கெனினித்தம்
[முணர்வுக்கு
உண்டாகி நின்றுணர்வை யுதிப்பி யாதிங்
குணர்வுசந் தானவிடத் தொழிந்தாற் பின்னை
யுண்டாகா துடலுணர்வுக்குபா தானமென்னின்
உணர்வுடலி னிடையரு துதிக்க வேண்டும்
உடலுணர்வின் வினையினு லுணர்வுதிக்கு
[மென்னின்
உணர்வு வினையுளதொடுங்கா துணர்வு தருஞ்செய்தி
யுணர்வைவினை தரினெருவன் செயல்வினையின்
[ருமே. 23

வினையுணர்வு தருவம்வினையை யுணர்வுதரு மென்று
விளம்பினீ யுணர்வுபோல் வினையி னுக்கு
நினைவுவரு மொன்றையொன்று நிகழ்த்தி டாயின்
நிலையின்மை யானிகழ்த்திக் கெடுதல் செய்யா
கனல்விறகிற் பிறந்ததனைப்பொடிசெய்தாற்போற்
கருத்தும்வினை யிற்றேன்றிக் கழிக்கும்வினை
[யென்னின்
முனமுணர்வு பிறந்தளவே வினைகெடுக்கு முன்பின்
உதியாது முகிழ்நெருப்பின் விறகுதியா
[வாறே. 24

பேயுநர கருஞ்சுரரும் பிரமருமா யுலகில்
பிதாமாதா வாதார மொன்று மின்றிக்
காயமொடு தாம்வருவ ரென்றுரைப்பை காயம்
காரியமாய் வருதலினுற் காரணமுண் டாகும்

ஆயுமுணர் வோசுத்த வட்டகமோ கன்மம்
வடித்ததோ வடிவுசெய்து வைத்தாரு
ஆயுமறிவுண்டா கிலறைந்திடா யுலகுக் [முண்டோ
காதிதுணை நிமித்தகா ரணமறிவ தறிவே. 25

உருவாதி கந்தங்க ளைந்துங் கூடி
யொருவன்வே ரெுருவனிலை யென்றுரைக்கும் [புத்தா
வுருவாதி யைந்தினையு முணர்பவர்யா ரென்ன
வுணரும்வி ஞானமென்ருய் ஞானமுணர்ந் [தவரார்
உருவாதி பொருள்காட்டித் தனைக்காட்டுஞ் [சுடர்போல்
உணர்வுபிறி தினையுணர்த்தித் தனையுணர்த்து [மென்னின்
உருவாதி பொருளினையுஞ் சுடரினையுங் காணுஞ்
உலோசனம்போ லுணர்வுபொரு [ளுணர்பவன்வே றுண்டே. 26

காயமுட னிந்திரிய மனநா னென்று
கதறுவாய் காயமுறக் கத்தறியா வாகும்
வாயில்களு மப்படியி னொன்றையொன்றங் கறியா
மனங்கணத்திற் கெடுங்கால மூன்றின்வர [வறியா
தாயுமுணர் வாகியுடல் பொறிமனமூன் றறிந்தங்
கவைநானல் லேனென்று மறிந்துமனத் தாலே
ஏயுமொரு பொருள்கருதி யிந்திரியப் பாலே
யிசைவித்துக்காயத்தா லியற்றுவதான்மாவே.

கழிந்தவுணர் வேபின்னு மியானறிந்தே னென்று
கருதலினவ் வுணர்வறிந்த தென்னின் முன்னே
மொழிந்தமொழி நான்மொழிந்தே னென்றால்
[வாய்தான்
மொழிந்ததோமொழிந்தவன்வே றுன்றுபோல
எழுந்தவுணர் வெல்லாங்கொண் டியானறிந்தே
[னென்றது
எதுவதுதா னுயிருணர்வால் வாக்கான்
[மற்றை
ஒழிந்தகாயந் தன்னுலுணர்ந் துரைத்துச்செய்திங்
குணர்வினுக்கு மாதார மாய்நிற்கு முயிரே. 28

இந்திரிய வீதியெழுஞ் சித்த நெஞ்சத்
தெழுஞ்சித்த மெனவிரண்டு மொன்று
[கெட்டே யொன்று
வந்தெழுவ தெனிற்கனவிற் கண்டபடி நனவின்
வாய்திறவார் நனவுகண்ட படிகனவிற்காணுர்
அந்தனுரு வன்னங்க ளறிந்திடா னன்றே
யறிகனவு மிறந்துணர்வு மழிந்துறக்க
[மடைந்தால்
உந்துவதோர் சந்தான மில்லையுணர் வுதிப்ப
வுயிர்கனவு நனவினையு முணருங் காணே. 29

ஒருகாலத் தோரிடத்தி லோருணர்வேற் செவிதா
னென்றுணரா திருசெவியு முணரு மோசை
ஒருகாலத் திருகண்ணு மிருசெவியு மனமு
மொருவனைக்கண் டவனுரைகேட் டுணர்ந்திடு
[மைம்பொறியும்

ஒருகாலு முணராவுள் ளுணர்வின்றிப் பொறிக
ளொன்றென்று வுணர்வதுவுள் ளுணர்வைந்து
[முணரா
ஒருகாலும் பொறிவிகற்பித் துணராவுள்
[ளுணர்வுக்
குள்ளதுகாண் விகற்பமிரண் டும்முணர்வ
[துயிரே. 30

அருவுணர்வு மாயாறு மாறி மாறி
யங்கங்கே தோன்றியிடி லகத்துநிலை யின்றி
உருவினொடு பாலதரு ணவிருத்தா வத்தை
யுண்டாகா துறக்கத்தி னுடல்தட்ட வழைப்ப
வருவதுணர் வெங்கிருந்து நெஞ்சிலிருந் தென்னின்
வாயில்வினை யறிந்தெழுப்ப வாயுவறி யாதாம்
திரியொழியவிடிஞ்சில்தொடத்தீபமெழாதடக்கஞ்
சென்றபொழு தாலுணர்வு நின்றநிலை
[செப்பே. 31

இச்சைவெறுப் பியற்றலின்ப துன்பம் ஞானம்
இவையணுவின் குறியாகு மிவற்றி லிச்சை
நச்சிநுகர்ந் தொருபழத்தை யினங்கண்டு முன்பு
நானுகர்ந்த கனியினினமென்றுநச்சல்பின்பும்
எச்சவெறுப் பாதிகளு மிப்படியே யாகும்
இவைமுன்பும் பின்புமுணர்ந் திடுத லாலே
நிச்சயகர்த் தாவொருவ னுளனென்று நல்லோர்
நிறுத்திடுவர் வெறுத்திடுவர் நின்னுடைய
[பொருளே. 32

எப்பொருட்கு மிரந்தரமா யிடங்கொடுத்துநீங்கா
திருள்வெளிதா னன்றியிரண் டினுக்குமிட
ஒப்பில்குணஞ் சத்தமதாய்வாயுவாதி [வகையாய்
உதித்தொடுங்க நிற்கும்வா னுயிர்முன்னே
[சொன்னோம்
செப்பிடுங்கா லம்பொழுது நாளாதி யாகித்
திரிவிதமாய்த் தீமைநன்மை செய்யுந் திக்குத்
தப்பில்குணக் குக்குடக்குத் தெற்குவடக் காதி
தானுகித் திரியாதே நின்றுபலந் தருமே. 33

காரியமா யுலகமெலா மிருத்த லாலே
கடாதிகள்போற் காரியகர்த் தாவொருவன்
[வேண்டும்
ஆரியமா யறம்பொருளோ டின்பம்வீ டெல்லாம்
அறைந்துயிர்கட் கறிவுசெய லளிப்பதுநூ
[லந்நூல்
கூரியரா யுள்ளவர்க ளோத வோதிக்
கொண்டுவர லான்முன்னே குற்ற மின்றிச்
சீரியபே ரறிவுடையோன் செப்ப வேண்டும்
செயலினுக்குங் கரிவேண்டுஞ் சிவனுளனென்
[றறியே. 34

மரங்களுயி ரல்லவென்று மறுத்துச் சொன்னுய்
வாடுதல்பூ ரித்தலான் மரங்களுயி ராகும்
திரங்குநீர்பெருதொழியிற்பெறிற்சிரத்தை சேரும்
சீவனல வெனிலுலகிற் சீவ னெல்லாம்

உரங்கொள்வதூண்பெறிற்சோருமூண் பெறுவேல்
உலர்ந்தமர நீர்பெற்று லுய்யாதுள் ளுயிர்கள்
கரந்தசினை முட்டைகட்கு வாயிலின்று வாயில்
கண்டிலதேற் †பூத்துக்காய்த் தெழன்மரங்க
[ளுயிரே. 35

ஒருமரத்தி னுயிரொன்றேற் கொம்பொசித்து
[நட்டால்
உய்யுமுயி ரொன்றுபல வாமோ வென்னிற்
கருமரத்தின் வித்துவேர் கொம்புகொடி கிழங்கு
கண்கலந்து கொள்ளுமுயி ரண்டம் வேர்ப்புத்
தருபிறப்புச்சர்ாயுசங்கள்சனனமும்பெற்றுற்போல்
தானடையு முற்பீசந் தலநடவா தென்னிற்
பெருநிலத்திற் காலிலார் நடப்பரோ பேதாய்
பிறப்பின்வித மநேகங்காண் பேசுங் காலே. 36

தின்னுமது குற்றமிலை செத்ததெனும் புத்தா
தின்பையெனக்கொன் றுனக்குத்தீற்றினர்க்குப்
மன்னுவதுன் காரணத்தாற் றின்ஞ தார்க்கு [பாவ
வதைத்தொன்றை யிடாமையினுல் வதைத்த
[வர்க்கே பாவம்
என்னிலுனை யூட்டினர்க்குப் பாவஞ் சேர
என்னதவம் புரிகின்றுய் புலால்கடவுட்
உன்னுடல மசுசியென நாணி வேறுேர் [கிடாயோ
உடலுண்ணி னசுசியென வுணர்ந்திலைகா
[ணீயே. 37

---

† பூத்துக்காய்த் தெழலான்மரங்க ளுயிரே - என்பதும் பாடம்.

குடைநிழலும்கண்ணுடிச்சாயையும்போற்பிறப்புக்
கொள்ளுமுணர்வென்னிற்காரணமழியவழியும்
அடைநிழலுங் கந்தமைந்து மழியுமுனக் கிங்கே
அவையழிந்தாலருங்கதியினணையு
[முணர்வின்றும்
உடைகனவினெழுமுணர்வுநனவுணர்வாறுற்போல்
எழுமுணர்வு கன்மத்தா னினைந்துகதி
[யென்னின்
மிடைசினையு மந்தனுமுட் டையுமுயிர்விட் டக்கால்
மேவுவதென் பிறப்பினுடல் விடாதுகன்ம
[வுணர்வே. 38

ஐந்துகந்தஞ் சந்தானத் தழிதல்பந்த துக்கம்
அறக்கெடுகை முத்தியின்ப மென்றறைந்தாய்
[கந்தம்
ஐந்து மழிந்தான்முத்தி யணைபவர் யாரென்ன
அணைபவர்வே றில்லையென்று யார்க்குமுத்தி
[யின்பம்
ஐந்தி னுணர்வினுக்கென்னிலழியாதவ் வுணர்வுண்
டாகவே யெவ்விடத்து முருவாதி கந்தம்
ஐந்துமுள வாமதுவும் பந்த மாகி
அரந்தைதரு முத்தியின்ப மறிந்திலைகா
[ணீயே. 39

அநாதிமுத்த னுய்ப்பரனு யசலனு யெல்லா
வறிவுதொழி லனுக்கிரக முடையவரன் கன்ம
நுனுதிகமற் றெருத்தவிடத் தேசத்தி நிபாதம்
நுழைவித்து மலங்களெலா நுங்க நோக்கி

மனுதிகர ணங்களெலா மடக்கித் தன்னை
வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையால்
இனுதபிறப் பினினின்று மெடுத்து மாறா
இன்பமுத்திக் கேவைப்ப னெங்கண்முத்தி
[யிதுவே. 40

### யோகாசாரன் மதம் *

போதமே பொருளாய்த் தோன்றும்
பொருளதா யெழலாற் போதம்
†வாதனை யதனுற் கூடி
வருதலால் வடிவி லாமை
யாதலால் ‡கனவு போலுஞ்
சகமுள தறிவே யாமென்று
ஓதினு னேதா னுய
வுணர்வினுல் யோகா சாரன். 1

### யோகாசாரன் மதமறுதலே

போதமுந் தவிர வேறோர்
வாதனை புகன்ருய் போதம்
வாதனை யிரண்டுண் டென்னுய்
போதம்வா தனையு மென்னிற்
காதலாற் பொருளி னேடு
கலந்துபின் னெழுங் கருத்தாம்
வாதனை கனவு கண்ட
பொருளின்மேல் வருங்க ருத்தே. 1

* இதுவே மகாயான பௌத்த மென்று கூறப்படும் மதம். † வாதனை என்பது பௌத்த நூல்களில் வேதனை யெனல் வழக்கம். ‡ கனவே.

அறிவதே பொருள தாகி
‡லகஞ்சட மென்ன வேண்டும்
பிறிபொரு ளாகும் பேதித்
திதம்பிர பஞ்ச மென்னில்
உறுபொரு ளுருவந் தோய்ந்தா
லுணர்வுமவ் வுருவாய் நிற்குஞ்
செறிபொரு ளதுவாய் நிற்குந்
தெளிபளிங் கதுவே போல. 2

## மாத்தியமிகன் மதம்

அவயவம் பொருளாய்த் தோன்றும்
அவயவ மழிந்தாற் பின்னை
இவைபொரு ளென்ன வேறென்
றிலாமையாற் பொருள்க ளின்றும்
அவைபொரு ளிலாமை யாலே
அறிவுமின் றாகு மென்று
நவைதரு மொழியி னாலே
நவிலு*மாத் திமிகன் றானே. 1

## மாத்தியமிகன் மதமறுதலை

கடத்தினி லவய வங்கள்
படத்தினிற் புகாமற் காத்தும்
படத்தினி லவய வங்கள்
கடத்தினிற் புகாமற் கொண்டும்

‡ அகங்கடம் என்பதும் பாடம். * மாத்தியமிகன்றான்.

இடத்தினி னிற்கு மாகு
　　மவயவி யிரண்டுங் கூடி
உடைத்தொரு பொருளுண் டாகப்
　　பொருளுமுண் டுணர்வு முண்டே. 1

கருவியு மொளியும் வேறு
　　கருதிடுங் கருத்து நிற்கப்
பொருள்புண ராமை யாலே
　　போதம்வந் தெழுவ தின்றும்
மருவிடும் பொருளுண் டாக
　　வந்தெழும் புந்தி யானுற்
பொருளுள தாகு மாகப்
　　போதமு முள்ள தாமே. 2

## வைபாடிகன் மதம்

அரிசன நூறு கூட வருணம்வந் தெழுந்தாற் போல
விரிசகம் பொருள்கண் ஞானம் விரவிட மேவித் [தோன்றும்
தெரிசன மிதுவே யென்று தெளிந்திடுந் தேரர் வீடு
பரிவொடு † மடைவ ரென்று பகரும்வை பாடி [கன்றான். 1

---

† அடைவீர் என்பதும் பாடம். ‡ உருவருவுடைய.

### வைபாடிகன் மதமறுதலை

பொருளது புறம்ப தாகும் போதமந் தரம தாகுந்
தெருளிடி னிரண்டுஞ் சென்று சேர்ந்திடு மாற
[தின்றும்
அருவுணர் வுருவ ஞேய மாதலி னாலுங் கூடா
‡மருளுணர் வுடைய வைபா டிகற்கினி மாற்ற
[மின்றே. 1

### 3. அமணரில் நிகண்டவாதி மதம் I

வாச மாமல ரசோகு பேணிமறை
நீதி யோடுமலை யுந்தவத்
தாசை யாயுடை யகன்று மாசினை
அடைந்தில் வாழ்தரு மறத்தினில்
பாச மானது தவிர்ந்து பண்டிபட
வுண்டு பாயினொடு பீலிமேல்
நேச மாயவை தரித்து ளோர்களில்
நிகண்ட வாதியை நிகழ்த்துவாம். 1

ஈறி லாதன வநந்த ஞானமுதல்
எண்கு ணங்களெனு மொண்குணம்
மாறி லாதமதி மேவு சீதமென
மன்னி வானவர் வணங்கவே
வேறு லாவுகுண ஞான வாவரணி
ஆதி யெட்டினையும் விட்டசீர்
ஏறு பான்மையுட னீடு வாழருகன்
எங்க ளுக்கிறைவ னென்றனன். 2

‡ உருவருவுடைய எனவும் பாடம்.

கருவி கண்படு துடக்கொ ழிந்துவரு
காலமூன்றுநிகழ் காரியம்
பெருக நின்றெரு கணத்தி லேயுணர்
பெருந்த வக்கடவுள் பீடினன்
மருவி நின்றுவழி பட்ட வர்க்குமலை
வுற்ற வர்க்குமன மொத்திடும்
குருசி லெங்களிறை யென்று பின்னுநிகழ்
குற்ற மின்மையது கூறுவான். 3

பசித்த ருகபய செற்ற மோடுவகை
மோக சிந்தனை பழித்தனேய்
நசித்தல் வேர்வினெடு கேத மோடுமதம்
வேண்ட லீண்டதி சயித்தலும்
புசிப்பு வந்திடு பிறப்பு றக்கமவை
விட்டொ ரட்டகுண பூதனாய்
வசித்த் வன்னுலகின் மேலி ருந்தொருசொ
லிகல னுக்கருளு மென்றனன். 4

அந்த வாய்மொழியி னுல வன்சரண
மாதி யோகமுத லானநூல்
இந்த மாநில மயங்கி டாதவகை
யிங்கி யம்பின னிதன்பொருள்
வந்த காலமுயிர் தன்ம வதன்மிவற
மற்றும் விண்மருவு புற்கலம்
பந்தம் வீட்டினெ டநாதி யாயிவை
படைப்ப் தின்றியுள பத்துமே. 5

நிற்ற லோடுதலை போத லன்னுவப
நிகழ்த்து நீடுவெதி ரேகமும்
உற்ற தாமிவை கணத்தி லேமருவி
யுள்ள வாபுரியு மாறுதான்
கற்ற காலமள வெய்தி வாழுமுயிர்
காய மேவிநிறை வானதே
பெற்று வேறுவரு தன்மை நேரறிவு
பெற்ற தாகியுள பேசிலே. 6

பரந்து மீதுதரு மாத்தி காயமழி
வித்த நித்தமது பண்ணிடு
நிரந்து கீழதரு மாத்தி காயமது
நித்த மாய்மிக நிறுத்திடும்
புரந்த புண்ணிய மதற்கு நன்மைபுகல்
பாவ மானவது தீமையே
தரும்பொ ருட்கிடம தாகும் வானமிகு
புற்க லன்களவை சாற்றுவாம். 7

ஏணு மொன்றுடைய வாகி யெங்குமணு
வாயி ரும்புகன் மரங்களும்
பூணு மங்குரு வெலாமு மாகுமிவை
புற்க லப்பொருள்க ளென்னலாங்
காணு மங்கறு வகைத்தொ ழில்களவை
கட்டு விட்டநெறி கன்மமேன்
மான நின்றுவரு மாறி மாறிமுன்
வகைந்த துண்டுவிட மாட்சியே. 8

## நிகண்டவாதி மதமறுதலை

அருக னுக்க னந்த ஞான
மாதி யாதி யாகவே
பெருக நிற்றல் சீதமா
மதிக்க டைந்த பெற்றியேல்
ஒருவு மிட்ட வொப்பவ
னுயிர்த்தி றத்தி னுள்ளபின்
மருவு மிக்க குற்றமே
லறத்தின் மன்னி னெனில். 1

அறத்தின் மன்னு வித்தவன்
ஞெருத்த னுய வன்னறத்
திறத்தி னிற்றன் மற்றொ ருத்த
னல்வி ளைந்த செய்தியா
மறத்தி னற்ற வர்க்கெலாம்
வணக்க முன்னி றைக்குமேற்
பிறக்கு மிங்க வத்தை கொண்ட
தாரை யின்று பேசிடே. 2

கருவி தன்று டக்கொ ழிந்து
கண்டு வாழு மென்றியேல்
உருவு கொண்டு நின்ற தென்னி
லுண்டு தான்ம னுதிகள்
ஒருவி நின்ற தென்னி லத்த
மொன்றை யும்முணர்ந்திடான்
பொருடெ ரிந்து போகை கால
மொன்றி லேபு ணர்ந்திடான். 3

ஆர்வ கோப மானவை
யடைந்தொ றுப்ப வர்க்கெலாஞ்
சேர்வ தின்மை செப்பி லின்று
சீவ னேகு காயமாம்
ஒரு மன்னர் போலவே
யுயிர்க்க ளித்த லின்றியே
ஏர்கொள் பொன்னெ யிலிடத்
திருத்தல் பெற்ற தென்கொலோ. 4

சொல்ல தொன்று கொண்டிக்லி
ஞாத ஞட வேசொலின்
இல்லை யாம ஞாதிதா
ணியம்பு மாற தெங்ஙனே
நல்ல வாம ஞாதிதா
னவர்க்கு நாட வேயிலை
ஒல்லை யூம ரூமருக்
குரைத்த வாற தொக்குமே. 5

இன்ப பூமி சேரி கலி
ஞாத னிவ்வி ருநிலத்
துன்ப மங்கு ணர்ந்தி டாமை
யிங்க றிந்து சொல்லிடா
னின்ற பூமி யில்லிருந்
திருந்தி யாவு மெய்திடில்
துன்ப பூமி யாமு ணர்ந்து
சொல்ல வல்ல தில்லையே. 6

நிறைந்து காயு மோடு சீவன்
நின்ற தாகி லிவ்வுடல்
குறைந்த போது தானு மித்தொ
டொக்க வேகு றைந்திடு
இறந்து போகு மிக்கட
மிறந்த போது நீர்க்குடத்
துறைந்து டைந்தி டக்குட
முலர்ந்த வாற தொக்குமே. 7

கண்ட நூற ருந்தன் மாத்தி
காய மோட தன்மமு
முண்டு மீது கீழு லாவி
யுற்று நின்றி டப்பொருள்
கொண்ட தென்னி லத்தமிவ்
விரண்டு தன்மை கூடிடா
வண்டு புட்கள் போலெனின்
வழங்கி டாக ணத்திலே. 8

நீடு பாவ புண்ணி யங்க
ளானி ரய வானகம்
கூடு வார்க ளின்று நின்று
கூட்டு வார்க ளின்மையின்
ஓடு மாக ஊணத்தி றத்தி
னுற்ற வாறு ரைத்தியேல்
வீடு மாக ஊணக்கு நாடும்
வில்லி போல வேண்டுமே. 9

ஏண தொன்று புற்க லத்தி
னெய்து மென்னி ஞசமே
காண லாகு மக்கடங்
கழிந்த் தன்மை யில்லவை
பூண வேண்டு மேலுறும்
பொருத்த மின்மை யொன்றினின்
மாண வேய ணுப்பொருள்
நிகண்ட வாதி வைத்ததே. 10

ஆறு காரி யங்கண் மாற
வேத வங்க ளாமெனின்
மாறி வாணி கஞ்செயா
திருக்க வந்தி டாதன
மீறி லாத வூழ தென்னி
னெங்கு முள்ள தூழதே
பேறு காரி யம்விடப்
பிறப்ப தில்லை பேசிலே. 11

உடல்வ ருந்தன் மாத வங்க
ளுறுதி யென்று ரைத்திடிற்
படவ ருந்து நோயி ஞேர்கள்
படர்வர் பொன்னெ யிலெனுய்
திடம்வ ருந்த லின்ப மிச்சை
செய்தல் செய்தல் செய்தியேற்
கெடவ ரிந்தி டாயு ஞசி
கேடி லின்ப முன்னியே. 12

பூர்வ கன்ம மற்றிடப்
புசித்த பின்பு பொன்னெயிச்
நேர்வ தென்னி னக்கன் மத்து
நிச்ச யமி லாமையில்
தீர்வ தின்மை தீரின் வாயில்
சேர்வ தின்மை தெண்கடல்
நீர்வ றந்த போது பூளை
மீன ருந்த நின்றதே. 13

கூறு கூவன் மன்னுமக்
குடங்கு றித்து நீள்கரை
யேற லுற்ற தன்மைநீ
யொருத்த ரின்றி யேறுதல்
வேறொ ருத்த னக்க டத்தை
மீது நின்றெ டுக்கவே
யேற லுற்ற தன்மையிற்
சிவன்றி றத்தி னின்றிடே. 14

---

## ஆசீவகன் மதம் 2

என்னுயி ரதற்குப் போல
எவர்க்குமொத் திருப்ப னென்று
தன்னுயிர் வருந்தத் தானுந்
தலையினைப் பறித்துப் பார்மேல்
மன்னுயி ரெவற்றி னுக்கும்
வருந்தவே யறங்கள் சொல்லும்
அன்னதோர் வாய்மை யாசீ
வகனம ணர்களிற் கூறும். 1

வரம்பிலா வறிவ னுதி
வைத்தநூற் பொருள்க டாமும்
நிரம்பவே யணுக்க ளைந்து
நிலம்புன லனல்கால் சீவன்
பரந்திவை நின்ற பான்மை
பாரது கடினஞ் சீதந்
தரும்புனல் சுடுந்தீ வாயுச்
சலித்திடு முயிர்போ தத்தாம். 2

பார்புனல் பரக்குங் கீழ்மேற்
படர்ந்திடுந் தேயு வாயுச்
சேர்வது விலங்கி னுள்ளம்
அவற்ெறுடு சேரும் வேறு
சார்வது பெற்ற போது
சார்ந்தவப் பொருளின் தன்மை
நேர்வது மாகி நிற்கு
மிதுபொரு ணிகழ்த்து மாறே. 3

உணர்தரா வணுக்க ளுன்கு
மொன்றுகெட் டொன்ற தாகா
புணர்தரா வொன்றிற் புக்கொன்
றுயினும் பொருந்தி வாழும்
அணைதரா புதிய வந்திங்
கழிதரா பழைய வான
இணைதரா வொன்ெறுன்
ருகி மாறுத லொன்று மின்றே. 4

கொண்டுமுன் விரித்த னீட்டல்
 குறுக்குதல் குவித்த லூன்றல்
உண்டுதின் றுலத்தன் மீட்ட
 லுடைத்திட லொன்று மொண்ணு
விண்டுபின் புறம்பும் போகும்
 வேறுநின் றுள்ளு மேவும்
பண்டுமின் றென்று மெங்கும்
 பரந்தொரு தன்மைப் பாலே. 5

கண்ணினிற் காண வொண்ணுச்
 சனித்தந்தக் கன்மத் தாலே
நண்ணிடு முருக்க ளாகி
 நின்றபின் நரரோ காண்பார்
விண்ணினிற் றேவர் காண்ப
 ரோரணு மிக்க நான்கா
யெண்ணிய பொருள்க ளெல்லா
 மிசைவதென் றியம்பு மின்னே. 6

ஒன்றினை யொருவி மூன்றங்
 குற்றிடா விரண்டு விட்டு
நின்றிடா விரண்டுங் கூடு
 நெறிநில நான்கு நீர்மூன்
றின்றிரண் டழல்கா லொன்று
 யிசைந்திடும் பூமி யிவ்வா
றென்றுநீர் தீகா லாதி
 யீண்டுவ தென்றி யம்பும். 7

வெண்மைநன் பொன்மை செம்மை
கழிவெண்மை நீலம் பச்சை
யுண்மையிவ் வாறி னுள்ளுங்
கழிவெண்மை யோங்கு வீட்டின்
வண்மைய தாகச் சேரும்
மற்றிவை யுருவம் பற்றி
யுண்மையிவ் வொட்டுத் தீட்டுக்
கலப்பினி லுணரு மென்றான். 8

பேறிழ விடையூ றின்பம்
பிரிவிலா திருக்கை மற்றும்
வேறொரு நாட்டிற் சேறல்
விளைந்திடு மூப்புச் சாதல்
கூறிய வெட்டு முன்னே
கருவினுட் கொண்ட தாகும்
தேறிய வூழிற் பட்டுச்
செல்வதிவ் வுலக மென்றான். 9

புண்ணிய பாவ மென்னு
மிரண்டணுப் பொருந்த வைத்தே
யெண்ணிய விவற்றி னோடு
மேழென வெங்க ளோடே
நண்ணிய வொருவன் கூறு
ஞானமிவ் வாற தென்று
கண்ணிய கருத்தி னோர்கள்
கதியினைக் காண்ப ரென்றான். 10

## ஆசீவகன் மதமறுதலை

வாராநெறி வீடானபின்
 மண்மேலவன் வந்து
தாராமையி னூலானது
 தானேவுள தின்றும்
சேராமையி லணுவானவை
 யைந்தும்மொரு தேசத்
தோராவொரு காலத்தினி
 லொன்றுமுணர் வின்றும். 1

இருபான்மைய ரிவர்மண்டலர்
 செம்போதக ரென்றே
வருபான்மைய ரிவர்மண்டலர்
 மண்மேல்வரு நூலுந்
தருபான்மைய ரெனினீதல
 மதில்வாழ்பவர் தம்போல்
ஒருபான்மையி னுளராகுவ
 ருணராதுரை செய்தாய். 2

உயிரானவை யுடறீண்டிட
 லொட்டுக்கலப் பெய்தும்
பயில்வாலுணர் வெய்தும்மெனு
 மொழியானது பழுதாந்
துயிலார்தரு மவர்பாலகர்
 தொடராரறி வினைநீ
செயிலார்தரு முறையேதரு
 மிதுவோவுன செயலே. 3

அணுவானவை கீழ்மேலுள
வானுலவ யவமும்
நணுகாவென லாமேவரி
ஞசம்மவை யெய்து
மணுகாவெனி லிவைதொள்ளைகொ
ளாகம்முள வாகும்
துணிவாலிவை கலவாபல
தொகையாம்வகை யிலவாம். 4

மிகையாமணு வுள்வாகையி
னவையாமிக வென்னில்
தொகைநாலிடை யறலாலவை
தொகுமாறில வாகும்
பகையாகையின் மிசைதாழ்வினை
நிலையாவகை பண்ணும்
நகையாமுரை கழியாயிர
மவைதூரெண்ன நண்ணு. 5

கூடாவணு வறியாமையின்
வளிகூட்டுதல் கூறின்
நாடாவளி யணுவானவை
நணுகச்செயு மவரை
நீடாவினை தன்னுலெனி
னினைவின்றது வின்றுந்
தேடாயொரு வனைநீயிவை
செய்வானுள னென்றே. 6

## 4 *பட்டாசாரியன் மதம் 1

வேதமே யோதி நாத
    னிலையென்று விண்ணி லேறச்
சேதமாங் கன்மஞ் செய்யச்
    செயிமினி செப்பு நூலில்
நீதியே கொண்டு பட்டா
    சாரிய னிகழ்த்து நீர்மை
யோதநீர் ஞாலத் துள்ளே
    யுள்ளவா றுரைக்க லுற்றும். 1

உற்றிடுங் காம மாதி
    குணங்கடா முயிர்கட் குண்டாம்
மற்றிவை தருமே யாயின்
    மறைமொழி வாய்மை யின்றும்
†கற்றிடு நூலாற் போதங்
    கலப்பது கல்வி யின்றேல்
பெற்றிடு மழவு மூங்கு
    மென்னவே பேச லாமே. 2

உண்டொரு கடவுள் வேத
    முரைத்திட வுயிரின் றன்மை
கொண்டவ னல்ல வென்று
    கூறிடி னுருவங் கூடிற்

---

*செயிமினி முனிவர் செய்த பூர்வ மீமாஞ்சைக்குச் சபர முனிவர் பாடியஞ் செய்தார். சூத்திரத்திற்கும் பாடியத்திற் கும் சிறுபான்மை வேறுபாடு கொண்டு சூத்திரமதம் பற்றி வழிநூல் செய்தவர் பட்டாசாரியர். † கற்றநூலளவால் என்பதும் பாடம்.

பண்டைய வுயிரே யாகும்
    படித்தநூ லளவு ஞானங்
கண்டிடு முருவ மின்றேற்
    கருதுவ தில்லை யென்றான். 3

தேவரு முனிவர் தாமுஞ்
    சித்தரு நரரு மற்றும்
யாவரு முரைப்பர் வேத
    மியற்றின ரின்ன ரென்னப்
போவதொன் றன்று நாளும்
    பரம்பரை புகல்வ தாகும்
‡கூவனீ ரென்னிற் கொள்ளோ
    மறுமையைக் குறித்த லாலே. 4

உன்னிய வங்க மாறு
    மூன்றுப வேதந் தானுந்
தன்னுளே யடக்கி வேறு
    தங்கிடா வகையைச் சார்ந்து
முன்னமோர் தோற்ற மின்றி
    முடிவின்றி நித்த மாகி
மன்னியோ ரியல்பே யாகி
    வழங்கிடு மறைய தென்றான். 5

செய்தியு நெறியு மேவுந்
    தேவரும் பொருளு மெல்லா
மெய்திய பான்மை யாலே
    யோரியல் பியம்பா தாகு

---

‡ கூவலிங் கென்னில் என்பதும் பாடம்.

மையமில் கால மூன்று
　　மறிந்தபின் னெஞ்ச கத்தாய்
மெய்யதாய் வந்து தோன்றும்
　　விளம்பிடில் வேத நூலே. 6

தப்பிலா வாகுந் தாதுப்
　　பிரத்தியந் தன்னினேடே
யொப்பிலா தாம்பி ராதி
　　பதிகமா முறுப்புங் கொண்டு
செப்புமாம் வேதஞ் சொன்ன
　　விதிப்படி செய்யச் சேம
வைப்பதாம் வீடு பாச
　　† மருவலா மொருவ லாமே. 7

போக்கொடு வரவு கால
　　மொன்றினிற் புணர்வ தின்றி
யாக்கவே றெருருவ ரின்றி
　　யநாதியா யணுக்க ளாகி
நீக்கிடா வினையிற் கூடி
　　நிலமுத லாக நீடி
ஊக்கமா ருலக மென்று
　　முள்ளதென் றுரைக்க லாமே. 8

நித்தமா யெங்கு முண்டாய்
　　நீடுயி ரறிவு தானாய்ப்
புத்திதா னுதி யாய
　　கருவியின் புறத்த தாகிச்

---

† திருக்களிற்றுப்படியார். 60, செய்தல் ஒருவல்.

சுத்தமா யருவ மாகித்
தொல்லைவல் வினையின் தன்மைக்
கொத்ததோ ருருவம் பற்றிப்
புலன்வழி யுணர்ந்து நிற்கும். 9

* செயறரும் வினைகண் மாய்ந்து
சிந்தையிற் சேர்ந்து நின்று
பயனொடு பலியா நிற்கும்
பலாலமுந் தழையு மெல்லாம்
வயறனின் மருவி நாசம்
வந்தபின் பலத்தை வந்திங்
கியல்பொடுந் தந்தாற் போல
வென்றும்பி னியம்பு கின்றான். 10

நீதியா னித்த கன்மம்
நிகழ்த்திடச் சுபத்தை நீங்கார்
தீதிலா விச்சா கன்மஞ்
செந்தழ லோம்பிச் செய்ய
வேதுதான் வேண்டிற் றெல்லா
மெய்தலாஞ் சோம யாக
மாதிதா னுசை வீசி
யமைத்திட வீட தாமே. 11

கருதிய கன்ம ஞான
மிரண்டுங்கா லாகக் கொண்டு
மருவிட லாகும் வீடு
மதியினை மதித்துச் செய்தி

* சித்தியார் சுபக்கம் 2-ஆம் சூ. 17, 18 திருவிருத்தங்கள் பார்க்க.

யொருவிடிற் பதித ஞகும்
பதிதனைக் கதியி லுய்க்கத்
தருவதோர் நெறிதா னில்லை
யென்னவுஞ் சாற்றி ஞனே. 12

பசுப்படுத் தியாகம் பண்ணப்
புண்ணிய மாவ தென்று
வசிப்பிஞன் மறைகள் சொன்ன
வழக்கிஞல் வாய்மை யாக
நசிப்பிலா மந்தி ரங்கள்
நவிற்றலி னின்ப மாகும்
பசிப்புளா ஞெருவ னுண்ணப்
பசியது தீர்ந்த பண்பே. 13

## பட்டாசாரியன் மதமறுதலை

வேதஞ் சுயம்புவென வேதந்த வாய்மொழியில்
வேறும்ப்ர மாண முளதேல்
நீதந்து காணிங்கு மாதுங்க பாரதமும்
நேர்கண்ட தாகு மதுபோ
லோதுஞ் சொலாய்வருத லானுங் கடாதிபட
மோவந்தி டாவொ ருவரா
லேதந்த தாமறைக ளாய்வந்த வாய்மொழியும்
வேறிந்து சேக ரனதே. 1

உரைதந்தி டாளுெருவ னெனிலிந்த வானினிடை
யொலிகொண்டு மேவி யுளதாம்
புரைதந்த மாமறைக ளபிவெஞ்ச மாயொளிர்கை
பொருடந்த தீப மதுவேல்
வரைதந்த தாலிவுரை கபிலன்சொ லாகுமது
மறைகின்ற வாறும் வரவும்
விரைவின்சொலாயிதனை யெதுகொண்டு மேவுவது
விடைகொண்ட தாலு னுரையே. 2

உருவின் கணேமருவி வரிலின்று தேரருரை
யுளதுங்க ணூலின் மறையும்
தருகின்ற நாதரவ ரிவரென்று நாமமது
தரவந் திடாமை யதனுல்
வருமென்று நீடியெனில் வளர்கின்ற தீவதனில்
வருகின்ற வாடை பலவால்
ஒருதந்து வாயனவ னிவனென்ற போதிலிவை
யுளவென்று நீடி யவையே. 3

மறைநின்று நாலுதிசை யவரொன்ற தாகவரு
முரைதந்த வாய்மை யதனுல்
நிறைவென்று நீடுமெனில் வனையுங் கடாதிபல
சொலவொன்றி நீடி யுளதாங்
குறைவின்றி நாடுமொழியவைசென்றுகூடுவதோர்
குணமுண்ட தாகு மலர்தான்
உறைகின்ற மாலேதனி லுளதென்ற தாகுமெனி
லுணர்வின்ற தாழி யொலியெ. 4

உடனின்று நாமுணரு மதுகண்ட வாறொருவன்
உலகங்க ளேயு ருவமாய்
இடநின்று மாமறைக ளவையன்று வாய்மொழிய
இவைகொண்டு லோக நெறியின்
கடனின்று வாழுமது கருதும்பி ணைவழி
கருமஞ்செய் காசினி யுளோர்
திடமென்று சீரரச னுரைதங்கு மோலைதிரு
மூகமென்று சூடு செயலே. 5

முடிவின்றி வேதியர்கள் முதல்வந்த மூவர்களும்
மொழியுஞ்சொ லாரிய மெனில்
கடிவின்றி யேகணித ரவர்கண்ட வாறதுவென்
வடகண்ட சாதி கடியா
தொடிவின்றி யோதுவதெனுரைதங்குவேதமொழி
யுளதென்று கூறு மவர்தாம்
அடியின்று தானெனும தறிவின்றி யீனுமவர்
இலையென்ற வாதர வதே. 6

அறிகின்ற பான்மையவ யவநின்ற தாகினணு
வழியுங் கடாதி யெனவே
செறிகின்ற வாறதிலை யெனின்வந்து செருமது
திடமன்று கூட வொருவன்
குறிகொண்டு காரின்முளை வருகின்ற பீசமவை
குலையொன்றி வேனி லழியு
முறுகின்ற காலமவை யுடனின்று போயழியு
முலகென்று நீடியிலதே. 7

நிறைவெங்கு மாகிலுயிர் நெறிநின்று போய்வருத
லணைவின்ற தாமு டலிலே
குறைவின் றெலாமுமுள குடகந்த மாகிலவை
விடநின்ற வாறு குறியா
வுறைகின்ற மாதவர்க ளுடனின்று போய்வறிதோ
ருடல்கொண்டு மீள்வ துணராய்
மறைதந்த † வாய்மையதி னிறைவின்றி யேயுலகின்
மலைகின்ற தாலு னுரையே. 8

அழிகின்ற தால்வினைக ளாகின்ற வாறெனெரு
வதுமங்கி யான பரிசேல்
ஒழிவின்றி யோதனமு மறவுண்ண நாம்வினைக
ளுறுகின்ற வாற தெனலாம்
கழிகின்ற தாலறிவு வினைதந் திடாவினைஞர்
கருமங்க ளுடி யுறுவோர்
பழுதின்றி யேயுதவு மதுபண்ப தாவருள்
பரமன்க ளுகும் வினையே. 9

கருமங்கண் ஞானமது வுடனின்ற லான்மருவு
கதிதங்க லாவ தெனின்நீ
தருமங்க ராகமுத லவைதங்கு மேலறிவு
தவிரும்பின் வீடுமணையா
பொருணின்று தேடிவரு பயனுண்டு போகவினை
புரிகின்ற வாற தெனவே
திருநின்ற போகம்வள ரவிசென்று மேவியது
செலவுண்டு சூழ்வ செயலே. 10

---

† வாய்மைதனின் என்பதும் பாடம்.

## ‡ பிரபாகரன் மதம் 2

அருந்தவனுஞ் சைமினிபண் டாரணநூ லாய்ந்
[தானுய்த்
திருந்துமுல கினின்கொண்டு செப்பியநூற்
[றிறமதனைப்
பரிந்துபிர பாகரன்பட் டாசானில் வேறாகிப்
புரிந்துரைசெய் நெறியதனைப் புவனிமிசைப்
[புகன்றிடுவாம். 1

அருஞ்செயலி னபாவத்தே யபூர்வமெனு
[மதுதோன்றித்
தருஞ்செயனின் றழியிற்பின் பலிப்பிப்ப தாகுமது
வருஞ்செயலொன் றின்றியமண்சிலைபோலாமுத்தி
தருஞ்செயலீ தெனவுணர்ந்து தாரணிமே
[லவன்சாற்றும். 2

### பிரபாகரன் மதமறுதலை

வேறுபலன் தருவதுதான் வினையென்று வேதங்கள்
கூறவோ ரபூர்வந்தான் கொடுக்குமெனக்
[கொண்டவுரை
மாறுதரு மறையோடு முன்பின்றி வந்ததாற்
றேறியவிண் பூமுடிமேற் சேர்ந்துமணந் திகழ்ந்
[ததுவாம். 1

---

‡ இவர் பட்டாசாரியர் மாணுக்கர். தமது ஆசிரியர் சூத்திரமதம்பற்றி வழிநூல் செய்ய, இவர் பாடிய மதம் பற்றி வழிநூல் செய்தார். இவர் மதம் குருமதமென்றும் வழங்கப்படும்.

ஆனந்தங் கதியென்ன வறிவழிகை வீடென்கை
யூனம்பி னுணர்வழிந்தோர்க் குள்தாகுமுயர்முத்தி
தானிங்குச் சிவப்பொழியத் தழனிற்கு மாறில்லை
ஞானங்கெட் டுயிர்நிற்கு மெனுமுரைதா
[னண்ணுதால். 2

## 5 சத்தப்பிரமவாதி மதம் I

### சிந்தடிவிருத்தம்

உரையானது மையலி னுலகாம்
புரையோருண ரும்பொருள் பொய்யிதனை
விரையாதுண ரும்மது வீடெனவே
வரையாதுரை வாதி வகுத்தனனே. 1

பரிணும விவர்த்தன மாயமதிற்
றருமாமுல குள்ளது சத்தமதே
பொருளானது சொன்னல மல்லவெனின்
மருவாது பொருட்டிற மற்றிலையே. 2

பூமாவென வேயுரை யும்பொருளு
மாமாம் † வடி வொன்றி லணைந்திலதா
னுமாதர வெய்துசொ னன்கருவாய்த்
தாமாம்பொரு ணெற்பொரி தானெனவே. 3

சொல்வந்தெழ லும்பொரு டோன்றுதலாற்
சொல்லேபொரு ளென்று துணிந்திடுநீ
சொல்லும்பொரு ளும்முட னின்றதெனிற்
சொல்லும்பொரு ளின்று சொனின்றதுவே. 4

---

† பொருள் என்பதும் பாடம்.

## சத்தப்பிரமவாதி மதமறுதலை

உரையானது மையலி னுலகே
லுரையாயொரு மெய்ய்லு முள்ளதென
வரையாதுண ரும்மது வண்கதியேல்
வரையாமறை யோடு மலைந்தனையே. 1

அருவம்முரை யாதலினவ்வுருவாய்
மருவும்பரி ணும மறந்திடுமாம்
பருகுந்ததி யர்னது பாலதெனி
லுருவம்மது வாயழி யும்முரையே. 2

ஆயம்முட னந்த விவர்த்தனமு
மாயவ்வுள தென்றுசொ லெவ்விடமு
மாய்நின்றமை யின்னுரை யின்னலமு
மாயும்பொரு ளுக்கறி நாமமதே. 3

உரைபோற்பொரு ளுக்குரு வுன்மையினு
லுரையே†யுள தென்றனை யின்றறியென்
றுரையேகவி மாலவ னுக்குளதா
முரையாய்க்கவி யா கவொர் மாலினையே. 4

நெல்லிற்பொரி யாவது நீடழலிற்
சொல்லிற்பொரு ளொன்றொடு தொக்கி [டலாற்
கல்வித்திற மாமுரை காட்சியினுன்
மல்லற்பொருள் சால வளந்தருமே. 5

† பொருளென்றனை என்பதும் பாடம்.

முன்கண்ட பொருட்பெய ராதலினுற்
பின்கண்ட பிழம்புண ரும்பெயரால்
நன்கண்ட பொருட்கொரு நாசமதின்
றென்கண்டனை †காரிய மின்றழிவே. 6

பொருளிந்திரி யம்முணர் வோடுபுமான்
இருளின்றி யிடும்மொளி யித்தனையு
மருவும்பொழு தில்வரு ஞானமதில்
ஒருவும்பெய ரத்த முதித்திடுமே. 7

அத்தந்தெளி தற்கொளி யானதுபோல்
சத்தம்பொரு டானறி தற்குளதாம்
நித்தம்மது வன்றுரை நின்றழியும்
சித்தன்னெ ருவன்னுரை செய்தனனே. 8

---

## மாயாவாதி மதம் 2

நானே பிரம மென்றுரைத்து ஞாலம்
பேய்த்தே ரென வெண்ணி
ஊனே புகுந்து நின்றுயிர்கட்
குபதே சங்க ளுரைத்துவரும்
மானு மதிகே டனுமாய
மாயா வாதி பேயாகித்
தானே யுரைக்கு மந்நூலி
னுண்மை தன்னைச் சாற்றுவாம். 1

---

† காரண மென்பதும் பாடம்.

அறிவா யகில காரணமாய்
அனந்தா னந்த மாயருவாய்ச்
செறிவா யெங்கு நித்தமாய்த்
திகழ்ந்த சத்தாய்ச் சுத்தமதாய்க்
குறிதான் குணங்க ளொன்றின்றிக்
கூறும் வேதந் தனக்களவாய்ப்
பிறியா வனுபூ திகந்தனக்காய்
நின்ற தந்தப் பிரமந்தான். 2

ஒன்ரு மிரவி பலபாண்டத்
துண்டா முதகத் தங்கங்கே
நின்ருற் போல உடரூேறும்
நிகழ்ந்து நிற்கும் பொருண்மேற்கண்
சென்ருற் போலப் புலன்களுக்கும்
சிந்தை தனக்கும் தெரிவரிதாம்
என்ருற் காட்சி முதலாய
இருமூன் றளவைக் கெட்டாதால். 3

இருளிற் பழுதை யரவெனவே
‡யிசையு மிரவி யிருங்கதிர்கள்
அருளப் பழுதை மெய்யாகி
யாவும் பொய்யா மதுபோல
மருளிற் சகமுஞ் சத்தாகி
மருவித் தோன்று மாசில்லாத்
தெருளிற் சித்தே சத்தாகும்
பித்தாஞ் சகத்தின் செயலெல்லாம். 4

உலகந் தானு நிருவசனத்
துண்டா மின்றே லுதியாது
நிலவி யுண்டே லழியாது
நிற்ப தாகு மித்தையாம்
இலகு சுத்தி கனல்சேர
வின்றும் வெள்ளி நின்றதாம்
குலவு சகமும் விவகாரம்
பரமார்த் தத்திற் கொள்ளாதால். 5

தாங்கு முலகுக் குபாதனம்
சத்தாம் சிலம்பி நூல்தன்பால்
வாங்கி வைத்துக் காப்பதுபோல்
வைய மெல்லாம் தன்பக்கல்
ஓங்க வுதிப்பித் துளதாக்கி
நிறுத்தி யொடுக்கத் திலதாக்கு
மாங்கு வந்த வாறதனுற்
சத்தாற் சகத்தி னமைவெல்லாம். 6

மன்னும் பிரமந் தனில்வானுய்
வானில் வளியா யந்தவளி
தன்னி லழலா யழலின்பால்
சலமாய்ச் சலத்திற் றுரணியாய்ச்
சொன்ன விதனின் மருந்தாகித்
தோற்று மருந்தி லன்னமாய்
அன்ன மதனிற் றுவக்காதி
ஆறு தாது வாயினவால். 7

ஆறு தாதுக் களுங்கூடி
வந்த கோச மன்னமயம்
மாறில் பிராண கோசமயம்
மன்னு மதனின் மனோமயந்தான்
வேறு வரும்விஞ் ஞானமயம்
மேவு மதனி னதுதன்னிற்
கூறி வருமா னந்தமயங்
கோச மயம்பின் கூடியதால். 8

கோச வுருவிற் பிரமந்தான்
கூடித் தோன்று நீடுமொரு
காச மருவுங் கடந்தோறு
நின்றாற் போலக் கதிரவன்றன்
வீசு கிரண முருவின்கண்
வெளிப்பட் டிடுவ தகிற்பற்றும்
பாச மதனுக் கின்றாகும்
என்றாற் பரத்திற் பற்றுண்டோ. 9

அலகின் மணிக ளவைகோவை
யடைந்த பொழுதினங்கங்கே
நிலவு மொருநூல் பலநிறமாய்
நின்றாற் போல நீடுருவம்
பலவு மருவும் பேதத்தாற்
பன்மை யாகும் பிரமந்தான்
குலவு போக போக்கியங்கள்
கொள்ளும் போன்று கொள்ளாதால். 10

போற்றுஞ் செயலாற் பலநாமம்
புனைந்து போக போக்கியத்தில்
தோற்று நனவு கனவினுடன்
சுழுத்தி துரிய மெய்துமிதற்
கேற்ற கரண நிரனிரையே
யீரேழ் நாலொன் றெல்லாமும்
மாற்றி நிற்குங் கேடின்றி
வந்த போக மாய்ந்திடவே. 11

கருவி யெல்லா நானெனவே
கருதல் பந்த மக்கருத்தை
யொருவ முத்தி யுண்டாகு
முள்ளம் வித்தாஞ் செய்தியினுன்
மருவ மாயா கர்ரியங்கள்
அவித்தை மாய வேமாயை
பிரியும் பிரிய ஞானமது
பிறக்கும் பிறவா பேதமே. 12

ஆன கன்ம வனுட்டயங்கள்
அந்தக் கரண சுத்திதரும்
ஊன மின்றி யச்சுத்தி
ஞான மதனை யுண்டாக்கும்
ஞான மதுதான் பிரமத்தை
நானென் றுணர்த்து நான்பிறந்தால்
வான மதிநீர்த் துளக்கமெனக்
காணுந் தன்னை மாயையிலே. 13

தானே தானு யனுபோகந்
    தன்னிற் றன்னை யனுபவித்திட்
டூனே யுயிரே யுணர்வேயென்
    றொன்று மின்றி யுரையிறந்து
வானே முதலாம் பூதங்கள்
    மாய மாயா தேநின்று
நானே பிரம மெனத்தெளியும்
    ஞானம் பிரம ஞானமே. 14

சாற்று மறைதத் துவமசிமா
    வாக்கி யங்க டமையுணர்ந்தால்
போற்றி யதுநீ யானுயென்
    றறைவ தல்லாற் பொருளின்றே
தேற்று மிதனைத் தெளியாதார்
    தெளியப் பஞ்ச சாதனமேல்
ஏற்ற லியம நியமாதி
    யோக மிருநான் கியற்றுவரால். 15

---

## மாயாவாதி மதமறுத்தலை

ஏக நானென வியம்பி யிப்படி
    யறிந்து முத்தியடை மின்னெனு
மோக மானவுரை‡ சோகமின்பொடு
    முடிந்தி டாதுமல டாகிய

---

‡ கொம்புமூன்றொடு என்பதும் பாடம்.

காக மானது கருங்க லின்றசை
பறித்த முங்கரிய குஞ்சியின்
ருக மார்பசி தவிர்க்க வாயிடை
கொடுத்த தென்றுரைசெய் தன்மையே. 1

நீடு வேதமள வாக வேகமெனும்
நீதி தானிகழ்வ தாகுமேல்
நாடி ஞாதுருவு ஞான ஞேயமொடு
நாளு நான்மறையு மோதலால்
ஓடு மாகுமுன தேக மோதுமிவை
யூன மர்கியுரை மாறுகோள்
கூடு மாகுமனு பூதி தானுமது
கூடி டாதறிவி லாமையே. 2

நீதி யாலொளிகொள் பானு வானதக
ஙீரி லேநிகழு மாறுபோல்
ஆதி தானுருவ மாய காயமதின்
மேவி யாவதிலை யாகுமாம்
தீதி லாவுருவ மாக லானிழல்கள்
சேர வேறிட மிலாமையால்
ஓதி லோரகலி னீரி லேயொருவர்
காண லாலிலது னேகமே. 3

வேறு வாயில்புல ஞேடு மேன்மனமும்
மேவி டாதுபிர மாணமும்
கூறி டா†துளது தானெ ஞவுணர்தல்
கோடு நீமுயலி ஞடிஞய்

† அறிவு என்பதும் பாடம்.

ஈறி லாதபர மேக மேயென
வியம்பு நீயிசையு ஞானமும்
பேற தாவதிலை பேத மானவிது
பேண வேயுளது பேசிலே. 4

இலகு சோதிமணி யெனவு மேகமெனின்
இதனி லேகமது வில்கினுய்
குலவு காசுமொளி யதுவு நீடிவளர்
குணமு நாடுவதொர் குணியுமாம்
பலவு மானகுண மொருவு மேகமது
வெனவு நீப்கரி னிகரிலா
வுலக மானதனை யுதவு மாறதிலை
யுணர்வு தானுமிலை யுணரிலே. 5

புற்றி னேர்பழுதை தொக்க போதுமயிர்
புளக மாகவர விரவிலே
யுற்ற தாமதனை யொக்க வேயுல
குதிக்கு மாறுமொரு சத்திலே
பெற்ற தாகுமெனி னப்பி ராந்தியுடை
யோரு மப்பிரம பேதமாய்
நிற்பர் நீபகரின் முற்று மையநிலை
பெற்று †நின்மல மிலாததாம். 6

ஓதி யேயுலக மதனை நீயிரு
வசன மாகவுரை செய்வதென்
பேதை யோவுளது மிலது மல்லபொருள்
பேசு வாருமுள ரோசொலா

---

† இன்பம திலாத்தாம் என்பதும் பாடம்.

யாதி யேயுளது வருத லாலிலதி
லாவ தின்மைய தழிந்துபோம்
நீதி யாலுளதி லாமை நேர்வதெனி
னேர்மை யாகியது நின்றதே. 7

வேற தாகியது போலி ருந்தமையில்
வெள்ளி சுத்தியெனி லையமே
கூற லாமொரு பரத்தொ டொத்தபொருள்
கொண்டு ‡வைத்தபடி கண்டனம்
மாறி டாதுநில நீர தாகியனல்
வாயு வாகியவை மாறியும்
சேறி டாதுவிவ கார மன்றுபர மார்த்த
மாயவை செறிந்ததே. 8

மாய நூலது சிலம்பி வாயினிடை
வந்த வாறதனை மானவே
ஆய தேயுலக மான தும்பிரம
மதனி லேயெனி னடங்கிநின்
றேயு மாகுமொரு சித்து மத்துட
னிலாத தென்றுபி னியம்பினீ
பேய னேகட மிருத்தில் வந்தது
பிறப்ப தாவதிலை பேசிலே. 9

வேற தாகுமுரு வத்தி லேபரம்
வெளிப்ப டும்மென விளம்பினீ
யூறி லா†வொரு சவத்தி லேபிரம
முண்டு காணுணர்வ தின்றுதான்

‡ விண்டநிலை கண்டனம் என்பதும் பாடம்.

† வுருவசத்திலெ என்பதும் பாடம்.

மாறி வாயுவு மனுதி யானவையும்
வந்தி டாமையினி னின்றெனி
னீறு தானுடைய தாய தோபிரம
மென்கொ லோவிவை யிறப்பதே. 10

பற்ற தின்றியுட னின்றி டும்பர
மெனப்ப கர்ந்தனை பரிந்துடன்
உற்று டம்பு‡திரை நோய்ந ரைச்சிறை
யுறுப்ப ழிந்திவையு முள்ளபின்
குற்ற மென்றிதனை விட்டி டாதுவிட
வென்ற லுங்குலைவு கொண்டிடும்
பெற்றி கண்டுமொரு பற்ற றும்பரிசு
பேச வேயுளது ளுசையே. 11

சோதி மாமணிக ளூடு போனதொரு
நூலு மானநிலை சொல்லிடும்
நீதி யான்மணிகள் பேத மாகியொரு
நூலி னின்றமை நிகழ்த்திளுய்
ஆதி தாஞெருவ ஞகி யேபல
வநந்த யோனியி லமர்ந்தவன்
பேதி யாதநிலை பேசி ஞுயுலகு
பேத மேயில தபேத்மே. 12

ஒத்து நின்றுடலி னின்ப துன்பமவை
யுற்று முற்றிடுவ தின்றெனும்
பித்த வுன்னுரையி லுற்ற தேதில்து
பெற்ற தின்றிலது பெற்றதேல்

‡ நரைதிரைகணுேய்சிறை என்பது பாடம்.

துய்த்த லின்றுறுதல் சீவ பாவமது
சொல்லி னென்றினுந்தோய் விலாமைநீ
வைத்து நித்தமன வாக்கி றந்தபர
மென்ன மானமிலே யின்னமே. 13

எங்கும் நின்றிடி லவத்தை யின்றிடு
மிசைந்தி டுங்கரண மென்னில்நீ
யங்கு நின்றபர மெங்கொ ளித்ததது
நின்ற தேலவை யடங்கிடா
இங்கு நின்றதொரு காந்த மானகல்
இரும்பு சன்னிதி யியங்குநேர்
தங்கி நின்றதெனி †லிங்கு மீளும்வகை
தந்தி டாதுனுரை தப்பதே. 14

இருள்பொ திந்ததொரு பருதி யிவ்வுலகில்
இசையி லின்றுடல நானெனும்
அருள்பொ திந்ததொரு பிரம மிங்குளது
மருவி நின்றவுரு வொருவியே
தெருள்பொ திந்துபர ஞனெ னுந்தெளிவு
சென்ற போதுகதி யென்றிடும்
பொருள்பொ திந்தெனி னமல னுக்குமலம்
வருத லாலுளது புன்மையே. 15

சுத்த மானது பரத்தி னுக்கணேவ
தின்று சுத்தம தநாதிநீ
வைத்த மாயமுறு சித்த சுத்தமுற
மற்ற தற்குமலம் வைத்தனே

---

† நீங்கி என்பதும் பாடம்.

ஒத்த சீவன்மல கன்ம மாயையுறு
கின்ற காரண முணர்ந்திடாய்
பித்த னேவிறகி னிற்பி றப்பதெரி
யென்னின் வேறுபொருள் பெற்றதே. 16

உன்னி னீயுமனு போக மென்றபொழு
துற்றி டுந்துவித மற்றதிங்
கென்னி லில்லையெனி யில்லை நீயுமறி
வின்மை கண்டவிட முண்மையேன்
மன்னு மோருணர்வு வந்தி டும்முணர்
வெலாமு மாயையெனின் மாயையே
சொன்ன தோர்பிரம மாயி டும்பிர்ம
மாயை யாயறிவு சோருமே. 17

ஆர ணங்கள்தரு தத்து வம்மசி
பதங்க ளின்பொரு ளறிந்திடாய்
கார ணம்மதுவு நீயு மென்றிருமை
கண்டு வேறதின்மை கருதலான்
நார ணன்பிரம னுலு நாடரிய
நாய கன்கழல்கள் நண்ணிநீ
ஏர ணைந்துபொலி சாத னங்கள்கொடு
யோக ஞானமு மியற்றிடே. 18

---

## 6 பாற்கரியன் மதம்

மன்னு மறையின் முடிவென்று
மாயாவாதி யுடன்மலைந்து
பின்ன மாகிப் பிரமத்தைப்
பேதாபேதஞ் சாதித்துப்

பன்னு மொருநூ லதுவாகப்
பாரின் மீது பாற்கரியன்
சொன்ன வதனை யிந்நூலி
னகத்தே தோன்றச் சொல்லுவாம்.

சித்தே யுலகாய்ப் பரிணமித்துச்
சீவ னுகித் திகழ்ந்தமையால்
சத்தே யெல்லா முத்தியினைச்
சாரக் கண்ட ஞானங்கள்
வைத்தே மொழியு மாமறைகள்
சொன்ன மரபே வந்தக்கால்
ஒத்தே கெட்டுப் பிரமத்தோ
டொன்ருய்ப் போமென் றுரைத்தனனே.

## பாற்கரியன் மதமறுத்தலை

இயம்பு கின்றதுல காயிடா துசட
மின்றி நின்றுசட மாகியே
முயங்கு கின்றமையி லிலவ ணத்திரத
முழுது மேகனதை முயல்கைபோல்
பயந்த தென்னிலறி யப்ப டும்பொருளும்
அறிவு மென்றுபல வாகுமோ
தியங்கு கின்றதெ னுரைத்தி டாய்கடின
மாதி யாகிவரு சித்தனே. 1

உன்னு கின்றபிர மத்தி லேசிறிதிவ்
வுலக மானதென வோதின்நீ
மன்னு கின்றசில கால மோட்டழியும்
அழிய வந்துதவு மாயையால்

தன்னி லொன்றுமெனில் வருத லோடிறுதி
தருத லாலது சடத்ததாம்
உன்னெ டச்சகமு முண்மை யன்றுசட
மென்ன வேயுறுதி மன்னுமே. 2

வீத்தெ ழுந்துமர மாய்வி ளைந்தமை
விளம்பி ணுயுவமை வேறுநீ
நித்த மென்றவுரை பொய்த்து நீடுசக
மாயெ ழுந்தழியு நின்பரம்
ஒத்தெ ழும்பொழுது வித்தி னுக்கவனி
யுண்டு தாரக முனக்கெனே
பித்த னென்றுல குரைத்தி டும்பிரம
மாயி ணுயிவை பிதற்றியே. 3

சூட கங்கடக மோதி ரஞ்சவடி
தொடரொ டாரமுடி தோடுநா
ணுட கந்தருவ தாகு மிப்படி
யனைத்து மப்பிரம மாகுமேல்
நீடி டும்பணிகள் செய்து ளோரவை
புனைந்து ளோர்களை நிகழ்த்திடு
நாடி டுஞ்சக மியற்று வோர்கொடு
நடத்து வோருளர் நவிற்றிலே. 4

அறிவி னேடுசெயன் † மாற வீடதனை
யணுகொ ணுதவை யிரண்டினுல்
உறுதி யானபிர மத்தி னேடழிய
வொன்ற லாமென வுரைத்திகாண்

† மாறில் என்பதும் பாடம்

இறுதி யேலதனொ டிசைவ தின்றிசைவ
துள்ள தாயிடினவ் வின்பமே
பெறுதி நீயுடலோ டுயிர்க ளாயறிவு
பிரியு மாறுசெயல் பெறுவதென். 5

### 7 நிரீசுரசாங்கியன் மதம்

மூலம் புரியட் டகம்விகிர்தி
யாகி மூன்ருய்ப் பிரகிருதி
தூலஞ் சூக்கு மம்பரமாய்ச்
சுத்த புருடன் சன்னிதியிற்
பாலன் சேட்டை புரிந்துலகமி
யோனி பலவாய்ப் பரந்தொடுங்குஞ்
சால வென்று நிரீசுவர
சாங்கி யன்ருன் சாற்றிடுமே. 1

### நிரீசுரசாங்கியன் மதமறுதலே

சுத்த னறிவன் புருடனெனிற்
சூழா தாகும் பிரகிருதி
பெத்த நீங்கி ஞலும்பின்
பெத்த ஞவன் பேரறிவாற்
சுத்த மேவும் பிரகிருதி
கண்டு கழிக்க மாட்டானேன்
முத்த ஞகான் சுத்தனுக்கு
மூலப் பிரகி ருதியிலேயாம். 1

புருடன் பிரகி ருதிபெற்றுற்
　　போதஞ் சிறிதங் குண்டாகிக்
குருடன் முதுகின் முடவனிருந்
　　தூர்ந்தாற் போலப் பிரகிருதி
இருடன் னிடத்தே யிருந்தியங்குங்
　　கன்மா லிறையன் றிரண்டினையும்
அருட னுருவாய்ச் சேட்டிப்பித்
　　தறியு மமல னரனேயாம். 2

அறியான் புருடன் பிரகிருதி
　　யசேத னங்கா ரியத்தினுக்குக்
குறியாய் நாத னுளனென்று
　　கூறு முத்தி விவேகமெனிற்
செறிவாந் தளைபோர் காதறியிற்
　　சேர்த்தோன் வேண்டுஞ் செயலிற்போம்
நெறியாற் பணிசெய் துடற்பாச
　　நீக்கிக் கொண்ணீ நின்மலனுல். 3

## 8 பாஞ்சராத்திரி மதம்

ஆதியா யருவ மாகி
　　யகண்டபூ ரணனுய் ஞானச்
சோதியாய் நின்ற மாயன்
　　சுவேச்சையா லுருவு கொண்டு
நீதியார் கருணை யாலே
　　நீள்கடற் றுயின்று நூலு
மோதினு னென்று பாஞ்ச
　　ராத்திரி யுரைப்ப னுற்றே. 1

உந்தியி லயனை யீன்று
　　மவனைக்கொண் டுலகுண் டாக்கி
யந்தநல் லுலக ழிக்க
　　வரனையு மாக்கு வித்துத்
தந்திடுஞ் சகத்தி னுக்குத்
　　திதிகர்த்தா தானே யாகி
வந்திடுந் தோற்ற மீறு
　　நிலைமையும் பண்ணு மாயன். 2

மீனுமை கேழ னார
　　சிங்கம்வா மனனுய் வென்றி
யானுத விராமர் மூவ
　　ராயனு யளித்தான் கற்கி
தானுயும் வருவ னின்ன
　　மென்றவன் சாற்றித் தேவர்
கோனுயு நிற்ப னென்று
　　கூறுவன் குறிப்பி னேடே. 3

ஏழ்கடல் செலுவி லேற்று
　　மிருங்கிரி முதுகி லேற்றுந்
தாழ்தல முழுதுங் கண்டுந்
　　தமனிய னுடல்பி ளந்தும்
வாமுல களந்து மன்னுய்
　　மன்னர்க்கு மன்ன ராயும்
பாழ்பட வுழறிப் பாரு
　　நோக்கும்பின் புரியு மாயே. 4

பொய்கைவாய் முதலை வாயிற்
போதகம் போத மாட்டா
தையனே நாதா வாதி
மூலமே யென்ற ழைப்ப
வுய்யயாம் பணிமா லோல
மோலமென் ருேடிச் சென்று
வெய்யவாய் முதலை வீட்டிக்
கரிக்கும்வீ டருளி ஞனே. 5

அலைகடல் கடைந்து வானேர்க்
கமுதினை யளித்துந் தீய
கொலைபுரி யசுரர் தம்மைக்
கொன்றுல கங்கள் காத்தும்
கலைமலி பொருளன் பர்க்குக்
கருணையா லுரைத்து மிக்க
தலைமையி னிற்பன் மாய
னென்றும்பின் சாற்றி ஞனே. 6

மாயையா யுயிராய் மாயா
காரிய மாகி மன்னி
மாயையாற் பந்தஞ் செய்து
வாங்கிடு மவனு லன்றி
மாயைபோ காதென் றெண்ணி
மாயனை வணங்கப் பின்னை
மாயைபோம் போனுன் மாயன்
வைகுண்டம் வைப்ப னென்ருன். 7

## பஞ்சராத்திரி மதமறுதலை

ஆதிதா ணுகி லாதிக்
கந்தமுண் டாகு மந்தக்
கோதிலா னிறைவ னென்று
கூறிடும் வேத ஞானச்
சோதியாய் நின்ரு ணுகிற்
ருேய்ந்திடான் மாயை ஞானத்
தீதிலா வுருவ மென்னிற்
சேர்ந்திடா தாதுச் சென்றே. 1

தாதுவா னதுவே தென்னிற்
சங்கரன் பலிக்குச் செல்லத்
தீதிலாக் கோதண் டத்தைத்
திறந்தவன் விட்ட போது
போதுவ துதிர மன்ரு
போந்துமூர்ச் சித்து வீழ்ந்தா
ணுதனு ரெழுப்பப் பின்னே
நடந்தனன் கிடந்த வன்ருன். 2

இச்சையா லுருவங் கொள்வ
னரியெனி லிகழ்வேள் விக்கண்
எச்சனு யுண்ணப் புக்கங்
கிருந்தவன் றீச ணுலே
யச்சமார் தலையறுப்புண்
டான்றலை யாக்கிக் கொள்ளா
னச்சிஞர் போற்ற நாத
ணுரணன் றலைகொ டுத்தான். 3

நூலினை யுரைத்து வேத
 † நூலினை நுவலும் வண்ண
மாலருள் செய்தா னென்றாய்
 மறைநீதி யுலகி யற்கை
சாலவே தெரியா தாகிக்
 கிடந்தநாட் சகத்தி யார்க்கு
மாலின்கீ ழிருந்து வேத
 மருளினு னறைந்தா னூலே. 4

அயன்றனைப் பயந்தா னென்றாய்
 அரியயன் சிரஞ்சே திப்பப்
பயந்திடான் றலைமா றானும்
 படைத்திடான் சிரத்தைக் கிள்ளுஞ்
சயந்தரு மரனைத் தந்தா
 னயனென்கை தப்பே யன்றோ
தியங்கிடா துணரா யெல்லாஞ்
 சிவன்செய லென்று தேர்ந்தே. 5

சீவர்கள் சனனம் போலச்
 சிலர்வயிற் றுதித்த மாலைத்
தேவென்றே வையுங் காக்கச்
 சுவேச்சையாற் செனித்தா னென்பாய்
பூவன்பின் படைக்க மாட்டா
 தரனடி போற்ற வேதக்
கோவந்து முகத்திற் றோன்றிச்
 சிருட்டியைக் கொடுத்தல் கூறும். 6

---

† நூலயன் என்பதும் பாடம்.

நாரண னயனை யீன்று
　　மயனுநா ரணனை யீன்றுங்
காரண மொருவ ருக்கங்
　　கொருவர்தா மிருவ ருக்கும்
வாரண முரித்த வள்ளல்
　　காரண னென்று மன்ற
வாரண முரைக்கும் பக்கத்
　　தவர்களு மறைந்தா ரன்றே. 7

அழிப்பரி யேவ லென்ரு
　　யரிதனை யழிக்கு மன்றங்
கழிப்பது த்விர்க்க மாட்டா
　　னங்கமு மழித்தே பூண்டான்
அழிப்பரி யேவ லென்றங்
　　கறைந்தது மழிந்த தன்ரே
அழித்திடு மரனே யாக்க
　　நோக்கமு மாக்கு வானே. 8

வானங்கீழ் மண்ணு மெல்லா
　　மாயனே கர்ப்பா னென்ருய்
தான்ஞ்சுஞ் சலந்த ரன்றன்
　　னுடல்கீண்ட சக்க ரத்தை
யானஞ்சு மாடு வான்பாற்
　　பெற்றுல் தளித்த வார்த்தை
தானெங்கு மாகு மெல்லாஞ்
　　சங்கரன் காப்பே யாமே. 9

மாலினூர் சேலி ஞராய்
 வாரிக ளடக்கிக் கொண்டன்று
ஆலியா வுலக மெல்லா
 மழிப்பவ ஞனே யென்னச்
சேலினூர் தமைப்பி டித்துச்
 செலுவினை யிடந்து கண்ணைச்
சூலியா மேல ணிந்தான்
 சூலிதா ஞகு மன்றே. 10

ஆமையாய் மேருத் தாங்கி
 யடைகலாய்க் கிடந்த போது
நாமெனு வுலகா தார
 நாதனென் றகந்தை பண்ண
ஆமெனு ரன்று மென்னு
 ரமரரு மரனூர் பார்த்துத்
தாமநா ளாமை யாரைத்
 தகர்த்தோடு தரித்தா ரன்றே. 11

எழுதல மிடந்து பன்றி
 யாயிருங் கொம்பி லேற்றுத்
தொழுதுல கிறைஞ்ச நின்ற
 சோதிநா னென்ற போதன்
றழுதலம் வந்து வீழ
 வருங்கோடு பறித்த ணிந்தான்
கழுதலம் வந்த காட்டி
 லாடிடுங் கடவு ளன்றே.

இங்கடா வுளனோ மாலென்
 றிரணியன் றூணை யெற்ற
உங்கடா மோத ரன்று
 னுருநர சிங்க மாகி
யெங்கடா போவதென்னு
 வுடல்பிளந் திறையா னென்ன
அங்கடா சிம்பு ளாகி
 யெடுத்தடர்த் தான ரன்றான். 13

தானமென் றிரந்து செல்லத்
 தனக்குமூ வடிகொ டுப்ப
வானமு மளந்து கொண்டு
 மாவலி தன்னைப் பின்னை
யீனமாஞ் சிறையி லிட்டா
 னிறையன்றோன் றீந்தோர் தங்கட்கு
ஊனஞ்செய் திடுவோர் தாங்கள்
 உத்தம ரல்ல ராகும். 14

மாயமான் றன்னைப் பொய்ம்மா
 னென்னவறி யாத ரக்கன்
மாயையி லகப்பட் டுத்தன்
 மனைவியைக் கெடுத்தான் றன்னை
மாயைக்குக் கர்த்தா வென்பை
 மதிகெட்டங்கவனைக் கொன்று
நாயனார் தமைப்பூ சித்தான்
 கொலைப்பாவ நணுகிடாமே. 15

பரசுடன் பிறந்தான் ருனும்
பத்தனுய்ப் பரசினுலே
யரசறுத் தரனை நோக்கி
யருந்தவம் புரிந்தா னன்று
பரசிய பரசு ராமன்
பலதேவ னுலக மெல்லா
முரைசெயு முமையாள் கோனை
யுண்ணினைந்தி யோகி னின்ருர். 16

ஓதிய வாசு தேவர்
தமையுப மனியு தேவர்
தீதிலா நோக்கஞ் செய்து
சிவ்கரஞ் சிரத்திற் சேர்த்தி
யாதிபா லடிமை யாக்க
வரியுடல் பிராண னத்த
மீதெலாங் கொண்ணீ யென்றங்
கிறைஞ்சினு ரறிந்தி டாயே. 17

பின்வரும் பரிதா னுகி
யரியென்ருய் பின்பு வந்தா
லென்வரு மீச னுலென்
றறிகிலோ மிவுளி யார்க்கு
முன்வரு மவதா ரங்கண்
முடிந்தமை யறிந்தா யன்றே
பொன்வருஞ் சடையி னுன்றன்
புகழெங்கும் புக்க தன்றே. 18

கைவரை மூல மேயோ
வெனக்கரிக் குதவுங் காட்டின்
மொய்வரை யெடுத்தான் மூல
மாயிட வேண்டு மோதான்
ஐயனே முறையோ வென்று
லரசனே வங்குச் செல்வான்
வையகங் காப்பான் செல்கை
வழக்கன்றே வூர்காப் பான்போல். 19

அன்றியுமி யானை மாலுக்
கடிமையாய் மூல மேயோ
வென்றிடு மதனுன் மாறு
னிறைவனென் றியம்ப வேண்டா
வுன்றனக் கடிமை யானு
முன்னையெம் பெருமா னென்று
லின்றுநீ வணங்கு முன்ற
னெம்பெரு மானே நீயே. 20

ஞாலமுண் டவனு முண்டார்
நல்லமு தமர ரென்றாய்
வேலைநஞ் செழமா லாதி
விண்ணவர் வெந்து சென்ற
காலமின் றெமக்குக் காவாய்
கடவுளே யென்ன நாதன்
ஆலமுண் டிலனேற் றேவ
ரமுதமுண் டிடுவ தெங்கே. 21

அஞ்சியன் றரிதா னோட
வசுரனைக் குமர னாலே
துஞ்சுவித் தொருபெண் ணாலே
தாருக னுடறு ணிப்பித்
தஞ்சிடப் புரந்தீ யூட்டிச்
சலந்தர னுடல்கீண் டோத
நஞ்சினை யுண்டு மன்றோ
நாயக னுலங் காத்தான். 22

பார்த்தனு ரிரத மேறிப்
படைதனைப் பார்த்துச் சார்பைக்
கூர்த்தவம் பாலே யெய்து
கொன்றர சாளே னென்னத்
தேர்த்தனி லிருந்து மாயை
செய்துமால் கொல்லச் செப்பும்
வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய்
புரங்கொளுூன் மதித்தி டாயே. 23

மாயைதா னுயிர்க ளாகா
வுயிர்கடா மாயை யாகா
மாயவ னிவைதா னாகா
னிவைதானு மாய னாகா
ஏயுமா மநாதி யாக
விறைபசு பாச மென்றே
தூயவன் கலப்பி னாலே
யெல்லா்மாய்த் தோன்று வான்காண். 24

பாசத்தைப் பசுக்கள் விட்டுப்
பதியினை யடைய முத்தி
யாசற்ற வாக மங்க
ளறைந்திட வறிவின் றிங்கே
மாசற்ற மான்மா சாகி
மாயையு முறுவ னென்னிற்
கூசிப்பின் கொள்ளார் நல்லோ
ருனக்காமிக் குழப்பு நூலே. 25

பிரமநா னென்ற போது
பிரமனே டரியுங் கூடிப்
பரமனு ரிகலி டாமற்
பார்த்திடர் பண்ணி நின்ற
உரமனு ரழலு ருபந்
தன்னையு முணர மாட்டான்
கரமநா டிகிரி யேற்றான்
கடவுளென் றறைவ தென்னே. 26

தேரரி யிறையன் றென்றே
சிவமுனி ததீசி யோடே
போர்புரிந் திலக மாலைப்
புக்கவன் பிடித்த டித்து
மார்பினி லுதைத்து மாறன்
சக்கிரம் வயிற்றில் வைத்திட்
டேர்மலி படைய டைத்திட்
டரிபட வெறிந்தா னன்றே. 27

சூலிகா ணிறைமா வல்லன்
　　சூலியைத் தொழுந்தூர் வாசன்
மாலினூர் மார்மி திப்பத்
　　திருமறு மார்ப ஞகி
நூலினூர் மார்ப ஞேன்ருள்
　　பட்டிடஞ் சுத்த மென்று
பாலினூர் கடலா ஞங்கே
　　பரிவொடுந் திருவை வைத்தான். 28

தவகுண ஞய்மால் சென்று
　　தீவியைச் சக்கி ரத்தால்
அவகுணஞ் செய்தன் ருேடப்
　　பிருகுவந் தவளைப் பார்த்துச்
சிவனல தறியே ஞகி
　　லிதுசெய்தோன் செறிக பத்துப்
பவமென மொழிய மாலும்
　　பயப்பட்டுப் பதறி வீழ்ந்தான். 29

பயப்பட்டுப் பரனை நோக்கித்
　　தவம்பண்ணப் பரனுந் தோன்றி
நயத்தஞ்ச லென்று வேண்டிற்
　　றென்னென நார ணன்ருன்
பெயர்த்தருள் பிருகு சாப
　　மெனவன்பன் பிருகு வென்ன
உயக்கொணீ பவந்தோ றென்ன
　　வோமென்ரு னுலக நாதன். 30

இப்படிப் பிருகு சாபத்
தீர்ந்து பிறப்பில் வீழ்ந்து
மெய்ப்படு துயர முற்று
வருபவன் விமல னல்ல
னெப்படி யானுஞ் சொன்னே
னிறையரி யல்ல னென்றே
மைப்படி கண்ட னண்டன்
மலரடி வணங்கி டாயே. 31

சிவஞானசித்தியார் பரபக்கம்

முற்றிற்று.

## புறப்புறச் சமயம்

1. உலகாயதம். 2. பௌத்தம்: (i) மாத்தியமிகர். (ii) யோகாசாரர். (iii) சௌத்திராந்திகர். (iv) வைபாடிகர்

### 3 ஆருகதம் (அமணமதம்)

(1) நிகண்டவாதி. (ii) ஆசீவகன்.

## புறச் சமயம்

### 4 மீமாஞ்சை

(1) பட்டாசாரியன். (ii) பிரபாகரன்.

### 5 ஏகான்ம வாதம்

(i) சத்தப்பிரமவாதம் (ii) மாயாவாதம் (iii) பாற்கரியவாதம்

### 6 சாங்கியம்

நிரீசுவரசாங்கிய மதம்

### 7 பாஞ்சராத்திர மதம்

---

## சிவஞானசித்தியார் பாடல்தொகை பரபக்கம்

முகவுரையிற் றசமெழுமூன் றதன்முப்பா னென்று
மூதுலகன்முப்பானென் றெண்ணைந்தாம் புத்தன்
திகழ்மூவர்க் கோரெட்டாம் நிகண்டனுக்கெட்
[டீரேழ்
சீவகனுக் கீரைந்தோ டிருமூன்றும் பாட்டன்
பகர்பதின்மூன் றீரைந்தே பாகரனீ ரிரண்டாம்
பரிணமன் நான்கிருநான் கேமாயா வாதன்
நிகழைம்மூன் றறுமூன்றும் பாற்கரியற் கேழாம்
நிரீசுரற்குச் சதுராத்திரி யெழுமுப்பா னென்றே.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# அருணந்தி தேவ நாயனர்

அருளிச்செய்த

# சிவஞான சித்தியார் சுபக்கம்

---

## காப்பு

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
    னல்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
    தருமொருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
    யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்திருமால் செல்வமுமொன்
    றோவென்னச் செய்யுந் தேவே.

---

உ

சிவமயம்

# பாயிரம்

---

## மங்கல வாழ்த்து

அறுவகைச் சமயத் தோர்க்கு
மவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது வுடைத்தாய் வேதா
கமங்களின் குறியி றந்தங்
கறிவினி லருளான் மன்னி
யம்மையோ டப்ப ஞகிச்
செறிவொழி யாது நின்ற
சிவனடி சென்னி வைப்பாம். 1

## நூல்வழி

என்னையிப் பவத்திற் சேரா
வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளி ஞலே
தாளிணை தலைமேற் சூட்டு
மின்னமர் பொழில்சூழ் வெண்ணை
மேவிவாழ் மெய்கண் டானூல்
சென்னியிற் கொண்டு சைவத்
திறத்தினைத் தெரிக்க லுற்ரும். 2

## நுதலிய பொருள் முதலியன

பண்டைநற் றவத்தா ரேன்றிப்
பரமனைப் பத்தி பண்ணுந்
தொண்டரைத் தானே தூய
கதியினில் தொகுப்பன் மார்க்கர்
கண்டநூ லோதி வீடு
காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள் சேரும்
பரிசினைப் புகல லுற்றும். 3

## அவையடக்கம்

மறையினு லயனுன் மாலான்
மனத்தினுன் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னுலுங்
கூறெணு தாகி நின்ற
விறைவனுர் கமல பாத
மின்றியா னியம்பு மாசை
நிறையினுர் குணத்தோர்க் கெல்லாம்
நகையினை நிறுத்து மன்றே. 4

## ஆசங்கை நீக்கல்

அருளினு லாக மத்தே யறியலா மளவி னுலுந்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை [யுள்ளே
மருளெலா நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
இருளெலா மிரிக்க லாகு மடியரோ டிருக்க லாமே.

---

## அளவையியல்

### அளவைகள் பல

அளவை காண்டல் கருதலுரை
யபாவம் பொருளொப் பாறென்பர்
அளவை மேலு மொழிபுண்மை
ஐதி கத்தோ டியல்பெனநான்
களவை காண்ப ரவையிற்றின்
மேலு மறைவ ரவையெல்லாம்
அளவை காண்டல் கருதலுரை
யென்றிம் மூன்றி னடங்கிடுமே. 1

### அளவை மூன்றன் இலக்கணம்

மாசறு காட்சி யையந்
திரிவின்றி விகற்ப முன்னு
ஆசற வறிவ தாகு
மனுமான மவினு பாவம்
பேசுறு மேதுக் கொண்டு
மறைபொருள் பெறுவ தாகுங்
காசறு முரையிம் மானத்
தடங்கிடாப் பொருளைக் காட்டும். 2

### ஐயம் முதலியவற்றின் இலக்கணம்

கண்ட பொருளை யிரட்டுறவே
கருத லையந் திரியவே
கொண்ட றிரிவாம் பெயர்சாதி
குணமே கன்மம் பொருளெனவைந்

துண்ட விகற்ப வுணர்வினுக்குப்
பொருளி னுண்மை மாத்திரத்தின்
விண்ட லில்லா வறிவாகும்
விகற்ப மில்லாக் காட்சியே. 3

### காட்சி முதலியவற்றின் வகை

காண்டல் வாயின் மனந்தன்வே
தனையோ டியோகக் காட்சியென
வீண்டு நான்கா மனுமானந்
தனக்கும் பிறர்க்கு மென்றிரண்டா
மாண்ட வுரைதந் திரமந்திரத்தோ
டுபதே சச்சொ லெனமூன்றும்
பூண்ட வளவைக் கெதிர்புலன்றன்
னியல்பு பொதுவென் றிரண்டாமே. 4

### பிரமேயம்

அன்னிய சாதி யுந்தன்
சாதியு மகன்று நிற்றல்
தன்னியல் பன்னி யத்தைத்
தவிர்ந்துதன் சாதிக் கொத்தல்
துன்னிய பொதுவி யற்கை
சொன்னவிவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்கள் யாவு
மடங்கிடு மான முற்றால். 5

### வாயிற்காட்சி முதலியவற்றின் இயல்பு

உயிரினோ டுணர்வு வாயி
 லொளியுரு வாதி பற்றிச்
செயிரொடு விகற்ப மின்றித்
 தெரிவதிந் திரியக் காட்சி
அயர்விலிந் திரிய ஞான
 மைம்புலன் சார்ந்து யிர்க்கண்
மயர்வற வந்த ஞான
 மானதக் காண்ட லாமே. 6

அருந்தின்பத் துன்ப முள்ளத்
 தறிவினுக் கராக மாதி
தருந்தன்வே தனையாங் காட்சி
 சமாதியான் மலங்கள்வாட்டிப்
பொருந்திய தேச கால
 வியல்பகல் பொருள்க ளெல்லாம்
இருந்துணர் கின்ற ஞானமி
 யோகநற் காண்ட லாமே. 7

### அனுமான வகையும் உறுப்புக்களும்

பக்க மூன்றின் மூன்றேது
 வுடைய பொருளைப் பார்த்துணரத்
தக்க ஞானந் தன்பொருட்டாம்
 பிறர்தம் பொருட்டா மனுமானந்
தொக்க விவற்றுற் பிறர்தெளியச்
 சொல்ல லாகு மச்சொல்லு
மிக்க வன்னு வயத்தினொடு
 வெதிரே கச்சொல் லெனவிரண்டாம். 8

மூன்று பக்கம் பக்கநிகர்
பக்க நிகரில் பக்கமெனத்
தோன்றும் பக்கந் துணிபொருளுக்
கிடமா முவமை நிகர்பக்க
மான்ற பொருள்சென் றடையாத
விடமா நிகரில் பக்கமுதல்
ஏன்ற விரண்டும் பொருளுண்மைக்
கிடமா மொன்று பொருளின்றும். 9

ஏது மூன்று மியல்புகா
ரியத்தோ டநுப லத்தியிவை
யோதி னியல்பு மரமத்தைக்
காட்ட லுறுகா ரியம்புகைதன்
ஞுதி யாய வனல்காட்டல்
ஆகு மநுப லத்தியது
சீதமின்மை பனியின்மை
காட்டல் போலுஞ் செப்பிடினே. 10

புகையா லனலுண் டடுக்களைபோ
லென்னப் புகற லந்நுவயம்
வகையா மனலி லாவிடத்துப்
புகையின் ருகு மலரினெடு
முகையார் நீரிற் போலன்று
மொழிதல் வெதிரே கச்சொலிவை
தொகையா ருறுப்பைந் தொடுங்கூடச்
சொல்லு வாரு முளர்துணிந்தே. 11

போது நாற்றத் தாலறிதல்
பூர்வக் காட்சி யனுமானம்
ஓது முறையா லறிவினள
வுணர்தல் கருத லனுமானம்
நீதி யான்முற் கன்மபல
நிகழ்வ திப்போ திச்செய்தி
யாதி யாக வரும்பயனென்
றறித லுரையா லனுமானம். 12

**உரையளவையின் வகை**

அனாதியே யமல னாய
வறிவனூ லாக மந்தான்
பினாதிமா றின்றிப் பேணல்
தந்திர மந்தி ரங்கண்
மனாதிக ளடக்கித் தெய்வம்
வழிபடும் வாய்மை யாகுந்
தனாதியீ றிலாதான் தன்மை
யுணர்த்துத லுபதே சந்தான். 13

**கருதலளவையின் குற்றமும் தோல்வித் தானமும்**

ஈண்டு பக்கப் போலிநான்
கேதுப் போலி யொருமூன்றாய்
வேண்டு மெழுமூன் றாகும்விளங்
குவமைப் போலி யீரொன்பான்
காண்டுந் தோல்வித் தானமிரண்
டிருபத் திரண்டாங் கருதிலிவை
யாண்டு மொழிவ ரவையெல்லாம்
அளக்கி லறுபத் தைந்தாகும் 14

# பிரமாணவியல்

---

## முதற்சூத்திரம்

### பதியுண்மை

ஒருவனே டொருத்தி யொன்றென்
றுரைத்திடு முலக மெல்லாம்
வருமுறை வந்து நின்று
போவது மாத லாலே
தருபவ னொருவன் வேண்டுந்
தான்முத லீறு மாகி
மருவிடு மநாதி முத்த
சித்துரு மன்னி நின்றே. 1

### முதலதிகரணம்

#### 1. உலகாயத மறுப்பு

#### உலகம் மூவினை உடையது

உதிப்பது மீறு முண்டென்
றுரைப்பதிங் கென்னை முன்னோர்
மதித்துல கநாதி யாக
மன்னிய தென்ப ரென்னின்
இதற்குயா னநுமா னாதி
யெடேனிப்பூ தாதி யெல்லாம்
விதிப்படி தோற்றி மாயக்
காணலான் மேதி னிக்கே. 2

### முத்தொழில் செயற்கையே

இயல்புகாண் டோற்றி மாய்கை
யென்றிடி னியல்பி னுக்குச்
செயலதின் றியல்பு செய்தி
செய்தியே லியல்ப தின்றும்
இயல்பதாம் பூதந் தானே
யியற்றிடுஞ் செய்தி யென்னிற்
செயல்செய்வா னொருவன் வேண்டுஞ்
செயற்படு மசேதனத்தால். 3

### உலகம் முதல்வனுல் நடைபெறுகிறது

நிலம்புன லனல்கால் காண
நிறுத்திடு மழிக்கு மாக்கும்
பலந்தரு மொருவ னிங்குப்
பண்ணிட வேண்டா வென்னின்
இலங்கிய தோற்ற நிற்ற
வீறிவை யிசைத லாலே
நலங்கிளர் தோற்ற நாசந்
தனக்கிலா நாதன் வேண்டும். 4

### பௌத்தம் பற்றிய ஆசங்கை

சார்பினிற் றேன்று மெல்லாந்
தருபவ னில்லை யென்னில்
தேரினில் லதற்கோ தோற்ற
முள்ளதற் கோநீ செப்பாய்

ஓரினில் லதுவுந் தோன்று
  துள்ளதே லுதிக்க வேண்டா
சோர்விலா திரண்டு மின்றி
  நிற்பது தோன்று மன்றே. 5

### உலகு சற்காரியம்

உள்ளது மிலது மின்றி
  நின்றதொன் றுளதே லுண்டாம்
இல்லதே லில்லை யாகுந்
  தோற்றமு மிசையா தாகும்
உள்ளகா ரணத்தி லுண்டாங்
  காரிய முதிக்கு மண்ணில்
இல்லதாம் படங்க டாதி
  யெழிறரு மியற்று வானல். 6

ஒருபொரு ளொருவ னின்றி
  யுளதில தாகு மென்னில்
தருபொரு ளுண்டே லின்றுந்
  தன்மையின் றின்றே லுண்டாய்
வருதலின் றிலது கார்ய
  முதலுள தாகு மென்னில்
கருதுகா ரியமு முண்டாய்த்
  தோற்றமுங் கருத்தா வாலாம். 7

### மீமாஞ்சை பற்றிய ஆசங்கை

காயத்தி னழிவு தோற்றங்
  கண்டன முலகிற் காணு
நீயித்தை யுரைத்த வாரிங்
  கென்னெனி னிகழ்த்து முண்மை

மாயத்த வுலகம் பூநீர்
 தீவளி வான மாதி
யாயித்தா னென்றி னென்று
 தோன்றிநின் றழித லாலே. 8

### உலகம் முற்றும் ஒருகாலத்து தோன்றும் மறையும்

ஓரிட மழியப் பின்னு
 மோரிட நிற்கு மொக்கப்
பாரிட மழிவ தின்று
 மென்றிடிற் பயில்வித் தெல்லாங்
காரிட மதனிற் காட்டு
 மங்குரங் கழியும் வேனிற்
சீருடைத் துலகு காலஞ்
 சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும். 9

### காலம் துணைக்காரணம் - வினைமுதல் அன்று

காலமே கடவு ளாகக்
 கண்டனந் தொழிலுக் கென்னிற்
காலமோ வறிவின் றாகு
 மாயினுங் காரி யங்கள்
காலமே தரவே காண்டுங்
 காரணன் விதியி னுக்குக்
காலமுங் கடவு ளேவ
 லாற்றுணைக் கார ணங்காண். 10

## அணுகாரண வாத மறுப்பு

அழிந்தபி னணுக்க டாமே
யகிலமாய் வந்து நின்று
கழிந்திடுங் கன்மத் தென்னிற்
கன்மமு மணுவுங் கூட
மொழிந்திடுஞ் சடமே யாகி
முடிதலான் முடியா செய்தி
யொழிந்திடு மணுரூ பங்கள்
உலகெலா மொடுங்கு மன்றே. 11

காரண வணுக்கள் கெட்டாற்
காரிய வுலகின் றென்னிற்
காரண மாயை யாகக்
காரியங் காண லாகுங்
காரண மாயை யென்னை
காண்பதிங் கணுவே யென்னிற்
காரண மாயை யேகாண்
காரிய மணுவிற் கண்டால். 12

## மாயையே முதற்காரணம்

காரிய மென்ப தென்னை
காரண வணுவை யென்னிற்
காரிய மவய வத்தாற்
கண்டனங் கடாதி போலக்
காரிய வுருவ மெல்லா
மழிதருங் கார ணத்தாற்
காரிய வுறுப்பின் மாயை
தருமெனக் கருதி டாயே. 13

தோற்றமு நிலையு மீறு
மாயையின் ஞெழில தென்றே
சாற்றிடு முலகம் வித்துச்
சாகாதி யணுக்க ளாக
ஏற்றதே லீண்டு நிற்கு
மில்லதே லியைவ தின்று
மாற்றநீ மறந்தா யித்தான்
மாயையை மதித்தி டாயே. 14

மாயையி னுள்ள வஞ்சம்
வருவது போவ தாகு
நீயதிங் கில்லை யென்னி
னிகழ்ந்திடு முயலிற் கோடு
போயுகு மிலைக ளெல்லா
மரங்களிற் புக்குப் போதின்
ஆயிடு மதுவு மென்னிற்
காரணங் கிடக்க வாமே. 15

## சாங்கிய மதமறுப்பு

கருதுகா ரணமுண் டாகக்
காரிய முள்ள தாகி
வருதலா லநாதி வைய
மற்றொரு கடவு ளித்தைத்
தருதலா லாதி யாகச்
சாற்றலு மாகு மாயைக்
கொருவனு ரென்னிங் கென்னி
னுள்ளவா றுரைப்பக் கேள்நீ. 16

புத்திமற் காரி யத்தாற்
பூதாதி புருடன ருனு
மத்தனு கரணம் பெற்ரு
லறிதலா லவற்றை மாயை
உய்த்திடு மதனுன் மாயைக்
குணர்வொன்று மில்லை யென்றே
வைத்திடு மதனு லெல்லாம்
வருவிப்பா னொருவன் வேண்டும். 17

### உலகத்தின் மூன்று காரணங்கள்

காரிய கார ணங்கண்
முதறுணை நிமித்தங் கண்டாம்
பாரின்மண் டிரிகை பண்ணு
மவன்முத றுணைநி மித்தந்
தேரின்மண் மாயை யாகத்
திரிகைதன் சத்தி யாக
ஆரியன் குலால ஞய்நின்
ருக்குவ னகில மெல்லாம். 18

### மூவகை முதற்காரணம்

விந்துவின் மாயை யாகி
மாயையி னவ்வி யத்தம்
வந்திடும் விந்துத் தன்பால்
வைகரி யாதி மாயை
முந்திடு மராக மாதி
முக்குண மாதி மூலந்
தந்திடுஞ் சிவன வன்றன்
சந்நிதி தன்னி னின்றே. 19

### வைகரி வாக்கின் இயல்பு

வைகரி செவியிற் கேட்ப
தாயத்த வசன மாகி
மெய்தரு முதான வாயு
மேவிட விளைந்த வன்னம்
பொய்யற வடைவு டைத்தாய்ப்
புத்திகா ரணம தாகி
யையமில் பிராண வாயு
வடைந்தெழுந் தடைவு டைத்தாம். 20

### மத்திமை வாக்கின் இயல்பு

உள்ளுண ரோசை யாகிச்
செவியினி லுறுதல் செய்யா
தொள்ளிய பிராண வாயு
விருத்தியை யுடைய தன்றித்
தெள்ளிய வக்க ரங்கள்
சிந்திடுஞ் செயல தின்றி
மெள்ளவே யெழுவ தாகும்
மத்திமை வேற தாயே. 21

### பைசந்தி வாக்கின் இயல்பு

வேற்றுமைப் பட்ட வன்னம்
வெவ்வேறு விபாக மாகித்
தோற்றுத லடைவொ டுக்கிச்
சொயம்பிர காச மாகிச்

சாற்றிடு மயிலி னண்டந்
தரித்திடுஞ் சலமே போன்றங்
காற்றவே யுடைய தாகிப்
பைசந்தி யமர்ந்து நிற்கும். 22

### சூக்குமையின் இயல்பும் அதனை அறிவதன் பயனும்

சூக்கும வாக்க துள்ளோர்
சோதியா யழிவ தின்றி
யாக்கிடு மதிகா ரத்திற்
கழிவினை தன்னைக் கண்டால்
நீக்கமி லறிவா னந்த
முதன்மைநித் தியமு டைத்தாய்ப்
போக்கொடு வரவி னைப்பும்
விகாரமும் புருட னின்றும். 23

### வாக்குச்சத்தி வைப்புச்சத்தியே

நிகழ்ந்திடும் வாக்கு நான்கு
நிவிர்த்தாதி கலையைப் பற்றித்
திகழ்ந்திடு மஞ்ச தாகச்
செயல்பரி ஞம மன்று
புகழ்ந்திடும் விருத்தி யாகும்
படங்குடி லானுற் போல
மகிழ்ந்திடும் பிரம மன்று
மாமாயை யென்பர் நல்லோர். 24

### சுத்தமாயையின் பிறகாரியங்கள்

வித்தைகள் வித்தை ஈசர்
சதாசிவ ரென்றி வர்க்கு
வைத்துறும் பதங்கள் வன்னம்
புவனங்கள் மந்தி ரங்கள்
தத்துவஞ் சரீரம் போகங்
கரணங்கள் தாமெ லாமும்
உய்த்திடும் வைந்த வந்தா
னுபாதான மாகி நின்றே. 25

### வாக்குச் சக்தியே சவிகற்ப அறிவுக்குக் காரணம்; அதுவே பரம பந்தமுமாம்

மூவகை யணுக்க ளுக்கு
முறைமையின் விந்து ஞான
மேவின தில்லை யாகில்
விளங்கிய ஞான மின்றும்
ஓவிட விந்து ஞானம்
உதிப்பதோர் ஞான முண்டேற்
சேவுயர் கொடியி னுன்றன்
சேவடி சேர லாமே. 26

### மாயேயத்தின் பொதுவியல்பு

அருவினி லுருவந் தோன்றி
யங்காங்கி பாவ மாகி
யுருவினி லுருவ மாயே
யுதித்திடு முலக மெல்லாம்.

பெருகிடுஞ் சுருங்கும் பேதா
பேதமோ டபேத மாகும்
ஒருவனே யெல்லா மாகி
யல்லனு யுடனு மாவன். 27

## அருவில் உருவாராது என்னும் மாயாவாத மறுப்பு

அருவுரு வீனு தாகும்
விகாரமு மவிகா ரத்தின்
வருவது மில்லை யென்னின்
வான்வளி யாதி பூதந்
தருவது தன்னின் மேக
சலனசத் தங்க ளோடு
முருவமின் னுருமே றெல்லாம்
உதித்திடு முணர்ந்து கொள்ளே. 28

## இரண்டாமதிகரணம்

### முதல்வன் பரம் ஆதார நிமித்தன்

மண்ணினிற் கடாதி யெல்லாம்
வருவது குலால னுலே
எண்ணிய வுருவ மெல்லாம்
இயற்றுவ னீசன் றனுங்
கண்ணுகா ரியங்க ளெல்லாங்
காரண மதனிற் காண்பன்
பண்ணுவ தெங்கே நின்றிங்
கென்றிடிற் பகரக் கேள்நீ. 29

சீலமோ வுலகம் போலத்
 தெரிப்பரி ததனு னிற்கும்
கோலமு மறிவா ரில்லை
 யாயினுங் கூறக் கேள்நீ
ஞாலமே ழினையுந் தந்து
 நிறுத்திப்பின் னுசம் பண்ணுங்
காலமே போலக் கொள்நீ
 நிலைசெயல் கடவுட் கண்ணே. 30

முதல்வன் தன்செயல்களால் விகாரம் உருன்

கற்றநூற் பொருளுஞ் சொல்லுங்
 கருத்தினி லடங்கித் தோன்றும்
பெற்றியுஞ் சாக்கி ராதி
 யுயிரினிற் பிறந்தொ டுக்க
முற்றதும் போல வெல்லா
 வுலகமு முதித்தொ டுங்கப்
பற்ருெடு பற்ற தின்றி
 நின்றனன் பரனு மன்றே. 31

உலகப் படைப்பின் பயன்

உயிரவை யொடுங்கிப் பின்னு
 முதிப்பதெ னரன்பா லென்னிற்
செயிருறு மலத்தி னுகுஞ்
 சிதைந்ததே தென்னிற் சித்தத்து
அயர்வொழி காரி யங்கள்
 அழியுங்கா ரணங்கி டக்கும்
பயிறரு காரி யம்பின்
 பண்டுபோற் பண்ணு மீசன். 32

தோற்றுவித் தளித்துப் பின்னுந்
துடைத்தரு டொழில்கண் மூன்றும்
போற்றவே யுடைய னீசன்
புகுந்தது விகார மென்னிற்
சாற்றிய கதிரோ னிற்கத்
தாமரை யலருங் காந்தங்
காற்றிடுங் கனலை நீருங்
கரந்திடுங் காசி னிக்கே. 33

சங்காரக் கடவுளே முதல்வன்

உரைத்தவித் தொழில்கண் மூன்றும்
மூவருக் குலக மோத
வரைத்தொரு வனுக்கே யாக்கி
வைத்ததிங் கென்னை யென்னின்
விரைக்கம லத்தோன் மாலு
மேவலான் மேவி னோர்கள்
புரைத்ததி கார சத்தி
புண்ணிய நண்ண லாலே. 34

இறுதியாங் காலந் தன்னி
லொருவனே யிருவ ருந்தம்
உறுதியி னின்று ரென்னி
னிறுதிதா னுண்டா காதாம்
அறுதியி லரனே யெல்லா
மழித்தலா லவனு லின்னும்
பெறுதுநா மாக்க நோக்கம்
பேரதி கரணத் தாலே. 35

### விளையாட்டு என்பதன் கருத்து

சொன்னவித் தொழில்க ளென்ன
காரணந் தோற்ற வென்னின்
முன்னவன் விளையாட் டென்று
மொழிதலு மாமு யிர்க்கு
மன்னிய புத்தி முத்தி
வழங்கவு மருளான் முன்னே
துன்னிய மலங்க ளெல்லாந்
துடைப்பதுஞ் சொல்ல லாமே. 36

அழிப்பிளைப் பாற்ற லாக்கம்
அவ்வவர் கன்ம மெல்லாங்
கழித்திட னுகரச் செய்தல்
காப்பது கன்ம வொப்பில்
தெழித்திடன் மலங்க ளெல்லாம்
மறைப்பருட் செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு
பார்த்திடி னருளே யெல்லாம். 37

### முதல்வனது தடத்த இயல்பு

அருவமோ வுருவா ரூப
மானதோ வன்றி நின்ற
வுருவமோ வுரைக்குங் கர்த்தா
வடிவெனக் குணர்த்திங் கென்னின்
அருவமு முருவா ரூப
மானது மன்றி நின்ற
வுருவமு மூன்றுஞ் சொன்ன
வொருவனுக் குள்ள வாமே. 38

### கடவுள் உருவத்தின் இயல்பு

நண்ணிடு முருவ மென்னில்
நமக்குள வுருவம் போலப்
பண்ணிட வொருவன் வேண்டு
மிச்சையேற் பலரு மிச்சை
கண்ணிய வுருவங் கொள்ளேம்
யாம்பெருங் கடவு டானும்
எண்ணிய யோக சித்தர்
போலுரு விசைப்பன் காணே. 39

வித்தக யோக சித்தர்
வேண்டுருக் கொள்ளு மாபோல்
உத்தமன் கொள்வ னென்னி
னவர்களி லொருவ னுவன்
அத்தகை யவர்க ளெல்லா
மாக்குவ தருளா லாங்கு
வைத்தது மாயை யென்னின்
வடிவெலா மாயை யாமே. 40

### இறைவன் உரு சத்தியுரு

மாயைதான் மலத்தைப் பற்றி
வருவதோர் வடிவ மாகும்
ஆயுவா ணவம கன்ற
வறிவொடு தொழிலை யார்க்கும்
நாயக னெல்லா ஞானத்
தொழின்முத னண்ண லாலே
காயமோ மாயை யன்று
காண்பது சத்தி தன்னல். 41

சத்தியே வடிவென் றூலுந்
தான்பரி ணும மாகும்
நித்தமோ வழியு மத்தா
னின்மல னருவே யென்னில்
அத்துவா மார்க்கத் துள்ளான்
அலனிவ னருமை தன்னைப்
புத்திதா னுடையை போல
விருந்தனை புகலக் கேள்நீ. 42

## இறைவன் இயல்பு வரையறை படாதது

உலகினிற் பதார்த்த மெல்லா
முருவமோ டருவ மாகி
நிலவிடு மொன்றென் றூகா
நின்றவந் நிலையே போல
அலகிலா வறிவன் றூனு
மருவமே யென்னி லாய்ந்து
குலவிய பதார்த்தத் தொன்றாய்க்
கூடுவன் குறித்தி டாயே. 43

பந்தமும் வீடு மாய
பதபதார்த் தங்க ளல்லான்
அந்தமு மாதி யில்லான்
அளப்பில ஞுத லாலே
யெந்தைதா னின்ன னென்று
மின்னதா மின்ன தாகி
வந்திடா னென்றுஞ் சொல்ல
வழக்கொடு மாற்ற மின்றே. 44

குறித்ததொன் றாக மாட்டாக்
குறைவில னாத லானும்
நெறிப்பட நிறைந்த ஞானத்
தொழிலுடை நிலைமை யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பால்
மேவுத லிலாமை யானும்
நிறுத்திடு நினைந்த மேனி
நின்மல னருளி னாலே. 45

## திருவுருவத்தின் இன்றியமையாமை

ஆரண மாக மங்கள்
அருளினா லுருவு கொண்டு
காரண னருளா னாகில்
கதிப்பவ ரில்லை யாகும்
நாரணன் முதலா யுள்ள
சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ்
சீரணி குருசந் தானச்
செய்தியுஞ் சென்றி டாவே. 46

உருவருள் குணங்க ளோடும்
உணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருள ரன்றன்
கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந்
தானருள் தனக்கொன் றின்றி
யருளுரு வுயிருக் கென்றே
யாக்கின னசிந்த னன்றே. 47

**முதல்வன் அசிந்திதன் என்னும் சுருதி, புராணங்கள்**

உலகினை யிறந்து நின்ற
தரனுரு வென்ப தோரார்
உலகவ னுருவிற் றோன்றி
யொடுங்கிடு மென்று மோரார்
உலகினுக் குயிரு மாகி
யுலகுமாய் நின்ற தோரார்
உலகினி லொருவ னென்ப
ருருவினை யுணரா ரெல்லாம். 48

தேவரி னொருவ னென்பர்
திருவுருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்ற தோரார்
முதலுருப் பாதி மாதர்
ஆவது முணரா ராதி
யரியயற் கறிய வொண்ணா
மேவுரு நிலையு மோரார்
அவனுரு விளைவு மோரார். 49

போகியா யிருந் துயிர்க்குப்
போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி
யுதவுத லதுவு மோரார்
வேகியா னூற்போற் செய்த
வினையினை வீட்ட லோரார்
ஊகியா மூட ரெல்லாம்
உம்பரி னொருவ னென்பர். 50

ஒன்றொடொன் ஒவ்வா வேடம்
 ஒருவனே தரித்துக் கொண்டு
நின்றலா லுலக நீங்கி
 நின்றன னென்று மோரார்
அன்றியவ் வேட மெல்லா
 மருள்புரி தொழிலென் ரூரார்
கொன்றது வினையைக் கொன்று
 நின்றவக் குணமென் ரூரார். 51

நாயகன் கண்ண யப்பா
 ஞயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப்
 பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி ஞலே
 சுடரொளி கொடுத்த பண்பின்
தேயமா ரொளிக ளெல்லாஞ்
 சிவனுருத் தேச தென்ஞர். 52

கண்ணுதல் யோகி ருப்பக்
 காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி
 மெலிந்தமை யோரார் மாறு
னெண்ணிவேண் மதனை யேவ
 எரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப்
 பேரின்ப மளித்த தோரார். 53

### ஐந்தொழிற்கும் திருவுரு வேண்டும்

படைப்பாதித் தொழிலும் பத்தர்க்
கருளும்பா வனையு நூலும்
இடப்பாக மாத ராளோ
டியைந்துயிர்க் கின்ப மென்று
மடைப்பானு மதுவு முத்தி
யளித்திடும் யோகும் பாசந்
துடைப்பானுந் தொழிலு மேனி
தொடக்கானேற் சொல்லொ ணாதே. 54

உருமேனி தரித்துக் கொண்ட
தென்றலு முருவி றந்த
அருமேனி யதுவுங் கண்டோம்
அருவுரு வான போது
திருமேனி யுபயம் பெற்றேஞ்
செப்பிய மூன்று நந்தங்
கருமேனி கழிக்க வந்த
கருணையின் வடிவு காணே. 55

### முதல்வனது உபசாரத் திருமேனிகள்

அத்துவா மூர்த்தி யாக
வறைகுவ தென்னை யென்னின்
நித்தனாய் நிறைந்த வற்றி
னீங்கிடா நிலைமை யானுஞ்

சித்துட னசித்திற் கெல்லாஞ்
சேட்டித ஞூத லானும்
வைத்தவா மத்து வாவும்
வடிவென மறைக ளெல்லாம். 56

மந்திர மத்து வாவின்
மிகுத்தொரு வடிவ மாகத்
தந்ததெ னரனுக் கென்னிற்
சகத்தினுக் குபாதா னங்கள்
விந்துமோ கினிமான் மூன்று
மிவற்றின்மே லாகி விந்துச்
சிந்தையா ரதீத மான
சிவசத்தி சேர்ந்து நிற்கும். 57

சுத்தமாம் விந்துத் தன்னில்
தோன்றிய வாத லானுஞ்
சத்திதான் பிரேரித் துப்பின்
தானதிட் டித்துக் கொண்டே
யத்திறூற் புத்தி முத்தி
யளித்தலா லரனுக் கென்றே
வைத்தவா மந்தி ரங்கள்
வடிவென மறைக ளெல்லாம். 58

மந்திர மதனிற் பஞ்ச
மந்திரம் வடிவ மாகத்
தந்திரஞ் சொன்ன வாறிங்
கென்னெனிற் சாற்றக் கேள்நீ

முந்திய தோற்றத் தாலும்
மந்திர மூலத் தாலும்
அந்தமில் சத்தி யாதிக்
கிசைத்தலு மாகு மன்றே. 59

## மூன்றுயதிகரணம்

### ஒருவனதுசத்திபலரிடத்துத்தங்கித் தொழிலியற்றும்

அயன்றனை யாதி யாக
வரனுரு வென்ப தென்னை
பயந்திடுஞ் சத்தி யாதி
பதிதலாற் படைப்பு மூல
முயன்றன ரிவரே யாயின்
முன்னவ னென்னை முற்று
நயந்திடு மவனி வர்க்கு
நண்ணுவ தொரோவொன் றுமே. 60

சத்திதான் பலவோ வென்னில்
தானொன்றே யநேக மாக
வைத்திடுங் காரி யத்தான்
மந்திரி யாதிக் கெல்லா
முய்த்திடு மொருவன் சத்தி
போலர னுடைய தாகிப்
புத்திமுத் திகளை யெல்லாம்
புரிந்தவ னினைந்த வாறும். 61

## சத்தியின் வடிவு ஞானமே

சத்திதன் வடிவே தென்னில்
தடையிலா ஞான மாகும்
உய்த்திடு மிச்சை செய்தி
யிவைஞானத் துளவோ வென்னின்
எத்திற ஞான முள்ள
தத்திற மிச்சை செய்தி
வைத்தலான் மறைப்பின் ஞானுன்
மருவிடுங் கிரியை யெல்லாம். 62

## ஐந்து சத்திகள்

ஒன்றதா யிச்சா ஞானக்
கிரியையென் ருெருமூன் ருகி
நின்றிடுஞ் சத்தி யிச்சை
யுயிர்க்கரு ணேச மாகும்
நன்றெலா ஞான சத்தி
யானயந் தறிவ ஞுத
னன்றருட் கிரியை தன்ஞு
லாக்குவ னகில மெல்லாம். 63

## சீவனும் வேறு சிவனும் வேறு

சீவனு மிச்சா ஞானக்
கிரியையாற் சிவனை யொப்பன்
ஆவனென் றிடின நாதி
மலமிவற் றினை மறைக்கும்

காவல னிவன்செய் கன்மத்
தளவினிற் கொடுப்பக் காண்பன்
பாவியாம் புத்தி முத்திப்
பயன்கொளும் பண்பிற் ருகும். 64

## சுத்த தத்துவங்கள் ஐந்து

ஞானமே யான போது
சிவன்ருெழின் ஞான மொக்கின்
ஈனமில் சதாசி வன்பேர்
ஈசனுந் தொழில தேறின்
ஊனமேற் கிரியை வித்தை
யுருத்திர னிலய போகம்
ஆனபே ரதிகா ரத்தோ
டதிகர ணத்த னுமே. 65

வித்தையோ டீசர் சாதாக்
கியஞ்சத்தி சிவங்க ளைந்தும்
சுத்ததத் துவஞ்சி வன்றன்
சுதந்திர வடிவ மாகும்
நித்தமென் றுரைப்பர் காலம்
நீங்கிய நிலைமை யாலே
வைத்திலர் முற்பிற் பாடு
வருவித்தார் கருமத் தாலே. 66

## தாதான்மிய சத்தியின் இயல்பு

ஒருவனே யிராவ ணாதி
பாவக முற்ருற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாந்
தன்மையுந் திரியா னுகும்

வரும்வடி வெல்லாஞ் சத்தி
சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச்
சிவத்தினோ டியைந்து நிற்கும். 67

பொன்மைநீ லாதி வன்னம்
பொருந்திடப் பளிங்க வற்றின்
தன்மையாய் நிற்கு மாபோல்
சத்திதன் பேத மெல்லாம்
நின்மலன் தானுந் தோன்றி
நிலைமையொன் றுயே நிற்பன்
முன்னருட் சத்தி தன்பால்
முகிழ்க்குந்தான் முளையா னன்றே. 68

சத்தியுஞ் சிவமு மாய
தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும்
உணர்குண குணியு மாகி
வைத்தன னவளால் வந்த
வாக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையு மறியார் பீட
லிங்கத்தி னியல்பு மோரார். 69

## முதல்வனது தன்னியல்பு

சிவனரு வுருவு மல்லன்
சித்தினோ டசித்து மல்லன்
பவமுதல் தொழில்க ளொன்றும்
பண்ணிடு வானு மல்லன்

தவமுத லியோக போகந்
தரிப்பவ னல்லன் தானே
யிவைபெற வியைந்து மொன்று
மியைந்திடா வியல்பி னானே. 70

---

## இரண்டாஞ் சூத்திரம்

**சத்தி பதி சிவன் என முதல்வன் நிற்றல்**

உலகெலா மாகி வேறாய்
உடனுமா யொளியா யோங்கி
யலகிலா வுயிர்கள் கன்மத்
தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் தன்மை
தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீ ரமல னாகி
நின்றன னீங்கா தெங்கும். 1

### முதலதிகரணம்

**வேறாயும் உடனாதல் பொருந்தும் எனல்**

ஒன்றென மறைக ளெல்லாம்
உரைத்திட வுயிர்க ளொன்றி
நின்றன னென்று பன்மை
நிகழ்த்துவ தென்னை யென்னில்
அன்றவை பதிதா னென்றென்
றறையும் அக்கரங்கள் தோறுஞ்
சென்றிடும் அகரம் போல
நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே. 2

### ஒருவன் பலவாதல் பொருந்தும் எனல்

உருவொடு கருவி யெல்லாம்
உயிர்கொடு நின்று வேருய்
வருவது போல வீசன்
உயிர்களின் மருவி வாழ்வன்
தருமுயி ரவனே யாகா
வுயிரவை தானு மாகான்
வருபவ னிவைதா ளுயும்
வேறுமாய் மன்னி நின்றே. 3

## இரண்டாமதிகரணம்

### இருவினையின் இயல்பு தொகுப்பு

இருவினை யின்பத் துன்பத்
திவ்வுயிர் பிறந்தி றந்து
வருவது போவ தாகும்
மன்னிய வினைப்ப யன்கள்
தருமரன் தரணி யோடு
தராபதி போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்ம
பலன்களும் மறுமைக் கண்ணே. 4

### இன்பத்துன்பம் இருவினையால் வரும் செயற்கை

இருவினை யென்னை யின்பத்
துன்பங்க ளியல்ப தென்னின்
ஒருதன்மை யியல்புக் குள்ள
தொருவனுக் கிரண்டு செய்தி

வருவதென் மலருந் தீயு
மருவலின் வாசம் வெம்மை
தருவதெ னீரென் செய்து
தானியல் பாகு மன்றே. 5

தன்னியல் பொழியப் பூவுந்
தழலும்வந் தணைய நீரின்
மன்னிய திரண்டு செய்தி
வருமிரு வினையி னானு
முன்னிய வின்பத் துன்ப
முறுமுயி ருணர்வில் லாத
துன்னிய வசித்தை யின்பத்
துன்பங்கள் சூழ்ந்தி டாவே. 6

## இருவினையும் முயற்சியும்

இம்மையின் முயற்சி யாலே
யிருநிதி யீட்டி யின்பம்
இம்மையே நுகர்வர் செய்தி
இலாதவர் பொருளு மின்றி
யிம்மையே யிடரு ழப்பர்
வேறிரு வினைய துண்டேல்
இம்மையின் முயற்சி யின்றி
யெய்திட வேண்டு மிங்கே. 7

இருவினைச் செயல்கா ணிம்மை
யிரும்பொரு ளின்பம் வேண்டி
வருவினை செய்யுங் காலை
மடிவரு மடியு மின்றித்

தருவினை யதனி லத்தந்
தானறுந் துயருந் தங்கும்
ஒருவினை செய்யா தோரும்
உடையரிவ் வுலகத் துள்ளே. 8

பேறிழ வின்ப மோடு
பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறுமுன் கருவுட் பட்ட
தவ்விதி யனுப வத்தால்
ஏறிடு முன்பு செய்த
கன்மமிங் கிவற்றிற் கேது
தேறுநீ யினிச்செய் கன்மம்
மேலுடற் சேரு மென்றே. 9

### இருவினையின் தொடர்ச்சி

உடற்செயல் கன்ம மிந்த
வுடல்வந்த வாறே தென்னின்
விடப்படு முன்னு டம்பின்
வினையிந்த வுடல்வி ளைக்குந்
தொடர்ச்சியா லொன்றுக் கொன்று
தொன்றுதொட் டநாதி வித்தின்
இடத்தினின் மரம ரத்தின்
வித்தும்வந் தியையு மாபோல். 10

முற்செயல் விதியை யிந்த
முயற்சியோ டனுப வித்தான்
இச்செயல் பலிக்கு மாறென்
இதமகி தங்கண் முன்னர்

அச்செய லானு லிங்கும்
அவைசெயின் மேலைக் காகும்
பிற்செயா தனுப விப்ப
தின்றுபின் தொடருஞ் செய்தி. 11

மேலைக்கு வித்து மாகி
விளைந்தவை யுணவு மாகி
ஞாலத்து வருமா போல
நாஞ்செயும் வினைக ளெல்லாம்
ஏலத்தான் பலமாச் செய்யும்
இதமகி தங்கட் கெல்லாம்
மூலத்த தாகி யென்றும்
வந்திடு முறைமை யோடே. 12

## இருவினைகளை இறைவன் ஏற்றுப் பயன் தரல்

இதமகி தங்க ளென்ப
திகன்மன வாக்குக் காயத்
திதமுயிர்க் குறுதி செய்தல்
அகிதமற் றதுசெய் யாமை
இதமகி தங்க ளெல்லாம்
இறைவனே யேற்றுக் கொண்டிங்
கிதமகி தத்தா லின்பத்
துன்பங்க ளீவ னன்றே. 13

இறைவனிங் கேற்ப தென்னை
இதமகி தங்க ளென்னில்
நிறைபர னுயிர்க்கு வைத்த
நேசத்தி னிலைமை யாகும்

அறமலி யிதஞ்செய் வோருக்
கநுக்கிர கத்தைச் செய்வன்
மறமலி யகிதஞ் செய்யின்
நிக்கிர கத்தை வைப்பன். 14

**துன்பம் நுகர்வித்தலும் கருணையால்தான்**

நிக்கிர கங்கள் தானு
நேசத்தா லீசன் செய்வ
தக்கிர மத்தாற் குற்ற
மடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
யிக்கிர மத்தி ஞலே
யீண்டற மியற்றி டென்பன்
எக்கிர மத்தி ஞலும்
இறைசெய லருளே யென்றும். 15

தந்தைதாய் பெற்ற தத்தம்
புதல்வர்கள் தஞ்சொ லாற்றின்
வந்திடா விடினு றுக்கி
வளாரிஞ லடித்துத் தீய
பந்தமு மிடுவ ரெல்லாம்
பார்த்திடிற் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ
ஈசஞர் முனிவு மென்றும். 16

**செயல்களே பயனைத் தாரா**

செயல்களே பலத்தைச் செய்யும்
தெய்வம் வேண்டாவிங் கென்னின்
முயலுமிச் செயல்க ளிங்கே
முழுவது மழியு மெங்கே

பயனளிப் பனவ ழிந்தே
பலன்களைப் பண்ணுங் கெட்ட
வயலிடுந் தழையுந் தின்னு
மருந்தும்பின் பலிக்கு மாபோல். 17

செய்க்கிடுந் தழையுந் தின்னுந்
திரவிய மதுவும் போல
உய்த்திடுஞ் செய்தி கெட்டே
உறுவிக்கும் பலத்தை யென்னின்
வைத்திடுஞ் சோறும் பாக்கும்
அருந்தினர் வயிற்றின் மாய்ந்தான்
மெய்த்திடும் பலமு னக்கு
மலமலால் வேறு முண்டோ. 18

திரவிய முவமை யன்று
செய்திக்கண் திரவி யங்கள்
விரவிய விடத்தே வீந்து
பலந்தரு மிம்மை யம்மை
பரவிநீ பார்நீ ரங்கி
பாத்திரத் திட்ட வெல்லாங்
கரவிடு மிங்கே† யெங்கே
பலன்கொளக் கருதினுயே. 19

---

† தெய்வத்தைப் பரவி நிலத்தில் இடும் பொரி, பூ, நீரில் தரும்தருப்பணம், நெருப்பில் தரும்அவி, சற்பாத்திரத்தி லிடும் தானம் என்பவை இங்கேயே கெடும்.

செய்தவர் மனத்தே யெல்லாச்
செய்தியுங் கிடந்து பின்னர்
எய்தவே பலன்க ளீனும்
என்றிடி னிருஞ்சு வர்க்கம்
பொய்யர்வாழ் நரகம் பூமி
புந்தியிற் கிடந்து போந்த
தையனே அழகி துன்சொல்
இந்திர சால மாய்த்தே. 20

தானஞ்செய் பொருள் தரித்தோர்
செய்தவர் தக்க செய்தி
ஊனம்பின் னுறவே காண்டும்
பலமுறு விப்பான் வேண்டும்
ஈனமில் செய்தி யீசன்
இடும்பணி யிவைநாஞ் செய்தால்
நூனங்க ளதிக நோக்கி
நுகர்விப்பன் வினைநோய் தீர. 21

**தொழில் முதனிலை எட்டும் பயன்தரா;**
**இறைவனே தருவன்**

உலகுடல் கரணங் காலம்
உறுபல நியதி செய்தி
பலவிவை கொண்டு கன்மம்
பண்ணுவ துண்ப தானுல்
நிலவிடா திவைதாஞ் சென்று
நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா
தலகிலா வறிவ னுணை
அணைத்திடு மருளி னுலே. 22

## பொது அறம்

ஒழுக்கமன் பருளா சாரம்
உபசாரம் உறவு சீலம்
வழுக்கிலாத் தவம்தா னங்கள்
வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவ டக்கம்
அறிவொடர்ச் சித்த லாதி
இழுக்கிலா வறங்க ளானல்
இரங்குவான் பணிய றங்கள். 23

## சிறப்பு அறம்

மனமது நினைய வாக்கு
வழுத்தமந் திரங்கள் சொல்ல
இனமலர் கையிற் கொண்டங்
கிச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழுஞ்
செயலற மானல் யார்க்கும்
முனமொரு தெய்வ மெங்குஞ்
செயற்குமுன் னிலையா மன்றே. 24

## சிவனே வழிபாட்டிற்கு உரியவன்

யாதொரு தெய்வங் கொண்டீர்
அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம்
வருவர்மற் றத்தெய் வங்கள்

வேதனைப் படுமி றக்கும்
　　பிறக்குமேல் வினையுஞ் செய்யும்
ஆதலா னிவையி லாதான்
　　அறிந்தருள் செய்வ னன்றே. 25

இங்குநாஞ் சிலர்க்குப் பூசை
　　இயற்றினு லிவர்க ளோவந்
தங்குவான் தருவா ரன்றேல்
　　அத்தெய்வ மத்த னைக்காண்
எங்கும்வாழ் தெய்வ மெல்லாம்
　　இறைவனு ணையினுல் நிற்ப
தங்குநாஞ் செய்யுஞ் செய்திக்
　　காணைவைப் பால ளிப்பன். 26

### சிவன் அடிமறவாமையே பொருள்

காண்பவன் சிவனே யானுல்
　　அவனடிக் கன்பு செய்கை
மாண்பறம் அரன்தன் பாதம்
　　மறந்துசெய் யறங்க ளெல்லாம்
வீண்செயல் இறைவன் சொன்ன
　　விதியறம் விருப்பொன் றில்லான்
பூண்டனன் வேண்டல் செய்யும்
　　பூசனை புரிந்து கொள்ளே. 27

### சிவனை வழிபடும் இடங்கள்

தாபர சங்க மங்கள்
　　என்றிரண் டுருவி னின்று
மாபரன் பூசை கொண்டு
　　மன்னுயிர்க் கருளை வைப்பன்

நீபரன் றன்னை நெஞ்சில்
நினைவையேல் நிறைந்த பூசை
ஆய்பரம் பொருளை நாளும்
அர்ச்சிநீ யன்பு செய்தே. 28

அரனடிக் கன்பர் செய்யும்
பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார்
புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த
மாவேள்வி தீமை யாகி
நரரினில் பாலன் செய்த
பாதகம் நன்மை யாய்த்தே. 29

## சிவனை அரசனுக்கு உவமித்தல்

மறைகளீ சன்சொ லச்சொல்
வழிவாரா வுயிரை வைக்குஞ்
சிறைகண்மா நிரய மிட்ட
பணிசெய்வோர் செல்வத் தோடும்
உறையுமா பதிக ளும்பர்
உலகங்கள் யோனிக் கெல்லாம்
இறைவனு ணையினு லின்பத்
துன்பங்க ளியைவ தாகும். 30

ஆணையா லவனி மன்னன்
அருமறை முறைசெய் யாரை
ஆணையில் தண்டஞ் செய்தும்
அருஞ்சிறை யிட்டும் வைப்பன்

ஆணையின் வழிசெல் வோருக்
கரும்பதி செல்வ நல்கி
ஆணையும் வைப்ப னெங்கும்
ஆணையே ஆணை யேகாண். 31

அரசனுஞ் செய்வ தீசன்
அருள்வழி யரும்பா வங்கள்
தரையுளோர் செய்யில் தீய
தண்டலின் வைத்துத் தண்டத்
துரைசெய்து தீர்ப்பன் பின்பு
சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரா ரந்த
நிரயமுன் நீர்மை யிதாம். 32

### சிவஞை மருத்துவனேடு உவமித்தல்

அருளினு லுரைத்த நூலின்
வழிவாரா ததன்மஞ் செய்யின்
இருளுலா நிரயத் துன்பத்
திட்டிடும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்க மாதி
போகத்தால் புணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்கள் தீர்க்கு
மருந்திவை வயித்யன் நாதன். 33

மருத்துவ னுரைத்த நூலின்
வழிவரில் பிணிகள் வாரா
வருத்திடும் பிணிகள் தப்பில்
தப்பிய வழியுஞ் செய்யத்

திருத்தினன் மருந்து செய்யா
துறும்பிணி சென்றுந் தீர்ப்பன்
உரைத்தநூற் சிவனு மின்னே
உறுங்கன்ம மூட்டித் தீர்ப்பன். 34

மண்ணுளே சிலவி யாதி
மருத்துவ னருத்தி யோடும்
திண்ணமா யறுத்துக் கீறித்
தீர்த்திடுஞ் சிலநோ யெல்லாம்
கண்ணிய கட்டி பாலும்
கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்
அண்ணலு மின்பத் துன்பம்
அருத்தியே வினைய றுப்பன். 35

## உயிர் இறந்தும் பிறந்தும் வரல்

பூதனு சரீரம் போனல்
புரியட்ட ரூபந் தானே
யாதனு சரீர மாகி
இன்பத்துன் பங்க ளெல்லாம்
நாதனு ராணை யுய்க்க
நரகொடு சுவர்க்கந் துய்த்துத்
தீதிலா வணுவா யோனி
சேர்ந்திடுஞ் சீவ னெல்லாம். 36

உடல்விடா யோனி பற்றி
யுதிப்பினு முதிக்கு மொன்றில்
படர்வுரு துறும்பா வத்தால்
பாடாணம் போற்கி டந்து

கடனதாங் காலஞ் சென்றால்
கடுநர கதனில் வீழ்ந்தங்
கிடருறு முருவங் கன்மத்
தளவினி லெடுக்கு மன்றே. 37

ஓர் உடம்பு விட்டு மற்றோர் உடம்பு எடுக்குமாறு

பன்னக மண்ட சங்கள்
பரகாயந் தன்னில் பாய்வோர்
துன்னுதோல் முட்டை யாக்கை
துறந்துசெல் வதுவே போல
உன்னிய வுயிர்கள் தூல
உடல்விட்டு வானி னூடு
மன்னிடு நனவு மாறிக்
கனவினை மருவு மாபோல். 38

இருவினையின் இலக்கணம்

தன்மமோ டதன்ம மாகித்
தானிரு பயனுந் தந்து
நன்மைதீ மையினு மின்பத்
துன்பினு நாடிக் காண
முன்னமே யான்மா வின்றன்
மும்மலத் தொன்ற தாகிக்
கன் மமு மூலங் காட்டிக்
காமிய மலமாய் நிற்கும். 39

இருவினை யநாதி யாதி
யியற்றலா னுகர்வா லந்தம்
வருமலஞ் சார்ந்து மாயா
வுருவுகண் மருவி யார்த்துத்

தருசெயன் முறைமை யாலே
தான்பல பேதங் காட்டி
அருவதாய் நின்ற ரன்றன்
ஆணையி னமர்ந்து செல்லும். 40

### உயிர்கள் அச்சுமாறிப் பிறக்கும் எனல்

சங்கமந் தாப ரங்கள்
தத்தங்கன் மத்துக் கீடா
அங்குரு யோனி மாறும்
அச்சுமா றுதிங் கென்னின்
இங்குமா னுடரி யற்றும்
புண்ணியத் தின்ப வீட்டம்
அங்குவான் சுரர்க ளாயோ
நரர்களா யருந்து வாரோ. 41

நரர்களாய்த் துய்ப்ப ரென்னின்
நரர்பதி சுரரு லோகஞ்
சுரர்களாய்த் துய்ப்ப ரென்னில்
சொன்னவச் சழிவு மாகுஞ்
சுரர்களாய்ப் பலன்கள் துய்த்துத்
தாமிங்குத் தோன்றும் போது
நரர்களாய்ப் பிறப்பர் ஞாலத்
தமராய் நண்ணி டாரே. 42

வண்டுக ளாகி மாறு
மயிர்க்குட்டி மற்றோர் செந்துப்
பண்டைய வுருவந் தானே
வேட்டுவ னுய்ப்பி றக்குந்

கண்டுகொள் யோனி யெல்லாங்
கன்மத்தான் மாறு மென்றே
கொண்டன சமய மெல்லாம்
இச்சொல்நீ கொண்ட தெங்கே. 43

அகலியை கல்ல தானாள்
அரிபல பிறவி யானான்
பகலவன் குலத்தில் தோன்றிப்
பாரெலா முழுது மாண்டு
நிகரிலா வரச னாகுஞ்
சிலந்திநீ டுலகம் போற்றச்
சகமதி லெலிதா னன்றோ
மாவலி யாய்த்துத் தானே. 44

முதல்வனது சாப அநுக்கிரகமே வினைப் பயன்

செப்பினாய் மாற வேறு
சிலர்விதி யாலே கன்மால்
வைப்புறு மியோனி யெல்லா
மாறிவந் திடாதிங் கென்னில்
எப்படி யானுஞ் செய்திக்
கிறைகரி யாவ னென்றே
முற்பட மொழிந்தே னெல்லாம்
முதல்வன்தன் விதியே யாகும். 45

அவ்வவ யோனி தோறும்
அவ்வவ வுலகந் தோறும்
செவ்விதி னறிந்து கன்மஞ்
சேர்ந்திடா சீவன் சேரா

இவ்வகை தம்மிற் சேர்வும்
இறைசெய லானுற் செய்த
எவ்வுரு வுந்தங் கன்மான்
மாற்றுவ னிறைவன் தானே. 46

**சூக்கும உடம்பினின்றும் பருவுடல் தோன்றும்**

மாறியிவ் வுருவ மெல்லாம்
வருவதெங் கேநின் றென்னில்
கூறிய சூக்கு மத்தாம்
உருவெனிற் குறியொன் றென்னின்
வேறொரு குறியாம் ஆரம்
வீரசங் கிலியு மாகுந்
தேறுநீ யொருவ னூல்இச்
செயலெலாஞ் சிவனு லாகும். 47

**தூலம் சூக்குமத்தினின்றும் வருதற்கு உவமை**

சூக்குமங் கெட்டுத் தூலந்
தோன்றிடா சூக்கு மத்தின்
ஆக்கியோ ருடல்கி டப்ப
தின்றுட லாக்குந் தன்மைக்
கோக்கிய சத்தி யுண்டாய்
உடல்தருங் கால முற்று
நீக்கிட மரம்பின் வேரோர்
நீண்மர நிகழ்த்து மாபோல். 48

விதிப்படி சூக்கு மத்தே
உருவரும் வினையா லிங்கே
உதித்திடா வுருவ மாக
உருவரு மரங்கள் வித்தில்

கதித்தெழு மரமும் வித்துங்
கழியும்பின் னழியுஞ் சூக்கம்
மதிக்கெழு கலைகள் போல
வருவது போவ தாமே. 49

**ஒன்றற்கொன்று சூக்குமமாய் முடியும் காரணமுடிபு**

தூலமா முருவி னுக்குச்
சூக்கும முதல தற்கு
மூலமா னதற்கு மூல
மோகினி யதன்மு தற்றுன்
மேலதாம் விந்து சத்தி
சிவமிவை மிசையா மெல்லாஞ்
சாலவின் றுகு மான்மாச்
சிவத்தினைச் சார்ந்த போது. 50

## மூன்றுமதிகரணம்

### உலகப் படைப்பின் நோக்கம்

அரன்விதி யருள தென்றே
யறைந்தன னதுவு முன்னே
தரைநர கருந்து றக்கந்
தனுகர ணாதி யெல்லாம்
வருவதுஞ் செய்த நாதி
மலங்களிம் மருந்தால் தீர்த்துப்
பரகதி யதுவுந் தந்து
பாதபங் கயமுஞ் சூட்டும். 51

### மலத்தை மலத்தாற் கழுவல்

எழுமுடல் கரண மாதி
 யிவைமல மலம லத்தாற்
கழுவுவ னென்று சொன்ன
 காரண மென்னை யென்னிற்
†செழுநவை யறுவை சாணி
 யுவர்செறி வித்த முக்கை
முழுவதுங் கழிப்பன் மாயை
 கொடுமல மொழிப்பன் முன்னோன். 52

### மாயையின் இலக்கணம்

நித்தமா யருவா யேக
 நிலையதா யுலகத் திற்கோர்
வித்துமா யசித்தா யெங்கும்
 வியாபியாய் விமல னுக்கோர்
சத்தியாய்ப் புவன போகந்
 தனுகர ணமுமு யிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை
 மயக்கமுஞ் செய்யு மன்றே. 53

### மாயையின் காரியமாகிய தத்துவங்கள்

மாயையிற் கால மோடு
 நியதிபின் கலாதி தோன்றும்
ஆயவக் கால மூன்றாய்
 ஆக்கியு மளித்தும் போக்கிக்

† 'செழுநவ வறுவை' என்பது பாடபேதம்.

காயமோ டுலகுக் கெல்லாங்
காலசங் கையினைப் பண்ணி
நாயக ஞணை யாலே
நடத்திடுஞ் சகத்தை யெல்லாம். 54

நியதிபின் தோன்றிக் கன்ம
நிச்சயம் பண்ணி நிற்கும்
அயர்விலாக் கலைபின் ருேன்றி
யாணவ மொதுக்கிச் சித்தின்
செயல்புரி கிரியா சத்தி
தெரிவிக்குஞ் சிறிதே வித்தை
யுயர்கலை யதனில் தோன்றி
யறிவினை யுதிக்கப் பண்ணும். 55

விச்சையி னராகந் தோன்றி
வினைவழி போகத் தின்கண்
இச்சையைப் பண்ணி நிற்குந்
தொழிலறி விச்சை மூன்றும்
வைச்சபோ திச்சா ஞானக்
கிரியைமுன் மருவி யான்மா
நிச்சயம் புருட ஞகிப்
பொதுமையி னிற்ப னன்றே. 56

வருங்குண வடிவாய் மூலப்
பிரகிருதி கலையில் தோன்றித்
தருங்குண மூன்ரு யொன்றில்
தான்மூன்ருய் மும்மூன் ருகும்

இருங்குண ரூப மாகி
யியைந்திடு மெங்கு மான்மாப்
பெருங்குண வடிவாய்ப் போக
சாதனம் பெந்த மாமே. 57

சித்தமா மவ்வி யத்தஞ்
சிந்தனை யதுவுஞ் செய்யும்
புத்தியவ் வியத்தில் தோன்றிப்
புண்ணிய பாவஞ் சார்ந்து
வத்துநிச் சயமும் பண்ணி
வருஞ்சுக துக்க மோகப்
பித்தினின் மயங்கி ஞானக்
கிரியையும் பேணி நிற்கும். 58

ஆங்காரம் புத்தி யின்கண்
உதித்தகந் தைக்கு வித்தாய்
ஈங்கார்தா னென்னோ டொப்பா
ரென்றியா னென்ன தென்றே
நீங்காதே நிற்குந் தானு
மூன்றதாய் நிகழு மென்பர்
பாங்கார்பூ தாதி வைகா
ரிகந்தைச தந்தா னென்றே. 59

மனமது தைச தத்தின்
வந்தொரு பொருளை முந்தி
நினைவதுஞ் செய்தங் கைய
நிலைமையி னிற்கு மாங்கே

இனமலி சோத்தி ராதி
　　கன்மவிந் திரிய மெல்லாம்
முனமுறை செய்த வைகா
　　ரிகந்தரு மென்பர் முன்னோர். 60

நற்செவி துவக்குக் கண்ணு
　　நாசியைந் திவையு நல்லோர்
புத்தியிந் திரிய மென்று
　　புகன்றன ரிவைத மக்குச்
சத்தநற் பரிச ரூப
　　இரதகந் தங்க ளைந்தும்
வைத்தனர் விடய மாக
　　அடைவினின் மருவு மென்றே. 61

வாக்கொடு பாதம் பாணி
　　பாயுவோ டுபத்த மைந்து
நீக்கினர் முன்னே கன்மேந்
　　திரியங்க ளெனநி னைந்தே
யாக்கிய வசன கமன
　　தானமும் விசர்க்கா னந்த
மூர்க்கமா ரைந்து மைந்தின்
　　தொழிலென வோதி னரே. 62

**கருவிகள் புறம், அகம், உள் அகம் எனப்படல்**

வாயாதி சோத்தி ராதி
　　புறத்துவாழ் கருவி யாகும்
ஓயாத மனாதி காயத்
　　துணருமுட் கருவி யாகும்

ஆய்வார்கட் கராக மாதி
யவற்றினுட் கருவி யென்பர்
மாயாள்தன் வயிற்றி வற்ருல்
துடக்குண்டு வாழு மான்மா. 63

## அகப்பூதம், புரியட்டகம்

ஓசைநற் பரிச ரூப
விரதகந் தங்க ளென்று
பேசுமாத் திரைக ளைந்தும்
பிறக்கும்பூ தாதி கத்தின்
நேசவிந் திரியங் கட்கு
நிகழறி விதனுற் காண்டும்
ஆசைசேர் மனுதி தன்மாத்
திரைபுரி யட்ட கந்தான். 64

## பூதமும் பூத குணங்களும்

சாற்றிய பஞ்ச தன்மாத்
திரைகளிற் சத்த முன்னுத்
தோற்றும்வான் வளிதீ நீர்மண்
தொடக்கியே யொன்றுக் கொன்றங்
கேற்றமா மோசை யாதி
யிருங்குண மியைந்து நிற்கும்
ஆற்றவே விடயபூதம்
அங்காங்கி பாவத் தாமே. 65

இரந்தர மாகி வான்ருன்
இடங்கொடுத் திடுஞ்ச லித்துப்
பரந்தவை திரட்டுங் கால்தீச்
சுட்டொன்று வித்தல் பண்ணும்
நிரந்தரங் குளிர்ந்து நின்று
பதஞ்செயு நீர்மண் தானு
முரந்தரு கடின மாகித்
தரித்திடு முணர்ந்து கொள்ளே. 66

மண்புன லனல்கால் வான்பால்
வடிவுநாற் கோண மாகும்
தண்பிறை மூன்று கோணந்
தகுமறு கோணம் வட்டம்
வண்பொன்மை வெண்மை செம்மை
கறுப்பொடு தூமவன்னம்
எண்டரு மெழுத்துத் தானும்
லவரய வவ்வு மாமே. 67

குறிகள்வச் சிரத்தி னேடு
கோகந தஞ்சு வத்தி
அறுபுள்ளி யமுத விந்து
வதிதெய்வ மயன்மா லாதி
செறிபுக ழீச னேடு
சதாசிவம் பூத தெய்வ
நெறிதரு கலையைந் திற்கு
நிகழ்த்துவ ரீந்த நீர்மை. 68

## தத்துவம் முப்பத்தாறு எனல்

சுத்ததத் துவங்க ளென்று
முன்னமே சொன்ன வைந்தும்
இத்தகை மையினி யம்பும்
இவைமுப்பத் தொன்று மாகத்
தத்துவ முப்பத் தாருஞ்
சைதன்னி யங்க ளோந்து
சித்தசித் தான்மா வொன்று
முப்பது மசித்தே செப்பில். 69

ஐந்துசுத் தத்தின் கீழேழ்
சுத்தாசுத் தம்ம சுத்தந்
தந்திடும் புமான்கீ ழெண்மூன்
றுயதத் துவஞ்சீ வர்க்கு
வந்திடும் பிரேர காண்ட
மருவுபோ கசயித் திரத்தோ
டந்தமி லணுக்க ளுக்குப்
போக்கிய காண்ட மாமே. 70

தத்துவ ரூப மாகுந்
தருமரு வுருவ மெல்லாந்
தத்துவந் தூல சூக்க
பரங்களு மாகி நிற்குந்
தத்துவந் தன்னிற் சாரும்
அணுக்கள்சா தாக்கி யத்தில்
தத்துவ சத்தஞ் சாருஞ்
சகலமுந் தத்து வங்காண். 71

### தத்துவங்களின் ஒடுக்கமும் தோற்றமும்

தத்துவ மெண்மூன் றுஞ்சென்
    ருன்மதத் துவத்தொ டுங்கும்
வித்தையி ஞெடுங்கு மாறுஞ்
    சிவத்தினி ஞெடுங்கு மூன்றும்
நித்ததத் துவமிம் மூன்றும்
    என்பர்க ளிரண்டு நின்ற
சுத்தமாஞ் சிவத்தொ டுங்குந்
    தோற்றமு மிதுபோ லாகும். 72

## நான்காமதிகரணம்

### சமயத்தெய்வங்களின் இடங்கள்

மொய்தரு பூத மாதி
    மோகினி யந்த மாகப்
பொய்தரு சமய மெல்லாம்
    புக்குநின் றிடும்பு கன்று
மெய்தரு சைவமாதி
    யிருமூன்றும் வித்தையாதி
எய்துதத் துவங்க ளேயு
    மொன்றுமின் றெம்மி றைக்கே. 73

### நவந்தரு பேதம்

சிவஞ்சத்தி நாதம் விந்து
    சதாசிவன் திகழு மீசன்
உவந்தரு ளுருத்தி ரன்றான்
    மாலய ஞென்றி ஞென்றுப்

பவந்தரு மருவ நாலிங்
குருவநா லுபய மொன்றும்
நவந்தரு பேத மேக
நாதனே நடிப்ப னென்பர். 74

## சத்திபேதம் ஏழு

சத்தியாய் விந்து சத்தி
யாய்மனோன் மனிதா னுகி
யொத்துறு மகேசை யாகி
யுமைதிரு வாணி யாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்கன்
வருஞ்சத்தி யொருத்தி யாகு
மெத்திற நின்று னீசன்
அத்திற மவனு நிற்பள். 75

## சிவம் சக்திகளுக்கு உள்ள சம்பந்தம்

சத்திதா னுத மாதி
தானுகுஞ் சிவமு மந்தச்
சத்திதா னுதி யாகும்
தரும்வடி வான வெல்லாம்
சத்தியும் சிவமு மாகும்
சத்திதான் சத்த னுக்கோர்
சத்தியாம் சத்தன் வேண்டிற்
றெல்லாமாஞ் சத்தி தானே. 76

சிவஞ்சத்தி தன்னை யீன்றும்
 சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங்
 குலகுயி ரெல்லா மீன்றும்
பவன்பிர மசாரி யாகும்
 பான்மொழி கன்னி யாகும்
தவந்தரு ஞானத் தோர்க்கித்
 தன்மைதான் தெரியு மன்றே. 77

### தத்துவ ஞானியின் இயல்பு

தனுகரண புவன போகந்
 தற்பரம் பந்தம் வீடென்
றணுவினோ டெல்லா மாகி
 யடைந்திடுந் தத்து வங்கள்
இனிதறிந் திவைநி விர்த்தி
 முதற்கலை யிடத்தே நீக்கி
நனிபர முணர்ந்தோ னந்தத்
 தத்துவ ஞானி யாவன். 78

### தத்துவங்களால் உயிர் பெறும் பயன்

எல்லாமாய்த் தத்து வங்க
 ளியைந்ததென் னணுவுக் கென்னில்
தொல்லாய கன்ம மெல்லாந்
 துய்ப்பித்துத் துடைத்தற் கும்பின்
நில்லாமை முற்று வித்து
 நீக்கவுங் கூடி நின்ற
பொல்லாத வாண வத்தைப்
 போக்கவும் புகுந்த தன்றே. 79

### மூலமலத்தின் இயல்பு

ஒன்றதா யநேக சத்தி
யுடையதா யுடனு யாதி
யன்றதா யான்மா வின்றன்
அறிவொடு தொழிலை யார்த்து
நின்றுபோத் திருத்து வத்தை
நிகழ்த்தீச்செம் பினிற்க ளிம்பேய்ந்
தென்றுமஞ் ஞானங் காட்டும்
ஆணவ மியைந்து நின்றே. 80

### மலம் மாயையின் வேறு

மலமென வேறென் றில்லை
மாயாகா ரியம தென்னில்
இலகுயிர்க் கிச்சா ஞானக்
கிரியைக ளெழுப்பு மாயை
யிலகிடு மலமி வற்றை
வேறுமன் றதுவே ருகி
யுலகுடல் கரண மாகி
யுதித்திடு முணர்ந்து கொள்ளே. 81

### அறிவை மறைப்பது மலமே மாயை அன்று

மாயையே யான்ம ஞானக்
கிரியையை மறைத்து நிற்கும்
தூயவப் பரிதி தன்னைச்
சுடர்முகில் மறைத்தாற் போலப்

போய்முகி லகலச் சோதி
புரிந்திடு மதுவே போலக்
காயமு மகல ஞானத்
தொழில்பிர காச மாமே. 82.

பரிதியை முகில்ம றைப்பப்
பாயொளி பதுங்கி னுற்போல்
உருவுயிர் மறைக்கின் ஞானக்
கிரியைக ளொழிக்கு மாகும்
கருதிடு மிச்சா ஞான்
காரியங் காயம் பெற்ருன்
மருவிடு முயிர்க்குக் காயம்
வந்திடா விடின்ம றைப்பே. 83.

போதகா ரியம றைத்து
நின்றது புகன்ம லங்காண்
ஓதலாங் குணமு மாக
வுயிரினுள் விரவ லாலே
காதலா லவித்தை சிந்தத்
தருங்கலை யாதி மாயை
யாதலா லிரண்டுஞ் சோதி
யிருளென வேரு மன்றே. 84.

**மலம் உயிரின் குற்றம், குணம் அன்று**

புருடன்றன் குணம வித்தை
யெனிற்சடம் புருட னுகுங்
குருடன்றன் கண்ணின் குற்றம்
கண்ணின்றன் குணமோ கூருய்

மருள்தன்றன் குணம தாகி
மலமசித் தாகி நிற்குந்
தெருள்தன்றன் குணம தாகிச்
சித்தென நிற்கும் சீவன். 85

## மும்மலங்களின் வேறுபாடு

மும்மல நெல்லி னுக்கு
முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய் தணுவி னுண்மை
வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த
போத்திருத் துவங்கள் பண்ணும்
இம்மல மூன்றி னோடும்
இருமல மிசைப்ப னின்னும். 86

## ஐம்மலம் எனும் வழக்கு

மாயையின் காரி யத்தை
மாயேய மலம தென்றும்
ஏயுமும் மலங்கள் தத்தந்
தொழிலினை யியற்ற ஏவுந்
தூயவன் தனதோர் சத்தி
திரோதான கரிய தென்றும்
ஆய்வரிம் மலங்க ளைந்தும்
அணுக்களை யணைந்து நிற்கும். 87

மலமாயை கன்ம மாயே
யந்திரோ தாயி மன்னிச்
சலமாரும் பிறப்பி றப்பில்
தங்கியித் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டங்
கறங்கென நிமிடத் தின்கண்
நலமாரு மிறைவ னாணை
யாலுயிர் நடக்கு மன்றே. 88

**பிறவி வேறுபாடும் அவற்றின் நீங்குமாறும்**

அண்டஞ் சுவேத சங்கள்
உற்பிச்சஞ் சராயு சத்தோ
டெண்டரு நாலெண் பத்து
நான்குநூ றாயி ரத்தால்
உண்டுபல் யோனி யெல்லாம்
ஒழித்துமா னுடத்து தித்தல்
கண்டிடிற் கடலைக் கையால்
நீந்தினன் காரி யங்காண். 89

நரர்பயில் தேயந் தன்னில்
நான்மறை பயிலா நாட்டில்
விரவுத லொழிந்து தோன்றன்
மிக்கபுண் ணியத்தா னாகும்
தரையினிற் கீழை விட்டுத்
தவஞ்செய்சா தியினில் வந்து
பரசம யங்கள் செல்லாப்
பாக்கியம் பண்ணொ ணாதே. 90

## சைவத்தின் வரும் அருமை

வாழ்வெனு மையல் விட்டு
வறுமையாஞ் சிறுமை தப்பித்
தாழ்வெனுந் தன்மை யோடும்
சைவமாஞ் சமயஞ் சாரும்
ஊழ்பெற லரிது சால
உயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப்
போற்றுவா ரருள்பெற் றாரே. 91

## சிவ வழிபாடே மக்கள் பிறவியின் பயன்

மானுடப் பிறவி தானும்
வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்து மாடும்
அரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரு மண்மேல்
வந்தரன் றனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலு மூமர்
ஒன்றையு முணரா ரந்தோ. 92

## யாக்கை நிலையாமை

கருவினு ளழிவ தாயும்
கழிந்திடா தழிவ தாயும்
பரிணமித் தழிவ தாயும்
பாலனா யழிவ தாயும்

தருணஞ் யழிவ தாயும்
தானரைத் தழிவ தாயும்
உருவமே யழிவே யானல்
உள்ளபோ தேபா ருய்ய. 93

## நுகர்ச்சியின் நிலையாமை

ஒருபுல னுகரும் போதங்
கொன்றிலே யொன்றின் பாலும்
வருபயன் மாறி மாறி
வந்திடு மெல்லா மாறும்
ஒருபொழுது துணரி னுண்டாம்
அல்லதிவ் வல்லல் வாழ்க்கை
மருள்கன வதுவும் போல
மாயும்பின் மாயு மன்றே. 94

அரிசனம் பூசி மாலே
யணிந்துபொன் னுடை சாத்திப்
பரிசனம் பின்பு செல்லப்
பாரகர் பரிக்கக் கொட்ட
வரிசின்ன மூதத் தொங்கல்
வந்திட வுணர்வு மாண்டு
பெரியவர் பேச்சு மின்றிக்
கிடத்தலாற் பிணத்தோ டொப்பர். 95

பிணத்தினே யொத்து வாழ்வோர்
பின்நடைப் பிணங்கள் போல
உணக்கியே யுழல்வீ ருங்க
ளுடலுயி ருணர்வு மெல்லாம்

கணத்திடைத் தோன்றி மாயுங்
　　காயமென் றறிந்தொ ருக்கால்
வணக்குறீ ரரனே யென்றும்
　　வானவர் வணங்க வைப்பன். 96

---

## மூன்ருஞ் சூத்திரம்

### உயிரின் உண்மை

உயிரெனப் படுவ திந்த
　　வுடலின்வே றுளதா யுற்றுச்
செயிருறு மிச்சா ஞானச்
　　செய்திக ளுடைய தாகிப்
பயில்வுறு மின்பத் துன்பப்
　　பலங்களும் நுகரும் பார்க்கில்
துயிலொடு மஞ்ச வத்தைப்
　　படுமுண்மை துரியா தீதம். 1

### உயிர் பருவுடம்பின் வேறு

உடலின்வே றுயிரே னிந்த
　　வுடலன்ருே வுணர்வ தென்னின்
உடல்சவ மான போதும்
　　உடலினுக் குணர்வுண் டோதான்
உடலினின் வாயுப் போனல்
　　உணர்ச்சியின் றுடலுக் கென்னின்
உடலினின் வாயுப் போகா
　　துறக்கத்து முணர்வ தின்றே. 2

### உயிர் ஐம்பொறியின் வேறு

அறிவதைம் பொறியே யென்னின்
உறக்கத்தி னறியா வாகும்
அறிவது மொன்ழுென் ருக
ஒன்ழென்ரு யறியு மென்னின்
அறிவுக ளொன்றை யொன்றங்
கறிந்திடா வைந்தை யுங்கொண்
டறிவதொன் றுண்ட தான்மா
வைம்பொறி யறிந்தி டாவே. 3

### உயிர் உயிர்ப்பின் வேறு

அறிந்திடும் பிராண வாயு
அடங்குதல் விடுதல் செய்தால்
அறிந்திடா துடலு றக்கத்
தறிவின்மை கரண மின்மை
அறிந்திடு முதலி யாகின்
அதுநிற்கக் கரணம் போகா
அறிந்திடும் பிராணன் தன்னை
அடக்கியும் விட்டு மான்மா. 4

# இலக்கணவியல்

---

## நான்காஞ் சூத்திரம்

### உயிரின் பொதுவியல்பு

உணர்வன கரண மென்னில்
ஒன்றையொன் றுணரா வெவ்வே
றணைதருஞ் செயல்கள் நான்கும்
அறிந்தவை யடக்கி யாக்கிப்
புணருமுட் கருவி யாக்கிப்
புறக்கரு வியினும் போக்கி
இணைதரு மிவற்றின் வேரு
யானென தென்ப தான்மா. 1

### முதலதிகரணம்

### உயிர் அகக்கரணங்களின் வேறு; பசு, சிவஞானங்கள்

கருவியா மனமும் புத்தி
அகங்காரஞ் சித்த நான்கும்
மருவியான் மாவே யென்ன
வருந்தீப மெனத்தெ ரிந்தங்
கொருவியான் மாவி னுண்மை
யுணர்ந்தவர் தமையு ணர்ந்தோர்
தருமிது பசுஞா னம்பின்
சிவஞானந் தனக்கு மேலாம். 2

## பிரணவ கலைகள்

அவ்வுட னுவ்வு மவ்வும்
மனம்புத்தி அகங்கா ரங்கள்
செவ்விய விந்து நாதஞ்
சித்தமோ டுள்ள மாகும்
ஒவ்வெனு மெழுத்தா மைந்தும்
உணர்வுதித் தொடுங்கு மாறும்
பவ்வமும் திரையும் போலும்
பார்க்கிலிப் பண்புந் தோன்றும். 3

அயனரி யரனு மீசர்
சதாசிவ மதிதெய் வங்கள்
உயவரு மவ்வோ டுவ்வும்
அவ்விந்து நாதங் கட்குப்
பயனுறு மஞ்சி லான்மாப்
பரவிடி லசித்தாம் பார்க்கில்
சயமுறு வளியி ரண்டுந்
தவிர்த்துறில் தானுந் தோன்றும். 4

## உயிர் பல்பொருட் கூட்டம்அன்று

ஆன்மாவின் வடிவு தானே
அநேகார்த்தக் கூட்ட மென்னில்
பார்ப்பார்கட் கான்மா வின்றுய்ப்
பலபொரு ளுண்மை யாகும்
சேர்ப்பாய பலவே யுண்மை
யென்றிடிற் சென்றி வற்றை
ஓர்ப்பான் வேறுணர் வோர்க்கெல்லாம்
உணர்பொருள் வேற தாமே. 5

## இரண்டாமதிகரணம்

### உயிர் பிரம்மத்தின் பரிணாமம் அன்று

அறிவிச்சை செயல்க ளெல்லாம்
அடைந்தனல் வெம்மை யும்போல்
குறியுற்றங் கேகா நேக
குணகுணி பாவ மாகி
நெறியுற்று நிற்கு மென்னில்
நிகழ்புலன் கரண மெல்லாஞ்
செறிவுற்றங் கறிவு கொள்ள
வேண்டுமோ சீவ னார்க்கே. 6

### உயிர் சாங்கியர் கூறும் அறிவு மாத்திரமும் அன்று

குணங்களை யின்றி யொன்றும்
குறியுடைத் தான்மா வென்னின்
இணங்கிடா விச்சா ஞானக்
கிரியைக ளிவையு டற்கண்
பிணங்கிடுஞ் சந்நி திக்கண்
எனிற்பிணத் துறக்கத் தின்றும்
உணங்கிடுங் கரண மென்னிற்
சந்நிதி யொழிந்த தன்றே. 7

சந்நிதி குணம தாகுந்
தானென்போ லென்னிற் காந்தம்
முன்னிரும் பென்று யீர்க்கும்
முறைமையுண் டகற்ற லின்றும்

உன்னுத லொடுங்க லோடல்
இருத்தலே கிடத்த னிற்றல்
என்னுமித் தொழில்கண் மற்றும்
இயற்றுவ தான்மா வென்னே. 8

**உயிர் உருவன்று**

உருவுயி ரென்னி னிந்த
உடலினுட் காண வேண்டும்
வருவது பரிணா மத்தாய்
அநித்தமாம் பூத மாகும்
கருவினி னுழையு மாறுங்
காட்டிட வேண்டுங் கண்ணின்
மருவிடா தென்னி னுன்றன்
வாயினா லுருவன் றென்னே. 9

சூக்கும வுருவ தென்னில்
தூலகா ரணம தாகும்
ஆக்கிய மனுதி தன்மாத்
திரைவடி வசேத னம்பின்
நீக்கிய சூக்கு மத்தே
நிற்பதோ ருருவுண் டென்னின்
ஆக்கிடு முருவ மெல்லாம்
அசித்துமா யநித்த மாமே. 10

**உயிர், கௌளர் கூறும் அருவுருவும் அன்று**

அருவுரு வென்னி லான்மா
அருவுரு வாவ தின்றும்
உருவரு வாகா தாகும்
ஒருபொருட் கிரண்டு தன்மை

வருவது மில்லை காட்ட
வன்னிபோன் மருவு மென்னின்
உருவமுங் காண வேண்டும்
உண்மையு மொழிந்து போமே. 11

சந்திரன் வடிவு போலத்
தானரு வுருவ மென்னின்
வந்துநங் கண்ணில் தோன்றும்
வடிவுள தாமு யிர்க்கும்
இந்தவூ னுருவந் தானாய்
எழுவது முயிரே யென்னில்
பந்தமா யசித்தா யான்மாப்
பவுதிக மாகு மன்றே. 12

**உயிர் பாதஞ்சலர் கூறும் அருவும் அன்று**

அருவவி காரி யான்மா
ஆகாயம் போல வென்னின்
உருவினைக் கட்டி யாட்டி
யோட்டிமீட் டுலாவப் பண்ணி
மருவிநிற் பித்தி ருத்திக்
கிடத்திமண் புரட்டி மற்றும்
பெருவிகா ரங்க ளெல்லாம்
தருவதென் பேசி டாயே. 13

### உயிர் வைசேடிகர் முதலியோர் கூறும் அசித்தும் அன்று

அசித்தெனி னுணரா தான்மா
அசித்துச்சித் தாகு மென்னின்
அசித்துச்சித் தாகா தாகும்
சித்தசித் தாவ தில்லை
அசித்தொரு புறமா யொன்றில்
சித்தொரு புறமாய் நில்லா
அசித்துருச் சித்தே யென்னி
னசித்தடைந் தறிவ தின்றாம். 14

### உயிர் பாஞ்சராத்திரிகள் கூறும் அனுபரிமாணமும் அன்று

உயிரினை யணுவ தென்னில்
உடல்பல துவார மோடும்
பயில்வுறக் கட்டு ணுது
பாரமுந் தரித்துச் செல்லா
தயர்வுறு மசித்தாய்ப் பூத
வணுக்களி னென்ற தாகும்
இயல்புறு மவய வத்தால்
அணுவுரு விறக்கு மன்றே. 15

உடலினி னேக தேசி
உயிரெனி னுருவாய் மாயும்
படர்வுறு மறிவின் றெங்குஞ்
சுடரொளிப் பண்ப தென்னில்

சுடர்தொடில் சுடுவ தெங்குந்
தொட்டிட மறிவுண்டாகும்
அடர்புல னிடத்து மொக்க
வறிவெழ வேண்டு மன்றே. 16

அது சமணர் கூறும் உடம்பளவினதும் அன்று

உருவினி னிறைந்து நின்றங்
குணர்ந்திடு முயிர தென்னின்
மருவிடா துறக்கம் வாயில்
அறிவொக்க வழங்க வேண்டும்
பெருகிடுஞ் சுருங்கும் போதம்
பேருடற் சிற்று டற்கண்
வருமுடல் குறைக்க வொக்கக்
குறைந்துபின் மாயு மன்றே. 17

அது பட்டாசாரியன் கூறும் வியாபகமும் அன்று

எங்குந்தான் வியாபி யாய்நின்
றுணருமிவ் வான்மா வென்னில்
தங்கிடு மவத்தை போக்கு
வரவுகள் சாற்றல் வேண்டும்
பங்கமார் புலனென் றொன்றுப்
பார்த்திடல் பகரல் வேண்டும்
இங்கெலா மொழிந்தா னிற்ப
தெங்ஙன மியம்பல் வேண்டும். 18

**அஃது ஐக்கவாதி கூறுமாறு சுத்தசித்தும் அன்று**

சுத்தமா மான்ம சித்தைத்
துகளுடன் மறைத்த தென்னின்
வைத்துரு துடற்கண் வாயில்
கரணங்கள் வழியான் ஞானம்
ஒத்துறு மலமற் ருலும்
உறுமலம் வீடு மின்ரும்
பெத்தமு மடையான் முத்த
ஞய்ப்பிர காச ஞமே. 19

**சித்தாந்திகள் கூறும் ஆன்மலக்கணம்**
**கேவல அவத்தை**

அசித்தரு வியாப கம்போல்
வியாபக மருவ மின்ருய்
வசித்திட வரும்வி யாபி
யெனும்வழக் குடைய ஞகி
நசித்திடா ஞானச் செய்தி
யநாதியே மறைத்து நிற்கும்
பசுத்துவ முடைய ஞகிப்
பசுவென நிற்கு மான்மா. 20

**சகலாவத்தை**

மாயையின் வயிற்றுள் மன்னி
வருஞ்செயல் ஞான மிச்சை
யேயுமக் கலாதி மூன்ருல்
ஏகதேச சத்தி னேய்ந்திங்

காயுமுக் குணங்க ளந்தக்
கரணங்க ளாதி யெல்லாம்
காயபெத் தங்க ளாகிக்
கலந்துட னிற்கு மான்மா. 21

சூக்கும தேகி யாகித்
தூலரூ பத்தின் மன்னிச்
சாக்கிர முதலா யுள்ள
அவத்தையுள் தங்கி யெங்கும்
போக்கொடு வரவு மெல்லாம்
புரிந்துபுண் ணியங்கள் பாவம்
ஆக்கியும் பலன்க ளெல்லாம்
அருந்தியு நிற்கு மான்மா. 22

**ஆன்மா ஐங்கோசத்தில் ஆர்ப்புண்ணல்**

மருவானந் தம்விஞ் ஞான
மனோபி ராண மன்னமயம்
உருவாந்தன் மையுண் டாய்முன்
ஒன்றுக் கொன்று சூக்குமமாய்
வருமா மன்ன மயம்பற்றி
மாயை முதற்கா ரணமாகும்
அருவா யான்மா வைங்கோசத்
தார்ப்புண் டவற்றி னகம்புறமாம். 23

**அதனை உவமையின் உணர்த்தல்**

தோற்பாவைக் கூத்துந் தொல்லை
மரப்பாவை யியக்க முஞ்சீர்த்
தேர்ப்பாரிற் செலவும் வேறாய்ச்
செலுத்துவோர் செய்தி தானும்

பார்ப்பாய வேடங் கட்டி
யாடுவோர் பரிசு போலும்
ஆர்ப்பாய காயந் தன்னை
ஆன்மாநின் ருட்டு மாறே. 24

**உயிர் ஐங்கோசத்தின் வேறு என்றற்த அனுபவம்**

என்னுடல் பொறிபி ராணன்
கரணமென் னுணர்வென் றக்கால்
தன்னின்வே ருகு நீயென்
றன்மனே யென்ற வெல்லாம்
நின்னின்வே ருகு மென்னின்
நீங்கிடா விவையிங் கென்னின்
உன்னின வாகு நீயாம்
உகிர்மயி ருகவுங் காண்டி. 25

பொன்னணி யாடை மாலே
போதுமே லான போதிங்
கென்னணி யானென் றுன்னி
யிருந்தனே பிரிந்த போது
நின்னணி நீயு மல்ல
வாயினே காய நின்னின்
அன்னிய மாகு முன்னே
யறிந்துநீ பிரிந்து பாரே. 26

**எனது ஆன்மா என்னும் வழக்குப் பற்றிய ஆய்வு**

உடலியா னல்லே னிந்த
வுணர்வுயா னல்ல வான
கடனியா தென்னின் வேறு
கண்டுணர் வென்ன தென்கை

இடரில்லா என்ற ஞன்மா
என்றபோ தான்மா வேருே
திடனதா வுயிரை வேறு
கண்டிடார் செப்ப லேகாண். 27

புந்தியை மனம தென்று
மனமது புந்தி யென்றும்
சிந்தையைச் சீவ னென்றும்
சீவனைச் சிந்தை யென்றும்
முந்தனை யான்மா வென்றும்
ஆன்மாவை முந்த னென்றும்
வந்திடு மென்ற ஞன்மா
வென்றது மற்ருென் றைக்காண். 28

## கோசங்களை உபநிடதம் ஆன்மா எனல் இலக்கணை வழக்கு

அறிவுடல் சிந்தை யான்மா
அனைதலா லான்மா வென்பர்
எறிசுடர் விளக்கி ருக்கும்
இடத்தையும் விளக்கென் ருற்போல்
பொறிபுலன் கரண மெல்லாம்
புலப்படு மபேத மாகிப்
பிறிதரா தறிவ் தான்மா
அறிபொருள் பின்ன மாமே. 29

### உணர்த்த உணர்வது ஆன்மா

கண்டுணர் புருடன் வேறு
 கனவுகண் டொடுங்கிக் காயம்
உண்டியும் வினையு மின்றிக்
 கிடந்துயிர்த் திடவு ணர்ந்து
கண்டிடுங் கனவுஞ் சொல்லி
 யொடுக்கமுங் கருதி வேறாய்
உண்டியும் வினையு முற்றிங்
 குணர்த்திட வுணரா நிற்கும். 30

புருடனே யறிவ னாகில்
 பொறிபுல னாதி போதம்
தருவதெ னறிவு மாயா
 தனுகர ணாதி பற்றி
வருவதிங் கநாதி யாக
 மலத்தினின் மறைந்து நிற்பன்
அருவனா யிவற்றோ டாளும்
 அமைச்சரு மரசும் போல்வன். 31

## மூன்றுமதிகரணம்

### ஆன்மா ஐந்தவத்தை உறுதல்

படைகொடு பவனி போதும்
 பார்மன்னன் புகும்போ தில்லில்
கடைதொறும் விட்டு விட்டுக்
 காவலு மிட்டுப் பின்னர்

அடைதரும் தனியே யந்தப்
புரத்தினி லதுபோ லான்மா
உடலினி லஞ்ச வத்தை
யுறுமுயிர் காவ லாக. 32

## அவத்தைகளில் தொழிற்படும் கருவிகள்

சாக்கிர முப்பத் தைந்து
நுதலினில் கனவு தன்னில்
ஆக்கிய விருபத் தைந்து
களத்தினில் சுழுனை மூன்று
நீக்கிய விதயந் தன்னிற்
துரியத்தி லிரண்டு நாபி
நோக்கிய துரியா தீதம்
நுவலின்மூ லத்தி னென்றே. 33

## கீழால் அவத்தை மேலால் அவத்தை மேலை அவத்தை

இருவகை சாக்கி ராதி
யவத்தைக ளியல்பு தானும்
ஒருவகை கீழே நூக்கி
உற்பவங் காட்டு மொன்று
பெருகமேல் நோக்கித் தீய
பிறப்பறுத் திடுமி யோகில்
தருவதோர் சமாதி தானுந்
தாழ்ந்துபின் சனனஞ் சாரும். 34

### மாசகலமும் சுத்தாவத்தையும்

அறிதரு முதல வத்தை
அடைதரு மிடத்தே யைந்தும்
செறிதருங் கரணந் தன்னில்
செயல்தொறுங் கண்டு கொள்நீ
பிறிவிலா ஞானத் தோறும்
பிறப்பற வருளா லாங்கே
குறியொடு மஞ்ச வத்தை
கூடுவர் வீடு கூட. 35

### மாசகலத்தில் சுத்தாத்துவம் தொழிற்படுதல்

ஐந்துசாக் கிரத்தி னுங்கு
கனவினில் சுழுனை மூன்று
வந்திடுந் துரியந் தன்னின்
இரண்டொன்று துரியா தீதம்
தந்திடுஞ் சாக்கி ராதி
யவத்தைகள் தானந் தோறும்
முந்திடுங் கரணந் தன்னில்
செயல்தொறு முணர்ந்து கொள்ளே. 36

### காரண அவத்தை மூன்று

கேவல சகல சுத்தம்
என்றுமூன் றவத்தை யான்மா
மேவுவன் கேவலந்தன்
உண்மைமெய் பொறிக ளெல்லாம்

காவலன் கொடுத்த போது
சகலனு மலங்க ளெல்லாம்
ஓவின போது சுத்தம்
உடையனுற் பவந்து டைத்தே. 37

அறிவில னமூர்த்த னித்தன்
அராகாதி குணங்க ளோடும்
செறிவிலன் கலாதி யோடும்
சேர்விலன் செயல்க ளில்லான்
குறியிலன் கருத்தா வல்லன்
போகத்தில் கொள்கை யில்லான்
பிறிவிலன் மலத்தி னேடும்
வியாபிகே வலத்தி லான்மா. 38

உருவினைக் கொண்டு போக
போக்கியத் துன்னல் செப்பல்
வருசெயல் மருவிச் சத்தம்
ஆதியாம் விடயந் தன்னில்
புரிவதுஞ் செய்திங் கெல்லா
யோனியும் புக்கு ழன்று
திரிதருஞ் சகல மான
அவத்தையிற் சீவன் சென்றே. 39

இருவினைச் செயல்க ளொப்பின்
ஈசன்றன் சத்தி தோயக்
குருவருள் பெற்று ஞான
யோகத்தைக் குறுகி முன்னைத்

திரிமல மறுத்துப் பண்டைச்
சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன்றன் பாதம்
பெறுவது சுத்த மாமே. 40

---

## ஐந்தாஞ் சூத்திரம்

### முதல்வனது உபகாரம்

பொறிபுலன் கரண மெல்லாம்
புருடனு லறிந்தான் மாவை
அறிதரா வவையே போல
ஆன்மாக்க ளனைத்து மெங்கும்
செறிதருஞ் சிவன்ற னுலே
அறிந்திடுஞ் சிவனைக் காணு
அறிதருஞ் சிவனே யெல்லாம்
அறிந்தறி வித்து நிற்பன். 1

### இரண்டாமதிகரணம்

### வினைக்கு ஏற்றபடி அறிவு விளங்கும்

இறைவனே யறிவிப் பானேல்
ஈண்டறி வெவர்க்கு மொக்கும்
குறைவதி கங்கள் தத்தம்
கன்மமேற் கோமான் வேண்டா
முறைதரு செயற்குப் பாரு
முளரிகட் கிரவி யும்போல்
அறைதரு தத்தங் கன்மத்
தளவினுக் களிப்ப னுதி. 2

**உயிர் அறிவிக்க அறியும் என்றற்குக் காரணம்**

அறிந்திடு மான்மா வொன்றை
யொன்றினு லறித லானும்
அறிந்தமை மறத்த லானும்
அறிவிக்க வறித லானும்
அறிந்திடுந் தன்னை யுந்தான்
அறியாமை யானுந் தானே
அறிந்திடு மறிவ னன்றும்
அறிவிக்க வறிவ னன்றே. 3

கருவியால் பொருளால் காட்டால்
காலத்தால் கருமந் தன்னுல்
உருவினு லளவா னூலால்
ஒருவரா லுணர்த்த லானும்
அருவனு யுண்மை தன்னில்
அறியாது நிற்ற லானும்
ஒருவனே யெல்லாத் தானும்
உணர்த்துவ னருளி னுலே. 4

கருவியும் பொருளுங் காட்டுங்
காலமுங் கருமந் தானும்
உருவமு மளவு நூலும்
ஒருவரு முணர்த்த லின்றி
அருவனு யுலக மெல்லாம்
அறிந்தவை யாக்கி வேருய்
ஒருவனே யுயிர்கட் கெல்லாம்
உயிருமா யுணர்த்தி நிற்பன். 5

### உயிர் அறிவிக்க அறியும் என்றற்கு உரையளவை

இறைவன்றன் சந்நி திக்கண்
உலகின்றன் சேட்டை யென்னும்
மறைகளு மறந்தாய் மாயை
மருவிடான் சிவன வன்கண்
உறைதரா தசேத னத்தால்
உருவுடை யுயிர்கட் கெல்லாம்
நிறைபரன் சந்நி திக்கண்
நீடுணர் வுதிக்கு மன்றே. 6

### அதி சூக்கும பஞ்சகிருத்தியம்

உலகமே யுருவ மாக
யோனிகள் உறுப்ப தாக
இலகு பேரிச்சா ஞானக்
கிரியையுட் கரண மாக
அலகிலா வுயிர்ப்பு லன்கட்
கறிவினை யாக்கி யைந்து
நலமிகு தொழில்க ளோடு
நாடக நடிப்ப னுதன். 7

தெரிந்துகொண் டொரோவொன் றாகச்
சென்றைந்து புலனும் பற்றிப்
புரிந்திடு முணர்வி னேடும்
போகமும் கொடுத்தி யோனி
திரிந்திடு மதுவுஞ் செய்து
செய்திகண் டுயிர்கட் கெல்லாம்
விரிந்திடு மறிவுங் காட்டி
வீட்டையு மளிப்பன் மேலோன். 8

### சத்தியின் இயல்பு

அருளது சத்தி யாகும்
அரன்றனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லை யந்தச்
சிவமின்றிச் சத்தி யில்லை
மருளினை யருளால் வாட்டி
மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டும்
இரவியைப் போல வீசன். 9

---

## ஆறாஞ் சூத்திரம்

### முதல்வனது தன்னியல்பு

அறிவுறும் பொருளோ வீசன்
அறிவுறா தவனோ வென்னின்
அறிபொரு ளசித்த சத்தாம்
அறியாத தின்று மெங்கும்
செறிசிவ மிரண்டு மின்றிச்
சித்தொடு சத்தாய் நிற்கும்
நெறிதரு சத்தின் முன்னர்
அசத்தெலா நின்றி டாவே. 1

### முதலதிகரணம்

#### அறிவினல் அறிந்தவை அசத்து

ஆவதா யழிவ தாகி
வருதலா லறிவு தானும்
தாவலா லுலகு போகம்
தனுகர ணாதி யாகி

மேவலான் மலங்க ளாகி
விரவலான் வேறு மாகி
யோவலா லசத்தாஞ் சுட்டி
உணர்பொரு ளான வெல்லாம். 2

மண்டனில் வாழ்வும் வானத்
தரசயன் மாலார் வாழ்வும்
எண்டரு பூத பேத
யோனிக ளியாவு மெல்லாம்
கண்டவிந் திரமா சாலம்
கனுக்கழு திரதங் காட்டி
உண்டுபோ லின்றாம் பண்பில்
உலகினை யசத்து மென்பர். 3

## இரண்டாமதிகரணம்

### எவ்வாற்றானும் அறியாத பொருள் இல்லது

உணராத பொருள்சத் தென்னின்
ஒருபய னில்லை தானும்
புணராது நாமுஞ் சென்று
பொருந்துவ தின்று மென்றும்
தணவாத கரும மொன்றும்
தருவது மில்லை வானத்
திணரார்பூந் தொடையுமி யாமைக்
கெழுமயிர்க் கயிறும் போலும். 4

## மூன்றுமதிகரணம்

### உணர்விறந்து உணர்வது சத்து

தத்துவஞ் சத்த சத்துச்
சதசத்து மன்றென் றுலென்
உய்த்துணர்ந் துண்டோ வின்றே
வென்றவர்க் குண்டென் றேதில்
வைத்திடுஞ் சத்தே யாகும்
மனத்தொடு வாக்கி றந்த
சித்துரு வதுவ சித்தா
மனத்தினுல் தேர்வ தெல்லாம். 5

அறிபொரு ளசித்தாய் வேறும்
அறிவுருப் பொருள் சத்தென்னின்
அறிபவ னறியா னுகில்
அதுவின்று பயனு மில்லை
அறிபவ னருளி னுலே
யநநிய மாகக் காண்பன்
அறிபொரு ளறிவாய் வேறுய்
அறிவரு ளுருவாய் நிற்கும். 6

### சிவசத்து பாவிக்க வருவதன்று

பாவிப்ப தென்னில் பாவம்
பாவகங் கடக்கில் பாவம்
பாவிக்கு மதுநா னென்னில்
பாவகம் பாவங் கெட்டுப்

பாவிப்ப தென்னில் பாவம்
பாவனை யிறந்து நின்று
பாவிக்கப் படுவ தாகும்
பரம்பர னருளி னாலே. 7

அன்னிய மிலாமை யானும்
அறிவினுள் நிற்ற லானும்
முன்னிய வெல்லா முள்நின்
றுணர்த்துவ னாத லானும்
என்னதி யானென் றேதும்
இருஞ்செருக் கறுத்த லானும்
தன்னறி வதனால் காணும்
தகைமைய னல்லன் ஈசன். 8

## சிவத்தை ஒன்றி நின்றுணரும் ஆன்மா சிவம் எனப்படுதல்

ஒன்றெனு மதனா லொன்றென்
றுரைப்பதுண் டாகை யாலே
நின்றனன் வேறாய்த் தன்னின்
நீங்கிடா நிலைமை யாலே
பின்றிய வுணர்வுக் கெட்டாப்
பெருமைய னறிவி னுள்ளே
என்றுநின் றிடுத லாலே
இவனவ னென்ன லாமே. 9

## சாதனவியல்

### ஏழாஞ் சூத்திரம்

#### ஆன்மாவின் உண்மையியல்பு

அனைத்துஞ்சத் தென்வி னொன்றை
அறிந்திடா தசத்தா லென்னின்
முனைத்திடா தசத்துச் சத்தின்
முன்னிரு ளிரவி முன்போல்
நினைப்பதிங் கசத்தே யென்னில்
சத்தின்முன் னிலாமை யானும்
தனைக்கொடொன் றுணர்த லானும்
தானசத் துணரா தன்றே. 1

சத்தசத் தறிவ தான்மாத்
தான்சத்து மசத்து மன்று
நித்தனுய்ச் சதசத் தாகி
நின்றிடு மிரண்டன் பாலும்
ஒத்துட னுதித்து நில்லா
துதியாது நின்றி டாது
வைத்திடுந் தோற்ற நாற்ற
மலரினில் வருதல் போலும். 2

**சிவம், ஆன்மா, மலம் அநாதியே வியாபக வியாப்பியமாதல்**

சுத்தமெய்ஞ் ஞான மேனிச்
சோதிபா லசத்தஞ் ஞானம்
ஒத்துரு குற்ற மெல்லாம்
உற்றிடு முயிரின் கண்ணே
சத்துள போதே வேரும்
சதசத்து மசத்து மெல்லாம்
வைத்திடு மநாதி யாக
வாரிநீர் லவணம் போலும். 3

**உயிர் தூல சித்து, சிவம் அதிசூக்கும சித்து**

அறிவிக்க வறித லானும்
அழிவின்றி நிற்ற லானும்
குறிபெற்ற சித்துஞ் சத்துங்
கூறுவ துயிருக் கீசன்
நெறிநித்த முத்த சுத்த
சித்தென நிற்ப னன்றே
பிறிவிப்பன் மலங்க ளெல்லாம்
பின்னுயிர்க் கருளி னாலே. 4

# எட்டாஞ் சூத்திரம்

## முதல்வன் பக்குவான்மாவுக்கு உணர்த்து முறைமை

மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயக்கி நிற்பப்
பின்னவனு மென்மகன்நீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடுந் தானாக்கிப் பேணுமாபோல்
துன்னியவைம் புலவேடர் சுழலில் பட்டுத்
துணைவனையு மறியாது துயருறுந்தொல் [லுயிரை
மன்னுமருட் குருவாகி வந்தவரின் நீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

### முதலதிகரணம்

#### மூவகை உயிர்களுக்கு அருளு முறை

உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்றும்
உயரும்விஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலர்
நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயை
நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்
கரையிலருட் பரன்றுவிதா சத்திநிபா தத்தால்
கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம வொப்பில்
தரையிலா சான்மூர்த்தி யாதார மாகித்
தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா
[தத்தால். 2

## தீக்கையின் வகைகள்

பலவிதமா சான்பாச மோசனந்தான் பண்ணும்
படிநயனத் தருள்பரிசம் வாசகமா னதமும்
அலகில்சாத் திரம்யோக மவுத்தி ராதி
யநேகமுள வவற்றினவுத் திரியிரண்டு திறனும்
இலகுஞானங் கிரியை யெனஞான மனத்தால்
இயற்றுவதுகிரியையெழிற்குண்டமண்டலாதி
நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதா னின்னும்
நிர்ப்பீசஞ் சபீசமென விரண்டாகி நிகழும். 3

பாலரொடு வாலீசர் விருத்தர்பணி மொழியார்
பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப்
சீலமது நிர்ப்பீசங் சமயா சாரம் [பண்ணும்
திகழ்சுத்தி சமயிபுத் திரர்க்கு நித்தத்
தேலுமதி காரத்தை யியற்றித் தானும்
எழிலிரதி காரையென நின்றிரண்டாய்
சாலநிகழ் தேகபா தத்தி னேடு [விளங்கும்
சத்தியநிர் வாணமெனச் சாற்றுங் காலே. 4

ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்கா நல்ல
உத்தமர்க்குச் செய்வதுயர் பீசமிவர் தம்மை
நீதியினு னித்தியநை மித்திககா மியத்தில்
நிறுத்திநிரம் பதிகார நிகழ்த்துவதுஞ்செய்து
சாத்கா சாரியரு மாக்கி வீடு
தருவிக்கு முலோகசிவ தருமிணியென் [றிரண்டாம்
ஆதலினு னதிகாரை யாஞ்சமய விசேட
நிருவாணமபிடேக மிவற்றடங்கு மன்றே. 5

## அத்துவ சோதனை

அழிவிலாக் கிரியையினு னுதல்சத்தி மத்தா
னுதலத்து வாசுத்தி பண்ணிமல மகற்றி
யொழிவிலாச் சிவம்பிரகா சித்தற்கு ஞான
முதிப்பித்துற் பவந்துடைப்ப னரனொருமூ
[வர்க்கும்
வழுவிலா வழியாறு மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்
கழிவிலா துரைத்தமுறை யொன்றி
[னொன்றுவியாத்தி
கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன்கண்ணும்.

மந்திரங்கள் முதலைந்துங் கலையைந்தின் வியாத்தி
மருவுமந் திரமிரண்டு பதங்கள் நாலேழ்
அந்தநிலை யெழுத்தொன்று புவன நூற்றெட்
டவனிதத் துவமொன்று நிவர்த்தியயன்
வந்திடுமந் திரமிண்டு பதங்கள் மூவேழ் [தெய்வம்
வன்னங்கள் நாலாறு புரமைம்பத் தாறு
தந்திடுந்தத் துவங்களிரு பத்து மூன்று
தரும்பிரதிட் டாகலைமா லதிதெய்வந்தானும்.

வித்தையின்மந் திரமிரண்டு பதநா லைந்து
விரவுமெழுத் தேழுபுர மிருபத் தேழு
தத்துவமு மோரேழு தங்குமதி தெய்வந்
தாவிலுருத் திரனுகுஞ் சாந்தி தன்னின்
வைத்தனமந் திரமிரண்டு பதங்கள்பதி னொன்று
வன்னமொரு மூன்றுபுரம் பதினெட் டாகும்
உத்தமமாந் தத்துவமு மொருமூன் றுகும்
உணரிலதி தேவதையு முயரீச னுமே. 8

சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்கள்
தாமூன்று பதமொன்றக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுர மூவைந்து தத்துவங்க ளிரண்டு
மருவுமதி தேவதையு மன்னுசதா சிவராம்
ஏய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்கள்
எண்பத்தொன் றக்கரங்க ளைம்பத்தொன்
ஆய்ந்தபுர மிருநூற்றே டிருபத்து நாலாம் [றுகும்
அறிதருதத் துவமுப்பத் தாறுகலை யைந்தே. 9

## முதல்வன் அருளும் முறைமையைத் தொகுத்துக் கூறல்

மூன்றுதிறத் தணுக்கள் செயுங் கன்மங் கட்கு
முன்னிலையா மூவிரண்டா மத்து வாவின்
ஆன்றமுறை யவையருத்தி யறுத்துமல முதிர்வித்
தரும்பருவ மடைதலுமே யாசா னாகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
துகள றுத்தங் கத்துவாத் துடக்கறவேசோதித்
தேன்றவுடற் கன்மமனு பவத்தினா லறுத்திங்
கினிச்செய்கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன்

## இரண்டாமதிகரணம்

## உயிர்கள் உய்யும் வகை

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள்
[புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள்
[படித்தும்

சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்முற்
[சைவத்
திறத்தடைவர் இதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்
[சேர்வர். 11

## முத்தி வகை

இம்மையே யீரெட்டாண் டெய்தியெழி லாரும்
ஏந்திழையார் முத்தியென்று மிருஞ்சுவர்க்க
யம்மையே யென்றுமுத்தி யைந்து கந்தம் [முத்தி
அறக்கெடுகை யென்றுமட்ட குணமுத்தி
[யென்று
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி
[யென்றும்
விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ்
[சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்செப்
[புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங்கி
[யாமே. 12

## சைவமே தலையாய நெறி

ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்கள்
ஒன்றேடொன் ருெவ்வாம லுளபலவு
[மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னின்
இதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி

நீதியினு னிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியாதொருசமயமதுசமயம்பொருணூல்
ஆதலினு னிவையெல்லா மருமறையா கமத்தே
அடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ
[ழடங்கும். 13

## வேதாகமங்களே முதனூல்கள்

அருமறையாகமமுதனூலனைத்துமுரைக்கையினுன்
அளப்பரிதா மப்பொருளை யரனருளா
[லணுக்கள்
தருவர்கள்பின் தனித்தனியே தாமறிந்த வளவில்
தர்க்கமொடுத் தரங்களினுற் சமயஞ்சா தித்து
மிருதிபுரா ணங்கலைகள் மற்று மெல்லாம்
மெய்ந்நூலின் வழிபுடையா மங்கம்வே
[தாங்கம்
சுருதிசிவா கமமொழியச் சொல்லுவதொன் றில்லை
சொல்லுவார் தமக்கறையோ சொல்லொ
[ணுதே. 14

## வேதம் பொது, சைவம் சிறப்பு

வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லநாதியம லன்தருநூ லிரண்டும்
ஆரணநூல் பொதுசைவமருஞ்சிறப்புநூலாம்
நீதியினுல் உலகர்க்கும் சத்திநிபா தர்க்கும்
நிகழ்த்தியது நீண்மறையி னெழிபொருள்வே
[தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம்
[பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த
[மாகும். 15

## சிவநெறியொன்றே ஒரே பிறப்பில் வீடு பெறுவிப்பது

சித்தாந்தத் தேசிவன்றன் திருக்கடைக்கண்
[சேர்த்திச்
சென்னமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை
[யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவு முலகரெல்லா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெறும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன
[பிராந்தி. 16

## சிவனொருவனே எல்லா அறிவு முதன்மை அருள் உடையன்

இறைவனு வான்ஞான மெல்லா மெல்லா
முதன்மையனுக் கிரகமெல்லா மியல்புடையா
[னியம்பு
மறைகளா கமங்களினு னறிவெல்லாந் தோற்றும்
மரபின்வழி வருவோர்க்கும் வாராதோர்க்கும்
முறைமையினு லின்பத்துன் பங்கொடுத்த லாலே
முதன்மையெலா மறிந்துமுயங் கிரண்டு
திறமதனுல் வினையறுக்குஞ் செய்தியாலே [போகத்
சேருமனுக் கிரகமெலாங் காணுதுநாஞ்
[சிவற்கே. 17

## நால்வகை நெறி

சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்ர மார்க்கம்
தாதமார்க் கம்மென்றும் சங்கரனை யடையும்
நன்மார்க்க நாலவைதாம் ஞான யோகம்
நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்
சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்ய
சாரூப்ய சாயுச்ய மென்றுசதுர் விதமாம்
முன்மார்க்க ஞானத்தா லெய்து முத்தி
முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபதமென்பர்.

தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயில்
தலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சார்த்திப்
போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வதி
யாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியும்
இயற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுல
[கிருப்பர். 19

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் [டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானுஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த

பத்தியினு லருச்சித்துப் பரவிப் போற்றிப்
    பரிவினெடு மெரியில்வரு காரியமும் ‡பண்ணல்
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்கள்
    நின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே. 20

சகமார்க்கம் புலனெடுக்கித் தடுத்துவளி யிரண்டும்
    சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்கள்
அகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க
                    [ளுணர்ந்தங்
    கணைந்துபோய் மேலேறி அலர்மதிமண்
முகமார்க்க வமுதுடலம் முட்டத் தேக்கி[டலத்தின்
    முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக
உகமார்க்க அட்டாங்க யோக முற்றும் [வினைகள்
    உழத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப்
                    [பெறுவர். 21

சன்மார்க்கம் சகலகலை புராண வேத
    சாத்திரங்கள்சமயங்கள் தாம்பலவுமுணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
    பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டும்
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
    ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
    பெருமையுடையோர்சிவனைப் பெறுவர்
                    [காணே. 22

---

‡ இப் பாடமே 'புத்திரமார்க்கம்' என்ற எழுவாய்க்குப் பயனிலை அமைந்த சிறந்த பாடம்.

## ஞானபூசையின் உயர்வு

ஞானநூல் தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல்
ஈனமிலாப்பொருளதனைச்சிந்தித்தல்ஐந்தும்[நன்று
இறைவனடி யடைவிக்கும் எழின்ஞான பூசை
ஊனமிலாக் கன்மங்கள் தபஞ்செபங்கள் தியானம்
ஒன்றுக்கொன் றுயருமிவை யூட்டுவது போகம்
ஆனமையான் மேலான ஞானத்தா லரனை
அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோ ரெல்லாம்.

## ஞானத்தின் படிநிலை நான்கு

கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை
கிளத்தலென வீரிரண்டாங் கிளக்கின் ஞானம்
வீட்டையடைந் திடுவர் நிட்டை மேவினோர்கள்
மேவாது தப்பினவர் மேலாய பதங்கட்
கீட்டியபுண் ணியநாத ராகி யின்பம்
இனிதுநுகர்ந் தரனருளா லிந்தப் பார்மேல்
நாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக் குருவால்
ஞானநிட்டையடைந்தடைவர் நாதன்தாளே.

தானமியா கந்தீர்த்த மாச்சிரமந் தவங்கள்
சாந்திவிர தங்கன்ம யோகங்கள் சரித்தோர்
ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வர்
ஈசனியோ கக்கிரியா சரியையினில் நின்றோர்

ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லாம்
ஒடுங்கும்போ தரன்முனிலா
[தொழியினுற்ப வித்து
ஞானநெறி யடைந்தடைவர் சிவனை யங்கு
நாதனே முன்னிற்கின் அணுகுவர்நற் றூளே.25

### சிவஞானிகளைப் பேணுவோர் வீடடைவர்

சிவஞானச் செயலுடையோர் கையில் தானந்
திலமளவே செய்திடினும் நிலமலைபோல்
[திகழ்ந்து
பவமாயக் கடலினமுந் தாதவகை யெடுத்துப்
பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
சரியைகிரி யாயோகந் தன்னினுஞ்சா ராமே
நவமாகுந் தத்துவஞா னத்தை நல்கி
நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்குந் தானே.

### சிவஞானம் ஒன்றே பரமுத்திக்கு ஏது

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்லவா கமஞ்சொல்ல வல்லவா மென்னும்
ஊனத்தா ரென்கடவ ரஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தான்
ஆனத்தா லதுபோவ தலர்கதிர்முன் னிருள்போல்
அஞ்ஞானம் விடப்பந்த மறுமுத்தி யாகும்
ஈனத்தார் ஞானங்க ளல்லா ஞானம்
இறைவனடி ஞானமே ஞான மென்பர். 27

### கேட்டலும் அதன் பயனும்

சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞான மான்மாவில் தோன்றுந் தோன்றத்
தூரியனுஞ் சிவன்தோன்றுந் தானுந் தோன்றுந்
தொல்லுலகமெல்லாந்தன்னுள்ளேதோன்றும்
நேரியனுப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கும்
நின்றநிலை யெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும்.

### சிந்தித்தலும் அதன் பயனும்

மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாதம்
மேவுதலும் ஞானம்விளைந் தோர்குருவின் [அருளாற்
புக்கநுட்டித் தேநிட்டை புரிந்துளோர்கள்
பூதலத்திற் புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி யோட்டில்
தபநியத்திற் சமபுத்தி பண்ணிச்சங் கரனோ(டு)
ஒக்கவுறைந் திவரவனே யவனிவரை விடாதே
உடந்தையாய்ச் சிவன்தோற்றம் ஒன்றுமே [காண்பர். 29

### தெளிதலும் அதன் பயனும்

அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினன் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயின்

பிறியாத சிவன்றானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னாயே.

## ஞானநிட்டையும் பயனும்

புண்ணியமேல் நோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும்
புண்ணியனைப் பூசித்த புண்ணியத் தினாலே
நண்ணியஞா னத்தினால் இரண்டினையும் அறுத்து
ஞாலமொடு கீழ்மேலும் நண்ணா னாகி
எண்ணுமிக லோகத்தே முத்திபெறு மிவன்றான்
எங்கெழிலென் ஞாயிறெமக் கென்றுகுறை
[வின்றிக்
கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயம்
கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போல்
[நிற்பன். 31

## ஞானநிட்டை யுடையோர் இயல்பு

ஞாலமதில் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலைநாடுவ தொன்றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமல மில்லை
கோலமிலை புலனில்லை கரண மில்லை
குணமில்லை குறியில்லை குலமு மில்லை
பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும்
[பயில்வர். 32

தேசமிடங் காலந்திக் காசனங்க ளின்றிச்
செய்வதொன் றுபோற்செய்யாச்செயலதனைச்
கூசல்படு மனமின்றி யுலாவல் நிற்றல் [செய்தங்
உறக்கமுணர் வுண்டிபட் டினியிருத்தல்
[கிடத்தல்
மாசதனில் தூய்மையினின் வறுமை வாழ்வின்
வருத்தத்தின் திருத்தத்தின் மைதுனத்தில்
[சினத்தின்
ஆசையினின் வெறுப்பினிவை யல்லாது மெல்லாம்
அடைந்தாலு ஞானிகள்தாம் அரனடியை
[யகலார். 33

## உபாய நிட்டை

இந்நிலை தான்இல்லையே யெல்லா மீசன்
இடத்தினினு மீசனெல்லாவிடத்திினினும்
அந்நிலையை யறிந்தந்தக்கரணங்கள் அடக்கி [நின்ற
அறிவதொரு குறிகுருவி னருளினு லறிந்து
மன்னுசிவன் தனையடைந்து நின்றவன்ற னுலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனில் துரியா தீதம்
தோன்றமுயல் சிவாநுபவஞ் சுவாநுபூதிகமாம்

## சாக்கிரத்தே அதீதம் புரிவோர் இயல்பு

சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகில்
சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள்
[இவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுவெ ளிம்மையிலே யுயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவரன்றே

ஆக்குமுடி கவித்தரசாண் டவர்களரி வையரோ
டனுபவித்தங் கிருந்திடினும் அகப்பற்றற்
[றிருப்பர்
நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் ருலும்
நுழைவர்பிறப் பினின்வினைகள்நுங்கி டாவே.

## மூன்ருமதிகரணம்

### சிவானுபவத்தின் இயல்பு

கருவிகழிந் தாற்காணு ரென்றுமெனிற் காணுர்
காணுதார் கன்னிகைதான் காமரசங் காணுள்
மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
வாயினுற் பேசரிது மணந்தவர்தா முணர்வர்
உருவினுயிர் வடிவதுவு முணர்ந்திலர்காண் சிவனை
உணராதா ருணர்வினு லுணர்வதுகற்
[பனைகாண்
அருள்பெறினவ் விருவரையு மறிவிறந்தங் கறிவர்
அறியாரேற் பிறப்பும்விடா தாணவமுமருதே.

## நான்காமதிகரணம்

### பாசத்தை நேதி பண்ணிவிடுமாறு

பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போ லுள்ளம்
பலபுலன்கள் நிறங்காட்டும் பரிசு பார்த்திட்
டிந்நிறங்க ளென்னிறமன் றென்று தன்றன்
எழில்நிறங்கண் டருளினு லிந்நிறத்தின்
[வேருய்ப்

பொய்ந்நிறவைம் புலநிறங்கள் பொய்யெனமெய் [கண்டான்
பொருந்திடுவன் சிவத்திெனுடும் போதான் [பின்னே
முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி
முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்னீங்கா [முறைபோல். 37

**சிவஞானம் பெறுவது கண்பெற்ருர் பேறு போல்வது**

எங்குந்தா னென்னில்நா மெய்த வேண்டா
வெங்குமில னென்னின்வே றிறையு மல்லன்
அங்கஞ்சே ருயிர்போல்வ னென்னி னங்கத்
தவயவங்கள் கண்போலக் காணு வான்மா
இங்குநா மியம்புந்தத் துவங்களின்வைத் தறிவ
திறைஞானந் தந்துதா ளீதல்சுட ரிழந்த
துங்கவிழிச் சோதியுமுட் சோதியும்பெற் ருற்போல்
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் [காணே. 38

**வாதனையாற் சிவத்தை நீங்குவோர்**
**நீங்காவகை பின் உணர்த்தப்படுபவை எனல்**

பாசிபடு குட்டத்தில் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற் [பரக்கும்
ஆசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்தும்
அரனடியை யுணரும்போ தகலும்பின் [னணுகும்

நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி
ஆசையொடு மங்குமிங்கு மாகியல மருவோர்
அரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி
[யுரைப்பாம். 39

---

## ஒன்பதாஞ் சூத்திரம்

**சிவத்தைச் சிந்தையில் ஞானத்தால் கண்டு நிற்க; நீங்கின் ஐந்தெழுத்தை எண்ணுக**

பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடு முள்ளத்தே நாடிப் பாதன்
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்
ஆசைதரு முலகமெலா மலகைத்தே ராமென்
றறிந்தகல வந்நிலையே யாகும் பின்னும்
ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்க
உள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலா மோட.

### முதலதிகரணம்

#### பாச பசுஞானங்கள்

வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலாம்
நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்
நணுகியான் மாவினவகீழ் நாட லாலே

காதலினால் நான்பிரம மென்னும் ஞானம்
கருதுபசு ஞானமிவ னுடலில் கட்டுண்
டோதியுணர்ந் தொன்றென்று வுணர்த்திடலால்
[பசுவாம்
ஒன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன்
[காணே. 2

## பசுஞானத்தின் வகை பல

கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னில்
கதியாகுஞ்சிலைமுட்டை கருமரத்தினுயிர்கள்
மரணங்கொண் டிடவுறங்க மயங்கிமூர்ச் சிக்க
வாயுத்தம்பனைபண்ண வல்விடத்தையடையச்
சரணங்கள் புகுநிழல்போல் தனையடையுஞ் சமாதி
தவிராது மலமிதுவும் பசுஞான மாகும்
மரணங்க ளரித்தவன்றன் அடியையறி விறந்தங்
கறிந்திடீர் செறிந்ததுக ளகற்றி டீரே. 3

## சிவஞானத்தின் இன்றியமையாமை

சிவனையவன் திருவடிஞா னத்தால் சேரச்
செப்புவது செயல்வாக்குச் சிந்தை யெல்லாம்
அவனையணு காவென்று மாத லானும்
அவனடியவ் வொளிஞான மாத லானும்
இவனுமியான் துவக்குதிர மிறைச்சி மேதை
என்புமச்சை சுக்கிலமோ விந்திரியக்
[கொத்தோ
அவமகல வெனையறியே னெனுமைய மகல
அடிகாட்டி யான்மாவைக் காட்டலானும். 4

கண்டிடுங்கண் தனைக்காணு கரணங்காணு
கரணங்கள் தமைக்காணு வுயிருங் காணு
வுண்டியம ருயிர்தானுந் தன்னைக் காணு
துயிர்க்குயிரா மொருவனையுங் காணு தாகும்
கண்டசிவன் தனைக்காட்டி யுயிருங் காட்டிக்
கண்ணுகிக் கரணங்கள் காணுமல் நிற்பன்
கொண்டரனை யுளத்திற்கண் டடிகூடிற் பாசம்
கூடாது கூடிடினுங் குறித்தடியி னிறுத்தே. 5

## இரண்டாமதிகரணம்

### உலகப்பற்று அற்ருரே சிவஞானத்தைத் தலைப்படுவர்

குறித்தடியில் நின்றட்ட குணமெட்டுச் சித்தி
'கோகநதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்துநெறி அறுவகையு மேலொடுகீ ழடங்க
வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ
[ழில்லான்
நிறுத்துவதோர் குணமில்லான் தன்னையொரு
[வர்க்கு
நினைப்பரியா னென்றுமிலான் நேர்படவந்
[துள்ளே
பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப்
[புரிந்தே. 6

## மூன்ருமதிகரணம்

### சிவன் நான் எனப் பாவித்தல்

கண்டவிவை யல்லேன்நா னென்றகன்று காணுக்
கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த
தொண்டினெடு முளத்தவன்தா னின்றகலப் பாலே
சோகமெனப்பாவிக்கத்தோன்றுவன்வேறின்றி
விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தால்
விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமதுநா னானே னென்று
பாவிக்கச்சொல்லுவதிப்பாவகத்தைக்கானே.

### அக வழிபாடு (ஞானவிதிப்படி)

அஞ்செழுத்தா லான்மாவை அரனுடைய பரிசும்
அரனுருவு மஞ்செழுத்தா லமைந்தமையு
டஞ்செழுத்தா லங்ககர நியாசம் பண்ணி[மறிந்திட்
யான்மாவி னஞ்செழுத்தா லிதயத் தர்ச்சித்
தஞ்செழுத்தால் குண்டலியின் அனலை யோம்பி
அணைவரிய கோதண்ட மணைந்தருளின்வழிநின்
றஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்கமதி யருக்கன்
அணையரவம் போல்தோன்று மான்மாவி
[லரனே. 8

### இதயத்தின் இயல்பு

நாட்டுமித யந்தானு நாபியினி லடியாய்
ஞாலமுதல் தத்துவத்தா லெண்விரல் நாளத்
மூட்டுமோ கிநிசுத்த வித்தைமல ரெட்டாய் [தாய்
முழுவிதழெட் டக்கரங்கள் †முறைமையினி
[லுடைத்தாய்க்

† முறைமையினின்

காட்டுகம லாசனமே லீசர்சதா சிவமுங்
கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணுகுஞ் சத்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மாணுகிச் சத்தி
மேலாகி நிற்பனிந்த விளைவறிந்து போற்றே.

## அக வழிபாட்டின் சிறப்பு

அந்தரி யாகந்தன்னை முத்திசா தனமா
அறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தி யாகும்
கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாக்
கண்டனவெ லாமனத்தால் கருதிக்கொண்டு
சிந்தைதனி லர்ச்சிக்கச் சிவனைஞா னத்தால்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியர னுளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே.

## புறத்தும் இறைவனை வழிபடுக

புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க வேண்டில்
பூமரத்தின் கீழுதிர்ந்த போதுகளும் கொண்டு
சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தா லங்குச்
சிந்திக்கும் படியிங்குச் சிந்தித்துப் போற்றி
அறம்பாவங் கட்குநா மென்கடவே மென்றும்
ஆண்டவனைக் கண்டக்கா லகம்புறமென் [றுதே
திறம்பாதே பணிசெய்து நிற்கை யன்றே
சீரடியார் தம்முடைய செய்தி தானே. 11

## ஞான வழிபாட்டால் எய்தும் பயன்

இந்தனத்தின் எரிபாலின் நெய்பழத்தின் இரதம்
எள்ளின்க ணெண்ணெயும்போ லெங்குமுளன் [இறைவன்
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளும்
மலமறுப்போ ரான்மாவின் மலரடிஞா [னத்தால்
சிந்தனைசெய் தர்ச்சிக்கச் சிவனுளத்தே தோன்றித்
தீயிரும்பைச் செய்வதுபோல் சீவன் தன்னைப்
பந்தனையை யறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்
பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன் [பாலே. 12

---

# பயனியல்

---

## பத்தாஞ் சூத்திரம்

### ஏகனுகி இறைபணி நிற்கப் பாச நீக்கம் உளதாகும்

இவனுலகில் இதமகிதஞ் செய்த வெல்லாம்
இதமகித மிவனுக்குச் செய்தார்பா லிசையும்
அவனிவனுய் நின்றமுறை யேக ஞகி
அரன்பணியில் நின்றிடவு மகலுங் குற்றம்
சிவனுமிவன் செய்தியெல்லா மென்செய்தி
[யென்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல வுடஞகி நின்றுகொள்வன் பரிவால்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி
[விடுமே. 1

### முதலதிகரணம்

### ஏகனுகி நிற்றலின் பயன்

யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா
[னென்னும்
இக்கோணை ஞானவெரி யால்வெதுப்பி
[நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்ருனேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொளித்
[திட்டோடும்

நான்செய்தே னெனுமவர்க்குத் தானங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங்
[கன்மம்
ஊன்செய்யா ஞானந்தா னுதிப்பி னல்லால்
ஒருவருக்கும் யானெனதிங் கொழியா
[தன்றே. 2

## இரண்டாமதிகரணம்

### இறைபணி நிற்றலின் பயன்

இந்திரிய மெனைப்பற்றி நின்றேயென் வசத்தின்
இசையாதே தன்வசத்தே யெனையீர்ப்ப
[திவற்றைத்
தந்தவன்றன் ஆணைவழி நின்றிடலா லென்றும்
தானறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான்
[தாள்கள்
வந்தனைசெய் திவற்றின்வலி யருளினால் வாட்டி
வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்க
[ளுண்டேல்
முந்தனுடைச் செயலன்று முடித்தொழுக வினைகள்
மூளவுங் காளாகி மீளா னன்றே. 3

சலமிலனுய்ஞானத்தால்தனையடைந்தார்தம்மைத்
தானாக்கித் தலைவனவர் தாம்செய்வினை
[தன்னால்
நலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப் பானும்
நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்

உலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே
உள்நின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்று
[யென்றும்
நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே
[யென்றும்
நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந்தானே.

நாடுகளில் புக்குழன்றும் காடுகளில் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர்
[பிறப்பில்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை
[ஞானம்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர். 5

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்
ஔடதமந் திரமுடையார்க்கரு விடங்களேறு
எங்கித்தைக் கன்மமெலாம் செய்தாலும் ஞானிக்கு
இருவினைகள் சென்றணையா முற்செய்வினை
[யிங்குத்
தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த
சக்கரமுங் கந்தித்துச் சுழலு மாபோல்
மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கு மெல்லா
மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே. 6

## பதினொன்றாஞ் சூத்திரம்

### பர முத்தியின் இயல்பு

காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்
காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய(ன்)
கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல [கண்ணுக்
ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை
ஆயுமறி வுடையனு யன்பு செய்ய
அந்நிலைமை யிந்நிலையி லடைந்தமுறை யாலே
மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்
மாறாத சிவாநுபவ மருவிக் கொண்டே. 1

**சிவஞானம் சிவத்தையே காட்டும்; கன்மம் நீக்கம்**

பரஞானத் தால்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர்பதார்த்தங்கள்பாரார்பார்க்க
வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம்வயிந்தவத்தின் கலக்கம்
தருஞானம் போகஞா திருஞான ஞேயம்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
இருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞானம்
ஆதலால் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்.

**பர முத்தியில் உடம்பு இல்லை; மாயை நீக்கம்**

அநாதியுட லொன்றினைவிட் டொன்றுபற்றிக்
ஆயழிந்து வருதலா லந்த மில்லை [‡கன்மால்
பினுதியருள் பெற்றவர்கள் நித்தவுரு வத்தைப்
பெற்றிருக்கை முத்தியெனில் பெறும்பதமே
[ யிதுவும்

---

‡ கன்மத்தாலழிந்து

இனுதுநிலை யிதுதானும் காய முண்டேல்
இருங்கன்ம மாயைமல மெல்லா முண்டாம்
மனுதிதரு முடலாதி காரியத்தா லநாதி
மலமறுக்கு மருந்தற்று லுடல்மாயுங் காணே.

மல நீக்கம்

தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன்முத்த னுகும்
உரியமல மௌடதத்தால் தடுப்புண்ட விடமும்
ஒள்ளெரியி னெளிமுன்ன ரிருளுந்தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து காயம்
திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயம்
சேராத வகைதானுந் தேயு மன்றே. 4

பாடாணவாத பேத வாத மறுப்பு

ஆணவந்தா னநாதியந்த மடையா தாகும்
அடையினந்த வான்மாவு மழியுமெனில்
[செம்பில்
காணலுறுங் களிம்பிரத குளிகைபரி சிக்கக்
கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே
தாணுவின்றன்கழலணையத் தவிருமலந்தவிர்ந்தால்
தான்சுத்த னுயிருக்கை முத்தியரன் தானைப்
பூணவேண் டுவதொன்று மில்லையெனின் அருக்கன்
புகுதவிருள் போமடியில் பொருந்தமலம்
[போமே. 5

## அநாதி குற்றத்திற்கு அந்தம் உண்டு

நெல்லினுக்குத் தவிடுமிக ளநாதி †யாயே
நெல்லைவிட்டு *நீங்கும்வகை நின்றநிலை
[நிகழ்த்தீர்
சொல்லியிடில் துகளகற்ற அரிசியின்பா லில்லை
தொக்கிருந்துமற்றொருநெல்தோன்றிடாவாம்
மெல்லவிவை விடுமறவே யிவைபோல வணுவை
மேவுமல முடல்கன்ம மநாதிவிட்டே நீங்கும்
நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை
நணுகிநிற்கு மாதலான் நாசமுமின் றாமே. 6

### முதலதிகரணம்

## இறைவன் உயிர்க்குக் கண்டுகாட்டல்

எவ்விடத்துமிறையடியை யின்றியமைந்தொன்றை
அறிந்தியற்றி யிடாவுயிர்கள் ஈசன் தானும்
செவ்விதினிலுளம்புகுந்து செய்தியெலாமுணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்
இவ்வுயிர்கள்தோற்றும் போதவனையின்றித்
[தோற்றா
இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய்
[நிற்கும்
அவ்வுயிர்போ னின்றிடுவ னாத லானும்
அரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே. 7

---

† யாவும், * நீங்கியவை,

## இரண்டாமதிகரணம்

### பக்குவம் எய்திய உயிர்க்கே முதல்வன் இருப்பு விளங்கும்

எங்குந்தா னிறைந்துசிவ னின்ருறுகில்
எல்லாரும் காணவே வேண்டுந்தா னென்னில்
இங்குந்தா னந்தகருக் கிரவியிரு ளாகும்
ஈசனருட் கண்ணில்லார்க் கொளியாயே
[யிருளாம்
பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்
பரிதியலர்த் திடுவதுபோல் பருவஞ்சே
[ருயிர்க்குத்
துங்கவரன் ஞானக்கண் கொடுத்தருளி ஞலே
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்
[காணே. 8

### அவிகார வாதம் முதலியவற்றின் மறுப்பு

சென்றணையும் நிழல்போலச் சிவனிற்ப னென்னில்
சென்றணையு மவன்முதலி சிவத்தையணைந்
[தொன்ருய்
நின்றதுயிர் கெட்டென்னில் கெட்டதணை வின்ரும்
நின்றதேல் கேடில்லை யணைந்துகெட்ட
[தென்னில்
பொன்றினதேல் முத்தியினைப்பெற்றவரார் புகல்நீ
பொன்றுகையே முத்தியெனில் புருடனித்த
[னன்ரும்
ஒன்றியிடு நீரொடுநீர் சேர்ந்தாற்போ லென்னின்
ஒருபொருளா மதிபதியோ டுயிர்பொருள்
[ஒன்றன்றே. 9

### பேதவாத சமவாதங்களின் மறுப்பு

செம்பிரதகுளிகையினுல் களிம்பற்றுப்பொன்னுய்ச்
செம்பொனுடன் சேருமலம் சிதைந்தால் சீவன்
நம்பனுடன் கூடுமெனில் பொன்போ லல்லன்
நற்குளிகை போலவர னணுகுமலம் போக்கி
அம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கும்
அக்குளிகை தானும்பொன் னுகா தாகும்
உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரியன்
உயிர்தானும் சிவாநுபவ மொன்றினுக்கு
[முரித்தே. 10

### அருவ சிவசமவாத மறுப்பு

சிவன்சீவ னென்றிரண்டும் சித்தொன்று என்னில்
சிவனருட்சித் திவனருளைச்சேரும்சித் தவன்தான்
பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றில்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்
அவன்றானே யறியுஞ்சித் தாதலினு லிரண்டும்
அணைந்தாலும் ஒன்றுகா தநந்நியமா யிருக்கும்
இவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி
இதுவசித்தென் றிடிலவனுக் கிவனுமசித் தாமே.

### சித்தாந்த முத்தியின் இயல்பு

இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங்
[குயிரை
யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தானுக்கி
‡அரும்பித்தீயிந்தனத்தையழிப்பதுபோல்மலத்தை
அறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து

‡ அரும்பித்திந்தனத்தை யனலழிப்பதுபோல்.

விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ
[லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினில்
[கலந்தே. 12

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

### அணைந்தோர் தன்மை

செங்கமலத் தாளிணைகள் சேரல் ஒட்டாத்
திரிமலங்க ளறுத்தீச னேசரொடுஞ் செறிந்திட்
டங்கவர்தந் திருவேடம் ஆலயங்க ளெல்லாம்
அரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி
எங்குமியா மொருவர்க்கு மெளியோம் அல்லோம்
யாவர்க்கு மேலானே மென்றிறுமாப்பெய்தித்
திங்கண்முடி யாரடியா ரடியோ மென்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.

### இரண்டாமதிகரணம்

### அடியார்க்கு அன்புடைமை

ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன்பில்லார்
பேசுவதென் னறிவில்லாப் பிணங்களைநா மிணங்கில்
பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ

ஆசையொடு மரனடியா ரடியாரை அடைந்திட்
டவர்கரும முன்கரும மாகச் செய்து
கூசிமொழிந் தருண்ஞானக் குறியி னின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.

## மூன்றுமதிகரணம்

### அடியார் சிவமே யாவர்

அறிவரியான் தனையறிய ஆக்கை யாக்கி
அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத் [தருளால்
செறிதலினுல் திருவேடஞ் சிவனுருவே யாகும்
சிவோகம்பா விக்குமத்தால் சிவனு மாவர்
குறியதனுல் இதயத்தே யரனைக் கூடும்
கொள்கையினு லரனுவர் குறியொடுதாம் [அழியும்
நெறியதனுல் சிவமேயாய் நின்றிடுவ ரென்றுல்
*நேசத்தார்த் தொழுதிடுநீ பாசத்தார் [விடவே. 3

### திருமேனியைவழிபடுவார் கருத்துவகையும்பயனும்

திருக்கோயி லுள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டார்க்குச் சிவனுறைவன் [அங்கே
உருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கும்
உளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும்

---

* நேசத்தாற்றொழுதிடு என்றது பிழைபட்டபாடம்.

விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோல்
மந்திரத்தில் வந்துதித்து மிகும்சுரபிக்கெங்கும்
உருக்காண வொண்ணுத பால்முலைப்பால் விம்மி
யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவனன்
[பர்க்கே. 4

## ஞான குரவன் உயர்வு

ஞானயோ கக்கிரியா சரியை நான்கும்
நாதன்றன் பணிஞானி நாலினுக்கு முரியன்
ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கு முரியன்
யோகிகிரி யாவான்தான் ஒண்கிரியை யாதி
ஆனவிரண் டினுக்குரியன் சரியையினில் நின்றோன்
அச்சரியைக் கேயுரிய னுதலினுல் யார்க்கும்
ஈனமிலான் ஞானகுரு வேகுருவு மிவனே
ஈசனிவன் தானென்று மிறைஞ்சி யேத்தே. 5

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தவியோ
[கத்தான்
மணியிரத குளிகையினுல் மற்றும் மற்றும்
தந்திரத்தே சொன்னமுறை செய்ய வேத
சகலகலை ஞானங்கள் திரிகால ஞானம்
அந்தமிலா மணிமாதி ஞானங்க ளெல்லாம்
அடைந்திடுமா சானருளால் அடிசேர் ஞானம்
வந்திடுமற் றென்றுலும் வாரா தாகும்
மற்றவையு மவனருளால் மருவு மன்றே. 6

## ஒண் குரவனை வழிபடுமாறும் முத்திப்பயனும்

பரம்பிரம மிவனென்றும் பரசிவன்ரு னென்றும்
பரஞானமிவனென்றும் பராபரன்ருனென்றும்
அரன்தருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்றும்
அருட்குருவை வழிபடவே யவனிவன்ரு னுயே
இரங்கியவா ரணம்யாமை மீனண்டஞ் சினையை
இயல்பிஞெடும் பரிசித்தும் நினைந்தும் [பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமா போல்சிவமே யாக்கும்
பரிசித்தும் சிந்தித்தும் பார்த்துந் தானே. 7

அருணந்தி தேவநாயனுர் அருளிய

சிவஞானசித்தியார் சுபக்கம்

முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# அருணந்திதேவ நாயனுர்

அருளிச்செய்த

# இருபாவிருப:்து

### மெய்கண்டதேவர் சிவமேயாவர்

கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்—
[வெண்ணெய் நல்லூர்
மெய்கண்டான் என்றெருகால் மேவுவரால்
கைகண்டார் ‡ உள்ளத்தின் கண். [வேறின்மை

### உயிர் பக்குவத்தில் உணர்த்த உணரும்

கண்ணகன் ஞாலத்துக் கதிரவன் தானென
வெண்ணைத் தோன்றிய மெய்கண்ட தேவ
காரார் கிரகக் கலியாழ் வேனைநின்
பேரா இன்பத் திருத்திய பெரும
5 வினவ லானு துடையேன் எனதுளம்

---

‡ உள்ளத்திற் கண் என்பதும் பாடம்.

நீங்கா நிலைமை ஊங்கும் உளையால்
அறிவின் மைமலம் பிறிவின் மையெனின்
ஓராவினை யுணர்த்தும் விராய்நின் றனையேல்
திப்பியம் அந்தோ பொய்ப்பகை யாகாய்
10 சுத்தன் அமலன் சோதி நாயகன்
முத்தன் பரம்பரன் எனும்பெயர் முடியா
வேறுநின் றுணர்த்தின் வியாபக மின்றாய்ப்
பேறும் இன்றாம் எமக்கெம் பெரும
* இருநிலம் தீநீர் இயமானன் காலெனும்
15 பெருநிலைத் தாண்டவம் பெருமாற்கி லாதலின்
வேறே உடனே விளம்பல் வேண்டும்
சீறி யருளல் சிறுமை யுடைத்தால்
அறியாது கூறினை அபக்குவ பக்குவக்
குறிபார்த் தருளினம் குருமுத லாயெனின்
20 அபக்குவ மருளினும் அறியேன் மிகத்தகும்
பக்குவம் வேண்டில் பயனிலை நின்னால்
பக்குவ மதனால் பயன்நீ வரினே
நின்னைப் பருவம் நிகழ்த்தா தன்றே
தன்னைப் பாரிலி யென்பதும் தகுமே
25 மும்மலஞ் சடமணு மூப்பிள மையில்நீ
நின்மலன் பருவம் நிகழ்த்திய தார்க்கோ
† உணர்வெழு நீக்கத்தை ஓதிய தெனினே
இணையிலி யாயினை என்பதை அறியேன்
யானே நீக்கினும் தானே நீங்கினும்

---

* 'இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி' என்னும் திருத் தாண்டகம். † தணிகைப்புராணம், அகத். 159.

30 கோனே வேண்டா கூறல் வேண்டும்
†காண்பார் யார்கொல் காட்டாக் காலெனும்
மாண்புரை உணர்ந்திலை மன்ற பாண்டியன்
கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞா னத்தின்
‡ஆட்பா லவர்க்கருள் என்பதை யறியே. 2

## ஆன்மா தடுக்கப்பட்ட அறிவுடையது

அறிவறி யாமை யிரண்டு மடியேன்
செறிதலான் மெய்கண்ட தேவே—அறிவோ
அறியேனோ யாதென்று கூறுகேன் ஆய்ந்து
குறிமாறு கொள்ளாமற் கூறு. 3

## மூலமலம் அநாதிபந்தம், மாயை கன்மம் ஆகந்துகம்

கூறிய மூன்று மலத்தின் குணங்குறி
வேறு கிளக்கின் விகற்பங் கற்பங்
குரோதம் மோகம் கொலையஞர் மதநகை
விராயெண் குணனுமா ணவமென விளம்பினை
5 அஞ்ஞா னம்பொய் அயர்வே மோகம்
§மைஞ்ஞால சூனியம் மாச்சரி யம்பயம்
ஆயவேழ் குணனும் மாயைக் கருளினை
இருத்தலுங் கிடத்தலும் இருவினை யியற்றலும்

† 'ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே' என்னும் திருத்தாண்டகம். ‡ 'ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும்' என்னுந் திருப்பாசுரம். § பைசாசூந்நியம்.

விடுத்தலும் பரநிந்தை மேவலென் †றடுத்த
10 அறுவகைக் குணனும் கருமத் தருளினே
ஆங்கவை தாமும் நீங்காது நின்று
தம்வழிச் செலுத்தித் தாமே தாமாய்
என்வழி யென்பதொன் றின்றும் மன்ன
ஊரும் பேரும் உருவுங் கொண்டென்
15 ஊரும் பேரும் உருவுங் கெடுத்த
பெண்ணை சூழ்ந்த வெண்ணையம் பதியில்
சைவ சிகாமணி மெய்யர் மெய்ய
மும்மலஞ் சடமென மொழிந்தனை அம்ம
மாறுகோள் கூறல் போலும் தேறும்
20 சடஞ்செய லதனைச் சார்ந்திடு மெனினே
கடம்படு மதனுள் கண்டிலம் விடம்படும்
ஊன்திரள் போன்ற தாயின் தோன்றி
யணைந்தாங் கதறல் வேண்டும் குணங்களும்
பன்மையின் றுகும் எம்மைவந் தணைதரத்
25 தானே ‡ மாட்டாது யானே செய்கிலன்
* நீயோ செய்யாய் நின்மல னுயிட்(டு)
இயல்பெனில் §போகா தென்றும் மயல்கெடப்
பந்தம் வந்த வாறிங்(கு)
அந்த மாதி யில்லாய் அருளே. 4

---

† எடுத்த. ‡ மாட்டா. * சிவஞான சுவாமிகள் சிவஞான போதம் 2-ம் சூ. 1·வது அதிகரண வுரையில் இவ்வடியை எடுத்தாண்டிருக்கிறார்கள். § போகா.

## சிவஞானம் வந்தபின் எதிர்மறை முகத்தால் மலவுண்மை அறியப்படும்

அருள்முன்பு நில்லா தடியேற்குக் கண்ணின்(று)
இருள்கண்ட வாறென்கொல் எந்தாய்—
[மருள்கொண்ட
மாலையா வெண்ணெவாழ் மன்னவா என்னுடயை
மாலையா மாற்ற மதி. 5

## உயிர் சார்ந்ததன் வண்ணமாய் வசித்திட வரும் வியாபி

மதிநுதல் பாக னாகிக் கதிதர
வெண்ணைத் தோன்றி நண்ணியுள் புகுந்தென்
உளம்வெளி செய்துன் அளவில் காட்சி
காட்டிஎற் காட்டினை எனினும் நாட்டிஎன்
5 நுண்மையும் †பருமையும் நுவலின் அண்ணல்
பாதாள சத்தி பரியந்த மாக
ஓதி யுணர்ந்த யானே ஏக
முழுத்தும்நின் றனனே முதல்வ முழுத்தும்
புலன்கடைப் பூழை நுழைந்தனன் கலங்கி
10 ஆங்கைந் தவத்தையும் அடைந்தனன் நீங்கிப்
போக்கு வரவு புரிந்தனன் தூக்கி
எவ்விடத் துண்மையும் இவ்விடத் தார்தலும்
செல்லிடத் தெய்தலுந் தெரித்த மூன்றினுள்
ஒன்றெனக் கருளல் வேண்டும் என்றும்

† பெருமையும்.

15 இல்ல திலதாய் உள்ள துளதெனும்
சொல்லே சொல்லாய்ச் சொல்லுங் காலைச்
சிறுத்தலும் பெருத்தலும் இலவே ‡ நிறுத்திய
யானை யெறும்பி ஞனது போலெனின்
ஞான மன்றவை காய வாழ்க்கை
20 மற்றவை யடைந்தன வுளவெனின் அற்றன்று
விட்ட குறையின் அறிந்து தொன்று
தொட்டுவந் தனவென வேண்டும் நட்ட
பெரியதில் பெருமையும் சிறியதிற் சிறுமையும்
உரியது நினக்கே உண்மை பெரியோய்
25 எனக்கின் ளுகும் என்றும்
மனக்கினி யாயினி மற்றது மொழியே. 6

**நனவில்நின்றுகருதி உணரப்படும் பிறஅவத்தைகள்**

மொழிந்த அவத்தை முதலடியேன் நின்ருங்(கு)
ஒழிந்தன நான்கும் உணர— இழிந்தறிந்(து)
ஏறிற்றிங் கில்லை எழில்வெண்ணை மெய்த்தேவே
தேறிற்றென் கொண்டு தெரித்து. 7

**சிவஞானம் பெற்றபின் உன் வியாபகம் அனுபவப்பட்டது**

தெரித்ததென் கொண்டெனை உருத்திர பசுபதி
செடிய னேனையும் அடிமை செய்யப்

‡ நிறுத்தி.

படிவங் கொண்டு வடிவுகாட் டில்லாப்
பெண்ணை யாளும் வெண்ணை மெய்ய
5 அவத்தையிற் றெரித்தன ளுயின் அவத்தை
தெரிந்தாங் கிரித்தலு மிலனே திருத்தும்
காலம் முதலிய கருவி யாயின்
மாலும் பிரமனும் வந்தெனை யடையார்
ஓதுங் காலை ஒன்றையொன் றுணரா
10 சேதந மன்றவை பேதைச் செயல்இச்
சேதந வானும் செயல்கொள வேண்டும்நற்
போத மவற்றைப் புணர்வதை யறியேன்
கருவித் திரளினும் காண்பதோ ரொன்றும்
ஒருவுத லறியேன் உணர்வில ளுதலின்
15 நிற்கொடு கண்டனெ ளுயின் எற்குக்
கருவீ யாயினை பெருமையு மிலவே
யானே பிரமம் கோனே வேண்டா
இன்னுங் கேண்மோ மன்ன நின்னின்
‡ முன்ன மென்றன் உணர்வில ளுதலின்
20 என்னைக் காண்பினுங் காண்பல காணு(து)
உன்னைக் காண்பினும் காண்பல உன்னோ(டு)
ஒருங்கு காண்பினுங் காண்பல அருந்துணை
கண்டவா றேதெனது கண்ணே
அண்ட வாண அருட்பெருங் கடலே. 8

---

‡ இவ்வடி பிழைபட்டிருத்தலின் பொருளமைதியில்லை.

**கேவலத்தில் அறியப்படுவது மூலப் பகுதியின் அவிச்சை, உடம்பு, மாயை என்னும் தத்துவம்; உணர்த்துவது சிவம் என்னும் சுத்ததத்துவம்**

கடலமுதே வெண்ணெக் கரும்பேயென் கண்ணே
உடலகத்து மூலத் தொடுங்கச் — சடலக்
கருவியா தாங்குணர்த்தக் காண்பதுதான் என்னை
மருவியா தென்றுரைக்க மன்.

**உயிரின்கண் உள்ளமுதல்வன்துணை அதுமறத்தல் கூடாது**

மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை
அன்னிய மாக்கி அருள்வழி யதனுல்
என்னுள் புகுந்தனை யெனினே முன்னைத்
திரிமலந் தீர்த்த தேசிக நின்னே(டு)
5 ஒருவுத லின்றி யுடந்தையே யாகும்
பெருநிலை யாகல் வேண்டும் மருவிடும்
மும்மல மதனுல் * எம்முள்நின் றிலையெனின்
அம்மலத் திரிவுஞ் செம்மலர்த் தாள்நிழல்
சேர்தலு மிலவாய்ச் சார்பவை பற்றிப்
10 பேர்வில ஞகும் பெரும தீர்வின்(று)
அமைந்த கருமத் தியைந்தவை யல்லது
சமைந்தன விலவெனச் சாற்றின் அமைந்த
மாயேயங் கன்ம மாமல மூன்றும்
மாயா தாகவே யார்ச்சச மாயையின்

* எம்முனின்றிலை என்பதும் பாடம்.

15 உற்பவந் தீரா வொழுகுமொன் ரெுன்றி
னிற்சம மாயி னல்லது நிற்பெறல்
இல்லென மொழிந்த தொல்லறந் தனக்கும்
ஏயா தாகும் நாயே னுளத்து
நின்றனை யென்பனோ நின்றிலை யென்பனோ
20 பொன்றிய பொன்றிற் றிலமல மென்பனோ
ஒன்றினை உரைத்தருள் மன்ற குன்ருப்
பெண்ணைப் புனல்வயல் வெண்ணைக் கதிபதி
கைகண் தலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண் டென்வினை வேரறப் பறித்த
25 மெய்கண்ட † தேவ வினையிலி
மைகொண்ட கண்ட வழுவிலென் மதியே. 10

உலைவில் அரன்கழலை உன்ன மலசத்தி
மெலிந்து தேயும்

மதிநின்பா லிந்த மலத்தின்பால் நிற்க
விதியென்கொல் வெண்ணைவாழ் மெய்ய—
[பதிநின்பால்
வந்தா லிதில்வரத்தில் வந்திரண்டும் பற்றுகிலேன்
எந்தாய் இரண்டாமா றென். 11

ஆன்மா முதல்வனை உணர்தலும் மறத்தலும்
கூடுதலும் பிரிதலுமாம்

எண்டிசை விளங்க இருட்படாம் போக்கி
முண்டக மலர்த்தி மூதறி வருளும்

† தேவே.

மேதினி யுதய மெய்கண்ட தேவ
கோதில் அமுத குணப்பெருங் குன்ற
5 என்னி ஞர்தலும் அகறலும் என்னைகொல்
‡ உன்னி லுன்னி யுஞுவிடிற் பெயர்குவம்
என்னு மதுவே நின்னியல் பெனினே
வியங்கோ ளாளனு மாகி இயங்கலு
முண்டெனப் படுவை எண்தோள் முக்கண்
10 யாங்கணும் பிரியா தோங்குநின் நிலையின்
யான்வந் தணைந்து மீள்குவ ஞயின்
ஆற்றுத்துய ருற்றோர் அணி*நிழல் நசைஇ
வீற்றுவீற் றெழுதர வேண்டலும் வெறுத்தலும்
இன்றச் சாயைக்கு நன்றுமன் னியல்பே
15 அனையை யாகுவை நினைவருங் காலை
இந்நிலை யதனின் ஏழையேற் கிரங்கி
நின்னை வெளிப்படுத் தொளிப்பை நீயேல்
அருள்மா ருகும் பெருமஅஃ தன்றியும்
நிற்பெற் றவர்க்கும் உற்பவ முண்டெனுஞ்
20 சொற்பெறும் அஃதித் தொல்லுல கில்லை
அவ்வவ் வமைவுஞ் † சால்பும் மயர்வறச்
சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே.

---

‡ திருநா. தேவாரம். 'உன்னிற்றுன்னி' * நிழலசைஇ.
† சோர்வு (வியாப்பியம்?)

### ஞானிகளின் உடம்பு ஆயன் கோல்மரம் போலப் பயன்படினும் மேலும் வளராது

இறந்தோய் கரணங்க ளெல்லாம் எனக்குச்
சிறந்தோ யெனினுமெய்த் தேவே—பிறந்துடனுங்
காயங் கொளவுங் கொளாமலும் கண்டதுநீ
ஆயன்கோல் பாதவத் தற்று. 13

### நூல்வழிநின்று அருள்வழி நில்லாமை பந்தமே; பிற்செயாது நுகர்வதும் இன்று

அற்றதென் பாசம் உற்றதுன் கழலே
அருட்டுறை யுறையும் பொருட்சுவை நாத
வேறென் றிருந்த என்னை யான்பெற
வேறின்மை கண்ட மெய்கண்ட தேவ
5 இருவினை யென்ப தென்னைகொல் அருளிய
மனமே காயம் வாக்கெனும் மூன்றின்
இதமே அசிதம் எனுமிவை யாயின்
கணத்திடை யழிவுந் தினைத்துணை யாகா
காரணஞ் சடமதன் காரியம் அஃதால்
10 ஆரணங் காம்வழி யடியேற் கென்னைகொல்
செயலென தாயினுஞ் செயலே வாரா(து)
இயமன் செய்தி யிதற்கெனின் அமைவும்
பின்னையின் றுகும் அன்னது மிங்குச்
செய்திக் குள்ள செயலவை அருத்தின்
15 ‡ மையல்தீர் இயமற்கு வழக்கிலை மன்ன

‡ மையலிரி யமற்கு.

ஒருவரே யமையும் ஒருவா † வொறுவற்(கு)
இருவரும் வேண்டா இறைவனும் நின்றனை
நின்னது கருணை சொல்லள வின்றே
அமைத்தது துய்ப்பின் எமக்கணை வின்றும்
20 உள்ளது போகா தில்லது வாரா(து)
உள்ளதே யுள்ள தெனுமுரை யதனுற்
கொள்ளும் வகையாற் * கொளுத்திடு மாயின்
வள்ளன் மையெலாம் உள்ளிட வமையும்
ஈய வேண்டு மெனும்விதி யின்றும்
25 ஆயினும் என்னை அருந்துயர்ப் படுத்த
$ நாயி னேற்கு நன்றுமன் மாயக்
கருமமுங் கரும பந்தமும்
தெருள அருளுஞ் சிவபெரு மானே. 14

### வினைப்பயனை உயிர்க்கு முதல்வனே சேர்ப்பன்

மானமருஞ் செங்கை மதில்வெண்ணை வாழ்மன்ன
போனவினை தானே பொருந்துமோ — யானதனில்
ஆவனே ஆக்காய் அமலனும் நின்னருள்தான்
தேவனே யாதுக்கோ தேர். 15

### முத்தர் வினையை முதல்வனே ஏன்று கொண்டு அருள்வன்

தேரா துரைப்பன் தெருமர லுளத்தொடு
பேரா தருளுதல் பெரியோர் கடனே
நின்னைக் கலப்ப தென்னுண் மையெனின்
நின்னது நேர்மை சொல்மனத் தின்றே

---

† ஒருவற்கு. * கொடுத்திடும் $ (படுத்த) நாயினேற்கு.

5 எழுவகைத் தா துவின் எழுதுளே யிரண்டும்
பெருமுழைக் குரம்பையிற் பெய்தகத் தடக்கி
நீக்கி என்றனேப் போக்கற நிறுத்தி
இச்சை முதலிய எழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்பது நிற்க
10 வாக்கும் மனமும் போக்குள தநுவும்
சொல்லும் நினேவும் செய்யுஞ் செயலும்
நல்லவுந் தீயவும் எல்லா மறிந்து
முறைபிற ழாமற் குறைவுநிறை வின்றாய்க்
காலமுந் தேசமும் மாலற வகுத்து
15 † நடுவுநின் றருத்தலின் நடுவணு குதியே
சான்றோர் செய்தி மான்றிருப் பின்றே
சாலார் செயலே மாலா குவதே
அத்துவா மெத்தி அடங்கா வினேகளுஞ்
சுத்திசெய் தனேயே ஒத்தகன் மத்திடை
20 ‡ நீங்கின என்னே ஊங்கூழ் வினேகளும்
ஆங்கவை அருத்துவ தாரைகொல் அதனுற்
கரும மருத்துங் கடனது இன்றாம்
தருமம் புரத்தல் பெருமைய தன்றே
கண்ணினுள் மணிய கருத்தினுட் கருத்த
25 வெண்ணெ வேந்த மெய்கண்ட தேவ
இடர்ப்படு குரம்பையுள் இருத்தித்
துடைப்பதில் லாஅருள் தோன்றிடச் சொல்லே.

---

† நடுவுள். ‡ நீங்கினது.

**சங்கரன் சார்ந்தவர்க்கலால் நலமிலன்**

சொற்றெழும்பு கொள்ளநீ $ சூழ்ந்ததுவும்
[நற்செயல்கள்
மற்றவர்கள்நின்நோக்கின் மாய்ந்தவுயிர்க்—
[குற்றங்(கு)
* ஒளித்ததியாங் கைய உயர்வெண்ணெய் நல்லூர்க்
குளித்தமதுக் கொன்றையங் கோ. 17

**முதல்வன் பெத்தத்தில் உயிர்களின் பின்னும்**
**முத்தியின் முன்னும் நின்றருள்வன்**

கோலங் கொண்ட வாறுண ராதே
ஞாலங் காவலன் யானெனக் கொளீஇப்
பொய்யை மெய்யெனப் புகன்று வையத்(து)
ஓடாப் பூட்கை நாடி நாடா
5 என்னுட் கரந்தென் பின்வந் தருளி
என்னையுந் தன்னையும் அறிவின் றியற்றும்
என்னது யானெனும் அகந்தையுங் கண்டு
யாவர் யாவையும் யாங்கணுஞ் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்ந்துழிப் பெயர்ந்து
10 மிக்க போகம் விதியால் விளைத்திட்(டு)
எற்பணி யாளாய் எனைப்பிரி யாதே
ஓடி மீள்கென ஆடல் பார்த்திட்(டு)
என்வழி நின்றனன் எந்தை அன்றே
அருள்மிக வுடைமையின் அருட்டுறை வந்து

$ சூழ்ந்ததுவுநிற் செயல்கண். * ஒளித்தி.

15 பொருள்மிக அருள்தலும் பொய்ப்பகை
[யாதலும்
கைகண்டு கொள்ளெனக் கடலுல கறிய
மெய்கண்ட தேவன் எனப்பெயர் விரீஇத்
தன்னுட் கரந்து தான்முன் னுகித்
தன்னதுந் தானுமாய் என்னையின் றுக்கித்
20 ‡ தன்னையும் என்னையுந் தந்து
தனதுசெய் யாமையும் எனதுசெய லின்மையும்
எம்மான் காட்டி யெய்தல்
அம்மா எனக்கே அதிசயந் தருமே. 18

### முதல்வனே உயிர்களைப் பிறவிக் கடலினின்று எடுத்தாள்வோன்

தருமா தருமத் தலைநின்றுழ் வேணைக்
கருமா கடல்விடமுண் கண்டப்—பெருமான்
திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேத வனத்தான்
உருவென்ன வந்தெடுத்தான் உற்று. 19

### சித்தாந்த முத்தியின் இயல்பு

உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்
அற்றவர்க் கற்றவன் அல்லவர்க் கல்லவன்
அந்தம் ஆதி இல்லவன் வந்து
குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
5 பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்(டு)

---

‡ இவ்வடியில்ஒருசீர் இல்லை. (பா. 13 – 14 பார்க்க.)

இருள்வெளி யாகும் மருளினை யறுத்து
வந்து புகுதலும் சென்று நீங்கலும்
இன்றி ஒன்ருய் நின்றஅந் நிலையில்
ஒன்ரு காமல் இரண்டா காமல்
10 ஒன்று மிரண்டும் இன்ரு மாமல்
தன்னது பெருமை தாக்கா ஞயினும்
என்னது பெருமை யெல்லா மெய்தித்
தன்னை எனக்குத் தருவதை யன்றியும்
என்னையும் எனக்கே தந்து தன்னது
15 பேரா னந்தப் பெருங்கட லதனுள்
ஆரா இன்ப மளித்துத் தீரா
உள்ளும் புறம்பும் ஒழிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி யருளிய
மன்னன் எங்கோன் வார்புனற் பெண்ணை
20 வெண்ணை காவலன் மெய்கண்ட தேவன்
அண்ணல் அருளா லயத்தன் நண்ணிய
மலமுத லாயின மாய்க்கும்
உலக உயிர்க்கெல் லாமொரு கண்ணே. 20

இருபாவிருபஃது

முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

திருவதிகை மனவாசகங்கடந்தார்

அருளிச்செய்த

# உண்மை விளக்கம்

## காப்பு

வண்மைதரும் ஆகமநூல் வைத்தபொருள்வழுவா
உண்மைவிளக்கம் உரைசெய்யத்—திண்மதஞ்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள்வைப் பாம். 1

## மாணவர் விண்ணப்பம்

பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதாநந் தப் [பொருளா
மெய்காட்டு மெய்கண்டாய் விண்ணப்பம் — [பொய்காட்டா
மெய்யா திருவெண்ணெ வித்தகா சுத்தவினு
ஐயாநீ தான்கேட் டருள். 2

## வினுக்கள்

ஆருறு தத்துவமே தாணவமே தன்றேதான்
மாரு வினையேது மற்றிவற்றின் — வேருகா
நானேது நீயேது நாதனட மஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று. 3

## ஆசிரியர் உடன்பாடு

உள்ளபடி யித்தை யுரைக்கக்கேள் உன்றனக்கு
வள்ளலரு ளாலன்று வாய்மலர்ந்து—தெள்ளியசீர்
ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆனந்த
யோக நிகழ்புதல்வா வுற்று.

**மாயை - மாபூதம். 5 - 10. ஆன்ம தத்துவம் 24.**

நாற்கோணம் பூமிபுனல் நண்ணுமதி யின்பாதி
ஏற்குமனல் முக்கோணம் எப்போதும் —ஆர்க்கும்
அறுகோணம் கால்வட்ட மாகாயம் ஆன்மா
உறுகாய் மாமிவற்ரு லுற்று. 5

பொன்பார் புனல்வெண்மை பொங்கு மனல் [சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்தூமம் — என்பார்
எழுத்து லவரயவப் பாராதிக் கென்றும்
அழுத்தமதாய் நிற்கு மது. 6

குறிகுலிசம் கோகன தங்கொள்சுவத்தி குன்ரு
வறுபுள்ளி யாரமுத விந்துப் — பிரிவின்றி
மண்புனல்தீக் கால்வான மன்னு மடைவேயென்
ருேண்புதல்வா ஆகமமோ தும். 7

பாராதி ஐந்துக்கும் பன்னுமதி தெய்வங்கள்
ஆரார் அயனுதி ஐவராம் — ஓரோர்
தொழிலவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுதல் [ஐந்தும்
பழுதறவே பண்ணுவர் காண் பார். 8

படைப்பன் அயனளிப்பன் பங்கயக்கண் மாயன்
துடைப்பன் உருத்திரனுஞ் சொல்லின் —
திடப்பெறவே
என்றுந் திரோபவிப்பர் ஈசர் சதாசிவரும்
அன்றே அநுக்கிரக ராம். 9

மண்கடின மாய்தரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமாம்
ஒண்கனல் சுட்டொன்று விக்கும் ஓவாமல் —
[வண்கால்
பரந்துசலித் துத்திரட்டும் பார்க்கிலா காயம்
நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து. 10

## ஐம்புலன் (தன்மாத்திரை)

உள்ளபடி மாபூத மோதினேம் உன்றனக்குக்
கள்ளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கின் —
[மெள்ளவே
ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்
ஆசைதரும் ஐம்புலனே யாம். 11

## ஞானேந்திரியம் 12 - 14

ஞானேந் திரியங்கள் நன்ரு வுரைக்கக்கேள்
ஊன மிகுபூதம் உற்றிடமா — வீனமாம்
சத்தா தியையறியும் தானம் செவிதோல்கண்
அத்தா லு மூக்கென் றறி. 12

வானிடமாய் நின்றுசெவி மன்னும் ஒலியதனை
ஈனமிகுந் தோல்கா விடமாக — ஊனப்
பரிசம் தனையறியும் பார்வையிற்கண் ணங்கி
விரவியுரு வம்காணு மே. 13

நன்ருக நீரிடமா நாவிரதம் தானறியும்
பொன்ரு மணமூக்கு பூவிடமா — நின்றறியும்
என்ருேது மன்றே இறையா கமம்இதனை
வென்ருர்சென் ருரின்ப வீடு. 14

## கன்மேந்திரியம் 15 - 16

கண்ணுதனுல் ஓதியிடுங் கன்மேந் திரியங்கள்
எண்ணும்வச ஞதிக் கிடமாக — நண்ணியிடும்
வாக்குப்பா தம்பாணி மன்னு குதமுபத்த
மாக்கருது நாலு மது. 15

வாக்காகா யம்மிடமா வந்துவச னிக்கும்கால்
போக்காரும் காற்றிடமாப் புல்கியனல் — ஏற்கும்
இடுங்கை குதம்நீ ரிடமா மலாதி
விடும்பா ரிடம்உபத்தம் விந்து. 16

## அந்தக்கரணம்

அந்தக் கரண மடைவே யுரைக்கக்கேள்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரஞ்—சிந்தையிவை
பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்தங்
குற்றதுசிந் திக்கும் உணர். 17

## வித்தியாத்துவம் 18-21

ஓதியிடு நாலாறு முற்ருன் மதத்துவமென்
ருதி அருள்நூல் அறையுங்காண் — தீதறவே
வித்தியா தத்துவங்க டம்மை விளம்பக்கேள்
உத்தமனே நன்ரு வுனக்கு; 18

கால நியதி கருதும் கலைவித்தை
யேலஅரா கம்புருட னேமாயை — மாலறவேழ்
சொன்னோம் அடைவாகச் சொன்னஇவைதம்
உன்னி யுரைக்கநாம் உற்று. [முண்மை 19

எல்லை பலம்புதுமை எப்போது நிச்சயித்தல்
அல்ல றருங்கிரியை யான்மாவுக் — கொல்லை
யறிவாசை யைம்புலனு மாரவருங் காலம்
குறியா மயக்கென்று கொள். 20

## சிவதத்துவம் 21-22

வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்
சுத்தமாந் தத்துவங்கள் சொல்லக்கேள் —
[ நித்தமாம்
சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவநற்
சத்திசிவம் காணவைகள் தாம். 21

சுத்தவித்தை ஞானமிகுந் தொன்மையா
[மீசுரந்தான்
அத்தன் தொழிலதிகம் ஆக்கியிடும் — ஒத்தலிவை
சாதாக்கிய மென்றும் சத்தி சிவகிரியை
ஆதார ஞானவுருவாம். 22

## ஆணவம் கன்மம்

ஆறாறு தத்துவமும் சொன்னோம் அடைவாக
மாறா மலமிரண்டும் வாசொல்லக் — கூறி
அறியாமை ஆணவம்நீ யானசுக துக்கம்
குறியா வினையென்று கொள். 23

## நான் (ஆன்மா) 24-27

ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
மாறு அருளால் வகுத்துரைத்தீர் — வேறாகா
என்னை யெனக்கறியக் காட்டீர் இவைகண்டேன்
உன்னரிய தேசிகரே உற்று. 24

நன்று வுரைக்கக்கேள் அல்லசித்தின் முன்னசித்திங்
கொன்றாது சித்தசித்தையோரா து—நின்றிவற்றை
அன்றே பகுத்தறிவ தான்மாவே என்றுமறை
குன்றாமல் ஓதும் குறித்து. 25

தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்றறியா
எத்தன்மை யென்னில் இயம்பக்கேள்— சுத்தமாம்
ஆறு சுவையும் அறியாவே தம்மைத்தாம்
கூறில் அவையிவைபோல் கொள். 26

ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை
வேறொருவன் கூறியிடும்மேன்மைபோல்—ஆறாறும்
ஒன்றொன்றாய் நாடியுணர்ந்து ஓதிலதில்
[உற்றறிவாய்
நின்றபொருள் தானேகாண் நீ. 27

## நீ (சிவம்) 28-30

குன்று வருளாலே கூறினீர் என்வடிவும்
பொன்றாத நும்முருவம் போதியீர் —நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமா போலே உனதறிவில்
நண்ணியறி வித்திடுவோம் நாம். 28

அன்றியுங்கேள் ஆன்மாவால் ஆய்ந்தறியும்
[ஐம்பொறிகள்
இன்றி யறியா இவையென்ன — நின்றதுபோல்
ஓவாமல் உன்னை யுணர்த்துவோம் உன்னறிவில்
மேவாமல் மேவிநா மே. 29

அக்கரங்கட் கெல்லாம் அகரவுயிர் நின்றாற்போல்
மிக்க வுயிர்க்குயிராய் மேவினோம் — எக்கண்ணும்
நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமம்ஓதும் நாடு. 30

## நாதாந்த (பஞ்சாக்கர) நடனம் 31 - 40

நற்றவத்தோர் தாங்காண நாதாந்தத்
[தஞ்செழுத்தால்
உற்றுருவாய் நின்றாடல்உள்ளபடி — பெற்றிடநான்
விண்ணோர் பொழில்வெண்ணெ மெய்கண்ட நாதனே
தண்ணார் அருளாலே சாற்று. 31

## நடம் ஆடும் இடம், கருவி

எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் — சிட்டன்
சிவாயநம என்னுந் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான். 32

## ஊன நாடகம்

ஆடும் படிகேள்நல் லம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியி லேநகரம் — கூடும்
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார். 33

## ஞானநாடகம்

சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் — பாக்கிலிறைக்
கங்கி நகரம் அடிக்கீழ் முயலகனுர்
தங்கு மகரமது தான். 34

ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம் — ஆங்காரம்
அற்ரு ரறிவரணி அம்பலத்தான் ஆடலிது
பெற்ருர் பிறப்பற்ருர் பின். 35

## பஞ்சகிருத்திய தாண்டவம்

தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்கராம் — ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு. 36

## ஞானத்தின் ஞான நடனம்

மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து — நேயத்தால்
ஆநந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பரதம் தான். 37

மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடும் — ஆநந்த
மொண்டருந்த நின்ருடல்காணுமருள்மூர்த்தியாக்
கொண்டதிரு வம்பலத்தான் கூத்து. 38

பரையிடமா நின்றுமிகு பஞ்சாக்கரத்தால்
உரையுணர்வுக் கெட்டா வொருவன் — [வரைமகள்தான்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு. 39

ஐந்தெழுத்துண்மை

நாதாந்த நாடகத்தை நன்று அருள்செய்தீர்
ஓதீர் எழுத்தஞ்சு முள்ளபடி — தீதறவே
அஞ்செழுத்தீ தாகில் அழியுமெழுத் தாய்விடுமோ
தஞ்ச வருட்குருவே சாற்று. 40

உற்ற குறியழியும் ஓதுங்கால் பாடைகளிற்
சற்றும் பொருள் தான் சலியாது — மற்றதுகேள்
ஈசனருள் ஆவி எழிலார் திரோதமலம்
ஆசிலெழுத் தஞ்சின்அடை வாம். 41

சிவனரு ளாவி திரோதமல மைந்தும்
அவனெழுத் தஞ்சி னடைவாம் — இவனின்று
நம்முதலா வோதிலருள் நாடாது நாடுமருள்
சிம்முதலா வோது நீ சென்று. 42

அண்ணல் முதலா அழகார் எழுத்தைந்தும்
எண்ணில் இராப்பகலற் றின்பத்தே — நண்ணி
அருளா னதுசிவத்தே ஆக்கும் அணுவை
இருளா னதுதீர இன்று. 43

ஆதி மலமிரண்டும் ஆதியா ஓதினல்
சேதியா மும்மலமும் தீர்வாகா — போத
மதிப்பரிதாம் இன்பத்தே வாழலா மாறி
விதிப்படியோ தஞ்செழுத்து மே. 44

அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுராணமனைத்தும் —
[அஞ்செழுத்தே
ஆநந்த தாண்டவமும் யாவைக்கும் அப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும். 45

## முத்திநிலை யநுபவம்

முத்தி தனையடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின் — ஒத்த
விரதமணம் வெம்மை எழில்நாதம் போல
விரவுவர்என் றோதும் விதி. 46

தத்துவங்கள்எல்லாம் சகசமாய் ஆன்மாவிற்
பெத்தத்தி னிற்கின்ற பெற்றிபோல் —
[முத்திதனில்
சித்தமல மற்றார் செறிந்திடுவர் என்றுமறை
சத்தியமா வோதியிடுந் தான். 47

ஆதவன்றன் சந்நிதியில் ஐம்புலியி னார்சோதி
பேதமற நிற்கின்ற பொற்றிபோல் — நாதாந்தத்
தண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்தின்பக்
கண்ணில் அழுந்தியிடுங் காண். 48

சென் றிவன்றான் ஒன்றிற் சிவபூ ரணம்சிதையும்
அன்றவன்தான் ஒன்றுமெனில் அந்நியமாம் —
[இன்றிரண்டும்
மற்றநிலை யேதென்னில் ஆதித்தன் அந்தன்விழிக்
குற்றமற நின்றதுபோல் கொள். 49

## முப்பொருளும் முத்தியில் நிற்கும் முறைமை

வாக்கு மனமிறந்த வான்கருணை யாளனுருத்
தாக்கறவே நிற்கும் தனிமுதல்வா — நீக்காப்
பதியினைப் போல் நித்தம் பசுபாச மென்றாய்
கதியிடத்து மூன்றினையும் காட்டு. 50

முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
இன்பங் கொடுத்தல்இறை இத்தைவிளை
[வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொளப் பா. 51

## முத்திகாரணம்

அப்பாஇம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பாய் அருளாலே செப்பக்கேள் — ஒப்பில்
குருலிங்க வேடமெனக் கூறிலிவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண். 52

கற்றா மனம்போல் கசிந்துகசிந் தேயுருகி
யுற்றாசான் லிங்கம் உயர்வேடம் — பற்றாக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனில் நின்றிடுவர் பார். 53

## முத்திலாபம்

வாழ்ந்தேன் அருட்கடலே வற்றாப் பவக்கடலில்
வீழ்ந்தே அலையாமல் மேதினியில் — சூழ்ந்துவிடா
வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே
உண்மைத் தவப்பயனே யுற்று. 54

## நூலாசிரியரும் முதனூலும்

மன்னதிகை வாழு மனவா சகங்கடந்தான்
மின்னனைய வாழ்விலுறு மெய்கண்டான் — [பன்மறைகள்
வண்மைதரும்ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மைவிளக் கம்செய்தா னுற்று. 55

உண்மை விளக்கம்

முற்றிற்று.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

கொற்றவன்குடி உமாபதிதேவ நாயனர்
அருளிச்செய்த

# சிவப்பிரகாசம்

---

## பாயிரம்

### காப்பு

ஒளியான திருமேனி உமிழ்தான மிகமேவு
களியார வருமானை கழல்நாளு மறவாமல்
அளியாளும் மலர்தூவும் அடியார்க ளுளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

### நடராசர் துதி

ஓங்கொளியாய் அருண்ஞான மூர்த்தி யாகி
உலகமெலாம் அளித்தருளும் உமையம்மை
தேங்கமழும் மலரிதழி திங்கள் கங்கை [காணத்
திகழரவம் வளர்சடைமேல் சேர வைத்து
நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்றுள்
நின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ் [செய்யும்
பூங்கழல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியினு முறவணங்கிப் போற்றல் [செய்வாம். 1

## சிவகாமியம்மை துதி

பரந்தபரா பரையாதி பரன திச்சை
பரஞானம் கிரியைபர போக ரூபம்
தருங்கருணை உருவாகி விசுத்தா சுத்தத்
தனுகரண புவனபோ கங்கள் தாங்க
விரிந்தவுபா தானங்கண் மேவி யொன்றாய்
விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்
தரந்தைகெட மணிமன்றுள் ஆடல் காணும்
அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். 2

## விநாயகர் துதி

நலந்தரல்நூ லிருந்தமிழின் செய்யுட் குற்றம்
நண்ணுமை இடையூறு நலியாமை கருதி
இலங்குமிரு குழையருகு பொருதுவரி சிதறி
இணைவேல்க ளிகழ்ந்தகயற் கண்ணியொடு [மிறைவன்
கலந்தருள வருமானை முகத்தான் மும்மைக்
கடமருவி யெனநிலவு கணபதியின் அருளால்
அலர்ந்துமது கரமுனிவர் பரவவளர் கமல
மனைதிரு வடியிணைகள் நினைதல் செய்வாம். 3

## முருகக்கடவுள் துதி

வளநிலவு குலவமரர் அதிபதியாய் நீல
மயிலேறி வருமீச னருள்ஞான மதலை
அளவில்பல கலையங்கம் ஆரணங்கள் உணர்ந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அண்ணல்விற லெண்ணு

உளமருவு சூரனுரம் எமதிடும்பை யோங்கல்
ஒன்றிரண்டு கூறுபட வொளிதிகழ்வேல்
களபமலி குறமகள்தன்மணிமுலைகள்கலந்த[உகந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம். 4

## சந்தான பரம்பரை

தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியா வெண்ணை
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாரு
விரவுபுகழ் அருணந்தி விறலார் செல்வத்
தாவிலருள் மறைஞான சம்பந்தர் இவரிச்
சந்தானத் தெமையாளும் தன்மை யோரே. 5

## குரு வணக்கம்

பார்திகழ வளர்சாம வேத மல்கப்
பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை யாண்ட
சைவசிகா மணிமருதைத் தலைவன் அந்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதின்மீதே மதியங்
கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையுங்
சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை[கடந்தைச்
திருவளரும் மலரடிகள் சென்னி வைப்பாம். 6

## நுதலிய பொருள்

### ( தொடக்கம் )

புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத்
[தொளியாய்ப்
புகல்அவைக் களவாகிப் பொற்பணிபோல்
[அபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமும் சொற்
[பொருள்போல்
பேதாபே தமும்இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனுல் விளைவதா யுடலுயிர்கண் ணருக்கன்
அறிவொளிபோல் பிறிவருமத் துவித மாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்கலுற்ரும். 7

### தீட்சாக்கிரமம்

மூவகையா ருயிர்வருக்க மலத்தார் கன்ம
மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமா மெனவுருவாய் வந்து நாதன்
திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்
பாவனையால் மிகுநூலா லியோகப் பண்பால்
பரவிவரு மவுத்திரியால் பாச நாச
மேவவரு ளுதவுமவுத் திரியிரண்டு திறனும்
வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே. 8

விரும்பியமந் திராதிகார மர்ச்சனு திகார
மேவுமியோ காதிகார மெனச்சமய விசேடம்
வரும்பொருவில் நிருவாண மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்

ளிரங்கடைவிற்ருெகைபதிஞென் றெண்பத்தொன்
[றைம்பத்தொன்
றிருநூற்ருே டிருபத்து நாலாரு றைந்திற்
பரந்தநெறி யறுவகையு மொருவிநினை வரிதாம்
பரபதத்து ளுயிர்விரவப் பயிற்று மன்றே. 9

## சிவஞானத்தின் சிறப்பும் வகையும்

கிரியையென மருவுமவை யாவும் ஞானங்
கிடைத்தற்குநிமித்தமெனக்கிளக்குமுண்மைச்
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கண்
மருவியிடு முயர்ஞான மிரண்டா மாரு
மலமகல வகலாது மன்னு போதத்
திருவருளொன் ருென்றதனைத் தெளிய வோதுஞ்
சிவாகமமென் றுலகறியச் செப்பும் நூலே. 10

## நூல்வழியும் நூற்பெயரும்

தெரித்தகுரு முதல்வருயர் சிவஞான போதஞ்
செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கள்திரு வடிகள் போற்றி
விளம்பிநூ லவையிரண்டும் விரும்பிநோக்கிக்
கருத்திலுறை திருவருளு மிறைவ னூலுங்
கலந்துபொது வுண்மையெனக் கருதி யானு
மருத்திமிக வுரைப்பன்வளர் விருத்த நூறு
மாசில்சிவப் பிரகாச மாகு ‡ மென்றே. 11

---

‡ "அன்றே" என்றது உரைப்பன் எனும் வினையைத் தழுவாது.

### அவையடக்கம்

தொன்மையவா மெனுமெவையு நன்ருகா வின்று
 தோன்றியநூ லெனுமெவையுந் தீதாகா
 [துணிந்த
நன்மையினுர் நலங்கொண்மணி பொதியுமதன்
 [களங்க
 நவையாகா தெனவுண்மை நயந்திடுவர்
 [நடுவாந்
தன்மையினுர் பழமையழ காராய்ந்து தரிப்பர்
 தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந்தறி
இன்மையினுர் பலர்புகழி லேத்துவரேதிலருற் [தல்
 றிகழ்ந்தனரே விகழ்ந்திடுவர் தமக்கென
 [வொன் றிலரே. 12

## பொது வதிகாரம்

### முதற் சூத்திரம்

### 1. பதி இயல்பு

பலகலையா கமவேத மியாவையினுங் கருத்துப்
 பதிபசுபா சந்தெரித்தல்பதிபாரமே யதுதான்
நிலவுமரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றி
 நின்மலமா யேகமாய் நித்த மாசி
யலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி
 யகண்டிதமா யானந்த வருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப்
 [பெரிதாய்த்
 திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே.

## முதல்வன் திருவுரு

நீடுபரா சத்திநிக ழிச்சா ஞான
நிறைகிரியை தரவதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு வுருவ மாகி
நவின்றுபல கலைநாத விந்து வாதி
கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்
கொடுவினைகொள் தனுகரண புவன போகம்
பீடுபெற நிறுவியவை யொடுக்கு மேனி
பிறங்கியநிட் களசகளப் பெற்றி யாமே. 14

ஈங்கிதுவென் றதுகடந்த வியல்பி னானும்
ஈறுமுத னடுவொன்று மிலாமை யானும்
ஓங்கிவளர் ஞானமய னாத லானும்
உண்மைபிறர்க் கறிவரிய வொருமை யானுந்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பு மெல்லாஞ்
சார்வரிய தனிமுதல்வ னாத லானும்
நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்ற லானும்
நிறுத்திடுவ னினைந்தவுரு நிமலன் றானே. 15

## முதல்வனது உண்மை

உலகமெலா மொருவனோ டொருத்தியொன்றென்
றுளதாகி நின்றளவி லொடுங்கும் பின்னு
மலமதனு லுளதாகு முருவ மாறி
வருவது†பேர் வதுசெல்வ தாத லானும்
மலைவிலசேத தனமாயை யாதலானு
மணுக்களுரு வடையுமறி விலாமை யானும்
நிலவுதொழின் மருவுயுரு நிற்ற லானும்
நின்றெவையு மளித்திடுவ னிமலன் றானே. 16

† போவது.

கந்தமல ரயன்படைக்கு முலக மெல்லாங்
கண்ணனளித் திடுமவையெங் கடவுள் தானே
யந்தமுற வழித்திடுவ னுத லாலே
யயனரியு மவனதுய ரதிகா ரத்து
வந்தமுறை தன்றொழிலே மன்னுவிப்ப னெல்லாம்
வருவிப்பன் விகாரங்கண் மருவான் வானின்
மூந்திரவி யெதிர்முளரியலாவுறுமொன்றலர்வான்
முகையாமொன் றென்றுலரு முறையி னுமே.

### உலகப் படைப்பின் பயன்

ஏற்றவிவை யரனருளின் றிருவிளையாட் டாக
வியம்புவர்க ளணுக்களிடர்க் கடனின்று
[மெடுத்தே
யூற்றமிக வருள்புரித லேது வாக
வுரைசெய்வ ரொடுக்கமிளைப் பொழித்தன்
[மற்றைத்
தோற்மல பாகம்வரக் காத்தல் போகந்
துய்ப்பித்த றிரோதாயி ‡ தகநிறுத்த லாகும்
போற்வரு மருளருளே யன்றி மற்றுப்
புகன்றவையு மருளொழியப் புகலொ ணுதே.

## இரண்டாம் சூத்திரம்

### 2. பசு வியல்பு

எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி னழுந்தி
யிருவினையின் றன்மைகளுக் கீடான யாக்கை
யண்ணலரு ளானண்ணி யவையவரா யதனுல்
அலகினிகழ் போகங்க ளருந்து மாற்றூற்

‡ தவ

புண்ணியபா வம்புரிந்துபோக்குவரவுடைத்தாய்ப்
புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா
லுண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத
முற்றிடுநற் பசுவருக்க மெனவுரைப்ப
[ருணர்ந்தோர். 19

## 3. பாச வியல்பு

### மலமும் திரோதானமும்

ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாயிரு ளொளிரவிருண்ட
மோகமாய்ச் செம்பிலுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்
பாகமாம் வகைநின்று † திரோதான சத்தி
பண்ணுதலான் மலமெனவும்பகர்வரதுபரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையா னடிக
ணணுகும்வகை கருணைமிக நயக்குந் தானே.

### சுத்தமாயையின் காரியம்

உன்னலரும் பரசிவன்ற னருளாலே நாத
முதிக்கு * மிருங் குடிலைதனில் விந்துவரு நாதந்
தன்னிலதி னெளிவள்ருஞ் சதாசிவரா மவரில்
தயங்கவரு மீசர்வித்தை தனையளிப்ப ரதனுள்
மன்னுவரிவ் வகையைவர் வாய்மையினுன் முன்னே
வந்திடுமென் றுரைசெய்த விந்துவழா
[வகையே
முன்னுதவுஞ் சூக்குமாதி யொருநான்கு மென்று
மொழிந்திடுவரருங்கலைகண்முதிர்ந்துளோரே.

---

† திரோதாயி. * மிகுங்.

### மாயையின் இயல்பு

உருவாதி சதுர்விதமா யொன்றென்றெவ்வா
வுண்மையதாய் நித்தமா யொன்று யென்று
மருவாகிக் † கன்மாந்த மணுக்களியார்க்கு
மாவார மாயசித்தா யசல மாகி
விரிவாய தன்செயலின் வியாபியா யெல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை
[யொடுங்கு
வருகால முயிர்களெல்லா மருவிடமாய் மலமாய
மன்னியிடு மரனருளான் மாயை தானே. 22

### மாயையின் உண்மை

என்னையிது வெனினுலகுக் குபாதான மில்லை
பிறைவனல தெனினசித்துச் சித்தினிடத்
[துதியா
மன்னியுள தேனமுதல்வ னெனகொ லென்னின்
மாயைதா னசித்துருவாய் மருவ மாட்டா
தன்னவனு மிதுவொழிய வாக்க மாட்டான்
அசத்தனு மெனினதுவு மவன்போ னித்த
முன்னவனவ் வசித்தைவிரித் தெவையு மாக்கு
முதன்மையது கொடுத்ததென மொழிந்தி
[டாரே. 23

### இருவினை உண்மை

படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப்
பண்ணியதென்முன்னைவினைப்பான்மையென்ப
ரடுத்தவினை யுளதாயி னிறையே னென்னில்
அசேதனமற் றவையாவிக் கமைந் தாகும்

---

† கன்மமார்.

எடுத்தவினை யுருவுறுவ துயிரேற் றூனே
யிருவினைக்குத் தக்கவுட லெய்து மென்னில்
சடத்திரளு மகர்த்தாவா யறிவொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே. 24

## மும்மலமும் அநாதி

அல்லன்மிசு வுயிர்க்கிவைதா னணைத்த தீசன்
அருவினைக ளருந்துதற்கோ வினையோ வன்றிச்
சொல்லிவரு மாயையோ வணுவை முந்தச்
சூழ்ந்ததெனு முரைமுதலோர் தொடக்கி
[லார்பால்
ஒல்லைவரு மெனினுளதா முயிருண் டாவே
யுளதுமல மலமுளதா வொழிந்த வெல்லாம்
நெல்லின்முளை தவிடுமிபோ லநாதி யாக
நிறுத்திடுவ ரிதுசைவ நிகழ்த்து மாறே. 25

## தத்துவங்களின் தோற்றமுறை

அருத்திமிகுங் கலைகால நியதியுடன் வித்தை
யராகமிவை யனந்தரான் மாயைதனி லாகும்
உருத்திரராற் கலையதனிற் பிரகிருதி குணங்கள்
உளவாகு மாங்காரம் புந்திதனி லுதிக்குந்
தெரித்தவிது திரிவிதமாந் தைசதம்வை காரி
திகழ்தருபூதாதியெனத்திருந்தியசாத்துவிதம்
விரித்தகுண மனம்புத்தி யிந்திரிய மென்று
விளம்பியசோத் திராதிமுதல் விளங்கியிடும்
[விரிந்தே. 26

மன்னியகன் மேந்திரிய மானவிரா சதஞ்சேர்
வாக்காதி வைகாரி மருவிவருஞ் சத்தந்
தன்னைமுத லாகியதா மதமிகுமாத் திரைபின்
தருமதனின்‡வானநில மனல்புனன்மண் சத்த
முன்னதனில் வெளியாதி யொன்றென் † ருக
முறையிலுறு மிருமையயன் முடிவா முன்னே
யுன்னுசதா சிவராதி யதிபதிக ளொடுக்க
முதித்தவடை வெனவுரைப்ப ருணர்ந்து
[ளோரே. 27

## கன்மத்தின் இயல்பு

நண்ணியிடு முருவதனுக் கேது வாகி
நானுபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரு மாதலால் அநாதி யாகிப்
பலவாகி யணுக்கடொறும் படர்வ தாகி
யெண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்று
மியல்பினதாய் மதிகதமா யிருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
பொருந்துமிது கன்மமலம் புகலு மாறே. 28

கன்மநெறி திரிவிதநற் சாதியாயுப் போகக்
கடனதெனவருமூன்றுமுயிரொன்றிற்கலத்தல்
தொன்மையதா ழல்லதுண வாகா கானுந்
தொடங்கடைவினடையாதேதோன்றுமாறித்
தன்மைதரு தெய்விகமுற் பௌதிகமான் மிகமாந்
தகையிலுறு மசேதனசே தனத்தாலுஞ் சாரு
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவணூ
ணுடிலத னூழ்வினையா நணுகுந் தானே. 29

‡ மிதனின், † ஆகும்.

மேலைக்கு வருவினையே தென்னி னங்கண்
விருப்புவெறுப் பெனவறியவ் விளைவு மெல்லா
மூலத்த வினைப்பயில்வா மென்னி னுமேன்
முற்றியதன் பயனுனக்கு முளைக்கு மென்பர்
ஞாலத்து வினைகளிரு திறனுகும் புந்தி
நண்ணுத வினைநணுகும் வினையெனவொன்
[றிரண்டா
யேலத்தா னிதமகித மாமிதனுல் வழுவா
தெய்தியிடும் புண்ணியபா வங்க ளென்றே.

உற்றதொழி னினைவுரையி னிருவினையு முளவாம்
ஒன்ருென்ரு லழியாதூனெழியா துன்னின்
மற்றவற்றி னெருவினைக்கோர் வினையால் வீடு
வைதிகசை வம்பகரு மரபி லாற்றப்
பற்றியது கழியுமிது வினையா லேற்கும்
பான்மையுமாம் பண்ணுதும் பலிக்கு முன்னஞ்
சொற்றருநூல் வழியின்வரின் மிகுதி சோருஞ்
சோராதங் கதுமேலைத் தொடர்ச்சி யாமே.

## ஐம்மலம்

மோகமிக வுயிர்கடொறு முடனுய் நிற்க
மூலவா ணவமொன்று முயங்கிநின்று
பாகமிக வுதவுதிரோ தாயி யொன்று
பகர்மாயை யொன்றுபடர் கன்ம மொன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரு மாமாயைத் திரட்சி யொன்றென்
றுகமல மைந்தென்ப ரைந்து மாரு
தருளென்ப தரிதென்ப ரறிந்து ளோரே. 32

## அவத்தை இயல்பு

### (i) கேவலாவத்தை

ஓங்கிவரும் பலவுயிர்கண் மூன்றவத்தை பற்றி
யுற்றிடும்கே வலசகல சுத்தமென வுணர்க
வீங்குவருங் கலாதியொடு குறியுருவ மொன்று
மின்றிமல மன்றியொன்று மில்லையெனு
[மியல்பா
†யாங்கறிவை யறிவரிதாய் அறிகருவி யணையா
வாதலினு லிருண்மருவுமலர்விழிபோலதுவாய்
நீங்கும்வகை யின்றி நித்த வியாபகமா யங்க
ணிற்பதுகே வலமென்று நிகழ்த்து நூலே. 33

### ஐக்கியவாதமதமும் மறுப்பும்

இன்மைமல மாயைகன்ம மென்றிரண்டே
[யிறைதான்
இலங்குபல வுயிர்களு முன்புரிந்தவிருவினையின்
தன்மைகளா லெவர்களுக்குந் தனுகரண புவனந்
தந்திடுமிங் கதனுலே யிருபயனுஞ் சார்ந்து
கன்மமெலா நேராக நேராதன் மருவக்
கடவுளரு ளாலெவையுங் கழித்திடுவ னதனுற்
பின்மலமா னவையணுகா பெருகொளிமுன்புளதே
பெற்றிடுமென் றித்திறமென் பேசு மாறே. 34

### மலத்தின் உண்மை

மாயைமுத லெனவினையின் பான்மைமுதலெனவே
மன்னுபனை விதைமரபின் மயங்குமலம்சுத்தற்
கேயுநெறி யென்கொலத னியல்பாயின் முத்தி
என்பதென்மற் றிவைநிற்க விருங்கலாதி
[யுணர்வாய்

---

† ஆங்கறிவை யறிவரிதா, யறிவரியன்.

மேய ‡ பினர்த் தன்னுருவம் விளங்காமை விளக்கு
மிகுமுலகந்த னிலென்னிலி வைவிடுங்கா
[லுணர்வுள்
தோயுநெறி யிலதாத லறியாமை யெனநீ
சொல்லியது மலமென்பர் துணிந்து ளோரே.

அந்நியமா னவையுணர்த்தி யநந்நியமாய்நிறைந்த
வறிவறியா மையினுனு மருணிலவுங் காலந்
தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானுமுயிர் தானெனவொன்
[றிலதாய்
மன்னியிடு மலமாயை கன்மங்கண் மாறி
வந்திடுமிங் கிதுவழுவா தாதலினுன்
[மனத்தால்
உன்னரிய திருவருளை யொழியமல முளதென்
றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா
[முனக்கே. 36

(ii) சகலாவத்தை

மலமும் மாயையும் முரணுவன:

நால்வகை வாக்குக்கள்

புகலுமல மொழித்தற்குக் கலாதிமுதன் மாயை
பொருந்தியிடு மரனருளாற் போதந் தீபஞ்
சகலமெலா முடனுய வாறு போலுந்
தருமருளை மலமுயிர்கள் சாராமன் மறைக்கு
மிகலிவரு மியையுணரி னிருள்வெளியாந் தன்மை
எய்தும்†வகை தன்செய்தி யிலங்கும் விந்து
பகர்வரிய வுணர்வாகி யொளியா யுள்ளப்
பான்மையினல் ஒருநாதம் படரும் தானே. 37

---

‡ பினற்றன், † இவைதஞ்.

வந்தடைந்து பின்னமாய் வன்னங்கள் தோற்றம்
வருமடைவு படவொடுக்கி மயிலண்ட சலநேர்
சிந்தைதனி லுணர்வாகும் பைசந்தி யுயிரிற்
சேர்ந்துவரு மவைமருவு முருவெவையுந் [தெரித்து
முந்தியிடுஞ் செவியிலுரு துள்ளணர்வா யோசை
முழங்கியிடுமத்திமைதான்வைகரியிலுதானன்
பந்தமுறு முயிரணைந்து வந்தமொழி செவியின்
பாலணைய நினைந்தபொருள் பகருந் தானே.

வாக்குக்களால் சவிகற்ப உணர்வு உண்டாதலும் தத்துவங்களின் தொழிலும்

இத்தகைமை இறையருளால் உயிரறியும் அறிவுக்
கீடாக வாடாதே † யீரிரண்டா னுரைத்த
வித்தைமுத லைவரான் விளங்கு ஞான
மேவியிடு மெனவுரைப்ப ரசுத்த மாயை
வைத்தகலை தான்மூல மலஞ்சிறிதே நீக்கி
மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் [பயனைப்
புத்திதர வித்தையிடை நின்றறிவை யுயிர்க்குப்
பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி [புணர்ந்தே. 39

பேசரிய வராகந்தன் கன்மத்துக் கீடாப்
பெற்றதனி லாசைதனைப் பெருகுவிக்கு நியதி
தேசமிகு மரசர்தரு மாணை செய்தி
செய்தவரைத் துய்ப்பிக்குஞ் செய்கை ‡ போல

† ஈரிரண்டிலு, ‡ செய்தி.

நேசமுறு தங்கன்ம நிச்சயித்து நிறுத்து
நிகழ்காலங் கழிகால மெதிர்கால மென்றே
யோசைதர வருங்கால மெல்லைபலம் புதுமை
யுறுவிக்கு மிறைசத்தி யுடனாய் நின்றே. 40

†ஐவகையா லுறுபயன்க ளுகரவருங் கால
மதுபுருட தத்துவமென் றறைந்திடுவ [ரறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனினிதற்குஞ் சுத்தி
மேவியிடும் வகைதானும் விரும்பியநூல் [விளம்புஞ்
செய்வகையின் றொடர்ச்சியிங்குத் தோற்றுவிக்குங் [குணத்தின்
சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமா மவைதா
மிவ்வகையிற் சாத்துவித ராசததா மதமா
இயம்புவர்க ளொன்றிரண்டு ‡குண்மேற்கை [யுடைத்தே. 41

அல்கில்குணம் பிரகாசம் லகுதைவியா விருத்தி
யடர்ச்சிமிகுஞ் *கவுரவம நியமமிவையடைவே
நிலவியிடு மும்மூன்று முயிரொன்றிற் கலந்தே
நிற்குமிவை நிறைபுலனின் பயனெவையுங் [கவருங்

---

† ஐவகையால். ‡ இயற்கையு; ஏற்கவுடைத்தே.
* கவுரவம் நியமம் இவைகள் அடைவே.

குலவிவரு ‡போகங்கொ ளிடமா மாருக்
குறைவிலொளி யாமலகில் புலனிடத்தி
[னொருமை
பலவகையு முடையதாய்ப் பரனருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்குந் தானே.

ஆனதனு வதனிலுறு மநிலனையு மியக்கி
யாங்கார நீங்காத வகந்தைக்கு வித்தா
யானலது பிறரொருவ ரெனையொப்பார் புவியி
னில்லையெனு மியல்பினதா யிந்திரியம்புலன்க
டானுகரு மளவிலதின் முந்தியுறு மிச்சை
தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியுந் தந்து
மானதமா னதுநிற்குஞ் சிந்தைநினை வையம்
வந்துதரு மனமொழிய வகுப்பொ ணுதே. 43

சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்
துண்டமிவை யைந்திற்குந் தொகுவிடய மாக
மன்னியசத் தப்பரிச ரூபரச கந்த
மருவியிடு மிவையடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவினே டுபத்தம்
பேசலுறு மைந்திற்கும் பிறங்கொவிகொள்
முன்னரிய கமனதா னவிசர்க்கா னந்த [வசன
முற்றதொழில் பெற்றிடுவ துண்மை யாமே.

முந்தியவைம் பூதங்கள் வானுதி யாக
முயங்கியநற் செவிமெய்கண் ணுநாசிமுறையா
லிந்தவயி னின்றுவரு மைம்புலனு முயிர்தா
மெய்தும்வகைதம்முருவினிலங்கியிடும்புறத்து

‡ போகங்கள்,

வந்தடைய விடங்கொடுக்கு மிரந்தரமாய் வானம்
வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டுந்தீ
[வெம்மை
தந்தவைசுட் டொன்றுவிக்கு நீர்குளிர்ந்து பதமே
தருமுரத்துத் தரிக்குமிகு தரணி தானே. 45

தத்துவங்களின் வகையும்
உயிர்கள் இறந்து பிறந்து வருமாறும்

இந்நிரையி லைந்துசுத்த மேழ்சுத்தா சுத்த
மெண்மூன்று மசுத்தமெனு மிவைமுப்பத்தாறு
மன்னியதத் துவங்களிடை மயங்கிநெடுந் துயர்தா
மருவுமுரு நிலையழிய வரும்பொழுது வரியார்
பன்னசுமண் டசங்கனவு படர்வகையே முன்னம்
பகரவருங் கலாதிநிலை பரவியசூக் குமமாந்
தன்னுருவி லணைந்துபய னருந்தியர னருளாற்
றரையினிடை வருமென்று சாற்று நூலே. 46

நால்வகைத் தோற்றம் முதலியன

தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற்
றுதைந்துவரு முற்பீசஞ் சராயுசங்க ளுன்கி
னூற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்று
மூர்வபதி னைந்தமரர் பதினென்றொ டுலவா
மாற்றருநீ ருறைவனநற் பறவைகளுற் காலி
மன்னியிடும் பப்பத்து மானுடரொன் பதுமா
வேற்றியொரு †தொகையதனி லியம்புவர்கள்
[யோனி
யெண்பத்து நான்குநூ றாயிரமென்றெடுத்தே.

---

† தொகையாக.

## (iii) சுத்தாவத்தை

இனையபல பிறவிகளி னிறந்துபிறந் தருளா
லிருவினைகள் புரிந்தருந்து மிதுசகலம் அகலா
முனமருவு மிருபயனு மொருகாலத் தருந்த
முந்துநுக ருந்துபய னந்தமுற வந்த
வினையுமெதிர் வினையுமுடி வினையுதவு பயனு
னேராக நேராதன் மேவுங் கான்முற்
சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே. 48

நாடியசத் திநிபாத நாலு பாத
நண்ணும்வகை யெண்ணரிய ஞான பாதங்
கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
கூத்தனொரு மூர்த்திகொடு குறுகி மோக
நீடியகே வலசகல நிகழா வாறு
நிறுத்திமல மறுக்குமிது நிலையார் சுத்தங்
கேடில் புகழ் தருஞ்சரியை கிரியா யோகக்
கேண்மையரே யிவையுணர்த்தக்கிளக்குநூலே

### முத்தி பேதங்கள்

அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்து
மறுமுத்தி திரிகுணமு மடங்கு முத்தி
விரவுவினை கெடுமுத்தி மலம்போ முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தியிவை பழிசேர் முத்தி
திரிமலமு மகலவுயி ரருள்சேர் முத்தி 50
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே.

# உண்மை அதிகாரம்

## இவ் வியலின் வகை

இங்கிவை பொதுவி யம்பு
மென்பர்க ளிதன்மேல் ஆன்மாத்
தங்கிய அஞ்சவத்தை
தன்னுண்மை உணர்த்துந் தன்மை
பொங்கொளி ஞான வாய்மை
அதன்பயன் புனித ஞம
மங்கதில் அணைந்தோர் தன்மை
யறைகுவ னருளி ஞலே. 51

## 1. ஆன்ம வியல்பு

செறிந்திடு முடலுண் மன்னிச்
சேர்புலன் வாயில்பற்றி
யறிந்ததி லழுந்து மொன்று
மறிந்திடா தறியுந்தன்மை
பிறிந்தடை வஞ்ச வத்தை
பெருகிய மலத்தாற்பேணி
யுறுந்தனி யதீத முண்மை
யுயிர்க்கென வுணர்த்துமன்றே. 52

உருவுணர் விலாமை யானு
மோரொரு புலன்களாக
மருவிநின் றறித லானு
மனுதிகள் தம்மின் மன்னித்

தருபய னுகர்த லானு
முயிர்சட மாத லானும்
அருவினை யுடலு ளாவி
யறிவினு லறியு மன்றே. 53

அறிவெனில் வாயில் வேண்டா
வன்றெனி லவைதாமென்னை
யறிவவை யுதவு மென்னி
லசேதன மவைதாமெல்லாம்
அறிபவ னறியுந் தன்மை
யருளுவ னென்னி லான்மா
வறிவில தாகு மீச
னசேதனத் தளித்தி டானே. 54

அறிவினு லறிந்த யாவு
மசத்தாத லறிதி யென்றும்
அறிவினு லறியொ ணுதே
லாவதொன்றின்மை தொன்மை
யறி வுதா னென்றை முந்தி
யதுவது வாகக் காணு
மறிவுகா ணசத்து மற்ற
தறிவினுக் கறியொணுதே. 55

எவ்வறி வசத்த றிந்த
தெனிலுயி ரறியா தீசன்
அவ்வறி வறியா னல்ல
தசேதன மறியா தாவி

செவ்விய கருவி † கூடில்
 தெரிவுரு தருளிற் சேரா
‡ துவ்விரு வகைய தென்னி
 லொளியிரு ளொருங்குறுவே. 56

சத்திது வென்ற சத்துத்
 தானறி யாத சத்தைத்
சத்தறிந் தகலவேண்டா
 வசத்திதுசத்தி தென்றோர்
சத்திரு ளொளிய லாக்கண்
 டன்மைய தாம சத்தைச்
சத்துட னின்று நீக்குந்
 தன்மையாற் சதசத்தாமே. 57

கண்ணொளி விளக்களித்துக்
 காட்டிடுமென்னின் முன்னங்
கண்ணொளி யொன்று மின்றும்
 விளக்கொளி கலந்த வற்றைக்
கண்ணொளி யகல நின்றே
 கண்டிடும் வேறு காணுக்
கண்ணொளி விளக்கின் சோதி
 கலந்திடுங் கருத்தொன் றன்றே. 58

* ஓரிடத் திருத்தன் மாயா
 வுருநிறைந் திடுத லொன்றும்
பேரிடத் துறைத ருனே
 பிறங்கறி வாகி நிற்றல்

† கூடித்தெரி. ‡ ஒவ்விரு. * பண்புத்தொகை.

சோர்வுடைச் சடநி கழ்த்த
லெனுமிவைசொல்லார் நல்லோ
‡ ரோரிடத் துணரு முண்மை
யொளிர்தரு முபலம் போலும். 59

## 2. அஞ்சவத்தையியல்பு

எண்ணவொன் றிலாத தீத
மெய்திய துரியத்தொன்று
நண்ணிடுஞ் சுழுத்தி தன்னில்
நயந்துள தொன்று பின்னு
மண்ணிடுங் *கனவு தன்னி
லாறேழாஞ் சாக்கிரத்திற்
கண்ணுறு மஞ்சா ருய
கருவிகள் §மருவுந் தானே. 60

இவ்வகை யவத்தை தன்னி
லெய்திடுங் கரணமெல்லா
மெய்வகை யிடத்தி லுற்று
மேவுமா கண்டு மிக்க
பொய்வகைப் பவம கற்றப்
புரிந்திடி லருளாலாங்கே
யைவகை யவத்தை யுய்க்குமறி
விஞலறிந்து கொள்ளே. 61

---

‡ விஞைத்தொகை. * கனவிலாறேழொன்பதாஞ்.
§ காணும்,

நீக்கமி லதீத மாசு
    நிறைந்தகே வலமா நீர்மை
சாக்கிரங் கலாதி சேர்ந்த
    சகலமாந் தன்மை யாகு
மூக்கமி லிரண்டுங் கூடா
    தொழியவோர் நிலையி னீடுஞ்
† சாக்கி ராதீதஞ் சுத்தத்
    தகைமைய தாகுந் தானே. 62

## 3. தன்னுண்மை உணர்த்துந் தன்மை

மருவிய பொறியி லொன்று
    மாபூத மைந்தி லொன்றுங்
கருவிக ளூன்கு நீங்காக்
    கலாதிக் ளைந்துங் கூடி
யொருபுல னுகரு மிந்த
    வொழுங்கொழிந் துயிரு மொன்றைத்
தெரிவுறு தவனெ ழிந்தத்
    திரள்களுஞ் செயலி லாவே. 63

தனக்கென வறிவி லாதான்
    றுனிவை யறிந்து சாரான்
‡ றனக்கென வறிவி லாத
    வாயிரு னறியா சாரத்

† சாக்கிரவதீதம். ‡ தனக்கறிவிலாத வாயில்தான் அறியாது சாரா.

தனக்கென வறிவி லாதான்
    தத்துவ வன்ன ரூபன்
தனக்கென வறிவா ஞலிச்
    சகலமு நுகருந் தானே. 64

## அவிகாரவாதம் சிவாத்துவிதம் என்பவற்றை மறுத்தல்

† கண்டுணர் புலன்கள் காணுங்
    கருத்திஞ லொருத்தன் ஞானங்
கொண்டுள மறியு மென்னிற்
    கொள்பவன் முதலி யாகு
மண்டிய வுணர்வு யிர்க்கா
    மன்னிநின் றறியுமென்னில்
உண்டிட வேண்டு வானுக்
    கொருவன்வே றுண்ட லாமே. 65

## சித்தாந்தம்

இருணனி யிரவி தான்வந்
    திரித்தலு மிரவி லெண்ணும்
பொருணிலை கண்டு மாந்தர்
    பொருந்திடு மாறு போல
மருணிலை யெங்கு நீங்க
    மகிழ்ந்துயிர் தன்னுண் மன்னு
மருளையு மொழிய ஞாலத்
    தறிந்தவா றறியு மன்றே. 66

---

† கண்டறி.

அறிந்திடு மனுதி வாயி
லானவை யவன்ற னுலே
யறிந்திடு மென்று மொன்று
மறிந்திடா வவைபோலி யாவும்
அறிந்திடு மறியுந் தன்மை
யறிந்திட கன்மத் தொன்மை
யறிந்தவை நுகரு மாறு
மருளுவ னமலன் றனே. 67

## 4. ஞான வாய்மை

காட்டிடுங் கரண மொன்று
மில்லையேற் காணெ ணுதா
‡ னுட்டிய வீவற்றுன் ஞான
நணுகவு மொண்ணு முன்னம்
ஈட்டிய தவத்தி னுலே
யிறையரு ளுருவாய் வந்து
கூட்டிடு மிவற்றை நீக்கிக்
குரைகழல் குறுகு மாறே. 68

பன்னிறங் கவருந் தொன்மைப்
படிகநீ டொளியும் பன்மை
மன்னிலங் கியல்புந் தந்த
வளரொளி போல வையந்
தன்னகம் பயிலு நற்சிற்
சடங்களின் றன்மை தாவா
நன்னலம் பெறநி றைந்த
ஞானமே ஞான மென்பர். 69

‡ நாட்டிய.

மாயைமா யேய மாயா
வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு
மருளெனி லிருளாய் நிற்கும்
மாயைமா யேய மாயா
வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு
மருளெனி லொளியாய் நிற்கும். 70

## 5. ஞானவாய்மையின் பயன்

தேசுற மருவு மான்ம
தெரிசன மான்ம சுத்தி
வாசிலா வான்ம லாப
மாகமூன் ருகு மூன்றும்
பாசம தகல ஞானம்
பற்றருன் பணியை நீத்தல்
ஏசினே யத்த ழுந்த
லெனுமிவற் றடங்கு மன்றே. 71

### (i) ஆன்ம தரிசனம்

தன்னறி வதனு லேதுந்
தனக்கறி வில்லை யேனுந்
தன்னறி வாக வெல்லாந்
தனித்தனி பயன ருந்துந்
தன்னறி வறியுந் தன்மை
தன்னுலே தனைய றிந்தாற்
தன்னையுந் தானே காணுந்
தானது வாகி நின்றே. 72

தத்துவ மான வற்றின்
தன்மைக ளுணருங் காலை
யுய்த்தறிந் திடவு திப்ப
தொளிவளர் ஞான மாகும்
அத்தன்மை யறியு மாறு
மகன்றிட வதுவா யான்மா
சுத்தமாஞ் சுத்த ஞானத்
தொருமுத ரோன்று மன்றே. 73

சத்தி சத்திமான் என்னும் இருமை

உறைதரு முணர்வு மன்றி
யதன்முத லுள்ள தென்றிங்
கறைவதெ னென்னி லண்ண
லருளெனு மதுவே யன்றி
நிறையொளி முதல தன்றி
நின்றிடா நிமல ளுகும்
இறையவன் முதல வன்ற
ணிலங்கருள் சத்தி யாமே. 74

சுத்தமாஞ் சத்தி ஞானச்
சுடராகுஞ் சிவமொ ழிந்தச்
சத்திதா னின்ரு முன்னைத்
தகவிலா மலங்கள் வாட்டி
யத்தனை யருளு மெங்கு
மடைந்திடு மிருள கற்றி
வைத்திடு மிரவி காட்டும்
வளரொளி போன்ம கிழ்ந்தே. 75

## (ii) ஆன்ம சுத்தி

### சிவசமவாத மறுப்பு

புகலரு மசத்தர் தம்பாற்
பொருந்திய வலகை யேபோல்
அகிலமு முணரு மீச
னருளுயிர் மேவ லாலே
சகலமு நிகழ வேண்டுந்
தலைவனைந் தொழிலுந் தானே
யிகலற வியற்றல் வேண்டு
மென்றது நன்றி யின்றே. 76

இன்றுநோக் குரை நடக்கு
மியல்பிலோற் கினைய வாய்ந்து
நின்றதோ ரலகை நேர்ந்தா
னிகழ்வதெ னதுபோ லுள்ளத்
தொான்றிய வுணர்வு தம்பா
லுள்ளது நிகழ்த்து மீசன்
தன்றொழி னடத்து மேனி
தனக்கெனக் கொண்டு தானே. 77

இந்நிலை தன்னின் மன்னி
யெய்திடுங் கலாதி போதந்
தன்னள வறிந்து நிற்குந்
தகவிலா மலங்க ணீத்த
வந்நிலை கரண மாகா
வகையதி லறிவ டங்கி
மன்னிய வியாபி யாய
வான்பயன் றேன்று மன்றே. 78

அடைபவர் சிவமே யாகு
மதுவன்றித் தோன்று மென்ற
கடனதெ னென்னின் முன்னுங்
கண்டிடார் தம்மைப் பின்னுந்
தொடர்வரு மருளி னாலுந்
தோன்றுமா காணா ராயின்
உடையவ னடிசேர் ஞானம்
உணர்தலின் றணைத லின்றே. 79

## (iii) ஆன்ம லாபம்

பொற்புறு கருவி யாவும்
புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து
தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பர மதனா லுள்ளச்
செயலறுத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல்
சாக்கிரா தீதந் தானே. 80

ஒடுங்கிடா கரணந் தாமே
யொடுங்குமா றுணர்ந்தொ டுக்க
வொடுங்கிடு மென்னி னின்ற
தொடுங்கிடா கரண மெல்லா
மொடுங்கிட வொடுங்க வுள்ள
வுணர்வுதா னெழியும் வேறா
யொடுங்கிடி னன்றி மற்றவ்
வுண்மையை யுணரொ ணாதே. 81

பற்றிடுங் கருவி யாவும்
படர்ந்துணர் வளிக்குங் காலை
யுற்றறிந் திடுவ தொன்றி
னுணர்வினி னுண்மை யாகு
மற்றது பகல்வி ளக்கின்
மாய்ந்திட வருவ துண்டேற்
பெற்றிடு மதனை மாயப்
பிறப்பினை யறுக்க லாமே. 82

முந்திய வொருமை யாலே
மொழிந்தவை கேட்டல் கேட்ட
சிந்தனை செய்த லுண்மை
தெளிந்திட லதுதா னுக
வந்தவா றெய்த நிட்டை
மருவுத லென்று நான்கா
மிந்தவா றடைந்தோர் முத்தி
யெய்திய வியல்பி னேரே. 83

பாசமா ஞானத் தாலும்
படர்பசு ஞானத் தாலும்
ஈசனை யுணர வொண்ணு
திறையருண் ஞான நண்ணின்
தேசுறு மதனுன் முன்னைச்
சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டுயர்ப ரத்து
நிற்பது ஞான நிட்டை. 84

## உபாய நிட்டை

விளம்பிய வகையி னிட்டை
மேவிட லரிதேன் முன்னம்
அளந்துணர் வளித்த வற்றி
னளவுமற் றவற்றி னூலே
யுளங்கொளுந் தனையு முள்ள
படியுமுற் றுணர்ந்து செவ்வே
தளர்ந்திடா துவப்ப மற்றத்
தன்மைய தாகுந் தானே. 85

பாவிக்கின் மனூதி வேண்டும்
பயனிலை கரண நீத்துப்
பாவிப்ப னென்னி லென்ன
பழுதுள பாவ கத்தாற்
பாவிக்க வொண்ணு னென்று
பாவிப்ப னென்னி னீயென்
பாவிக்க வேண்டா வாண்ட
பரனருள் பற்றி னோர்க்கே. 86

## பரமுத்தியின் இயல்பு

ஒன்றிரண் டாகி யொன்றி
னொருமையா மிருமை யாகி
யொன்றினொன் றழியு மொன்று
தென்னினொன் றாகா தீயி
னொன்றிரும் புறழி னின்று
முயிரினைந் தொழிலும் வேண்டு
மொன்றிநின் றுணரு முண்மைக்
குவமையா னவத்தொ டொன்றே. 87

### பாச நீக்கம்

அழிந்திடும் பாச மென்னி
னித்தமென் றுரைத்தல் வேண்டா
அழிந்திடா தென்னின் ஞான
மடைவது கருதல் வேண்டா
அழிந்திடுஞ் சத்தி நித்த
மழிந்திடா வொளியின் முன்னர்
அழிந்திடு மிருளு நாச
மடைந்திடா மிடைந்தி டாவே. 88

### வினை நீக்கம்

எல்லையில் பிறவி நல்கு
மிருவினை யெரிசேர் வித்தி
னெல்லையி னகலு மேன்ற
உடற்பழ வினைக ளூட்டுந்
தொல்லையின் வருதல் போலத்
தோன்றிரு வினைய துண்டேல்
அல்லொளி புரையு ஞானத்
தழலுற வழிந்து போமே. 89

## 6. புனித னுமம்

பந்தமா னவைய றுத்துப்
பவுதிக முழனு மெல்லைச்
சந்தியா தொழியா திங்குத்
தன்மைபோல் வினையுஞ் சாரும்

அந்தமா திகளில் லாத
வஞ்செழுத் தருளி ஞலே
வந்தவா றுரைசெய் வாரை
வாதியா பேதி யாவே. 90

திருவெழுத் தைந்தி லான்மாத்
திரோத மாசருள் சிவஞ்சூழ்
தரநடு நின்ற தொன்ருந்
தன்மையுந் தொன்மை யாகி
வருமந மிகுதி யாலே
வாசியி லாசை யின்றிக்
கருவழிச் சுழலு மாறுங்
காதலார்க் கோத லாமே. 91

ஆசறு திரோத மேவா
தகலுமா சிவமுன் ஞக
வோசைகொ ளதனி னம்மே
லொழித்தரு ளோங்கு மீள
வாசியை யருளு மாய†
மற்றது பற்று வுற்றங்
கீசனி லேக மாகு
மிதுதிரு வெழுத்தி னீடே. 92

---

† அகலுமா என்பதுபோல அருளுமா என்பதும். மகரம் ஆன்மா.

## ஞானத்தில் யோகம்

அண்டமே விடவ னைத்து
மனைத்தையு மண்ட மேவிக்
கொண்டல்போ லெவையு ஞானங்
குறைவிலா நிறைத் லாலே
கண்டதோர் பொருளை யந்தக்
கருத்தினுற் காணிற் றானே
யண்டநா யகனு மேனி
யானதே லைய மின்றே. 96

## ஞானத்திற் கிரியை

மண்முதற் கரணமெல்லா மறுவசத் தாக்கி ஞானக்
கண்ணினி லூன்றி யந்தக் கருத்தினு லெவையு
[நோக்கி
யெண்ணியஞ் செழுத்து மாறி யிறைநிறை
[வுணர்ந்துபோற்றல்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலு
[மன்றே. 97

## ஞானத்திற் சரியை

தொண்டர்கள் தாமும் வானோர் தொழுந்திரு
[மேனிதானும்
அண்டருங் கண்டி லாத வண்ணலே யெனவ ணங்கி
வெண்டர ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி
[னோரே. 98

## 7. அணைந்தோர் தன்மை

தீங்குறு மாயை சேரா
வகைவினை திரிவி தத்தா
னீங்கிட நீங்கா மூல
நிறையிரு ளிரிய நேயத்
தோங்குணர் வகத்த டங்கி
யுளத்துளின் பொடுங்க நேரே
தூங்குவர் தாங்கி யேகத்
தொன்மையிற் றுகளி லோரே. 93

குறிப்பிடங் காலத் திக்கா
சனங்கொள்கை குலங்கு ணஞ்சீர்
சிறப்புறு விரதஞ் சீலந்
தபஞ்செபந் தியான மெல்லா
மறுத்தற வொழிதல் செய்தன்
மருவிடா மன்னு செய்தி
யுறக்குறு பவர்போல் வாய்மை
யொழிந்தவை யொழிந்து போமே. 94

அகம்புற மென்றி ரண்டா
லருச்சனை புரியு மிந்தச்
சகந்தனி லிரண்டு மின்றித்
தமோமய மாகி யெல்லா
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழு
நீர்மையார் போல ஞானந்
திகழ்ந்தகம் புறமெ னுத
செம்மையார் நன்மை யாரே. 95

## ஞானத்தில் யோகம்

அண்டமே விடவ னைத்து
மனைத்தையு மண்ட மேவிக்
கொண்டல்போ லெவையு ஞானங்
குறைவிலா நிறைத் லாலே
கண்டதோர் பொருளை யந்தக்
கருத்தினாற் காணிற் றானே
யண்டநா யகனு மேனி
யானதே லைய மின்றே, 96

## ஞானத்திற் கிரியை

மண்முதற் கரணமெல்லா மறுவசத் தாக்கி ஞானக்
கண்ணினி லூன்றி யந்தக் கருத்தினு லெவையு
[நோக்கி
யெண்ணியஞ் செழுத்து மாறி யிறைநிறை
[வுணர்ந்துபோற்றல்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலு
[மன்றே. 97

## ஞானத்திற் சரியை

தொண்டர்கள் தாமும் வானோர் தொழுந்திரு
[மேனிதானும்
அண்டருங் கண்டி லாத வண்ணலே யெனவ ணங்கி
வெண்டர ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி
[னேரே. 98

## நூற்கருத்து

### (முடிவு)

நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்
குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி வேதத்
தலைதரு பொருளா யின்பாய்த் தாவில்சற் காரி
[யத்தாய்
மலைவறு முணர்வாற் பெத்த முத்திகண்மதித்தா
[மன்றே. 99

## நூலை உபதேசிக்குமாறு

திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச
[நன்னூல்
விரிவது தெளியு மாற்றல் விளம்பிய வேதுநோக்கிப்
பெருகிய வுவமை நான்கின் பெற்றியி னிறுவிப்பின்
தருமலை வொழியக் கொள்வோன் றன்வயிற் [முன்
[சாற்ற லாமே. 100

சிவப்பிரகாசம்

முற்றிற்று.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# உமாபதி தேவநாயனர்

அருளிச் செய்த

# திருவருட்பயன்

---

## கணபதி வணக்கம்

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

## 1. பதிமுதுநிலை

அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து. 1

தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான். 2

பெருமைக்கு நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கு மொப்பின்மை யான். 3

ஆக்கி யெவையு மளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல். 4

அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவு முடையா னுளன். 5

பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவன்
இல்லாதா னெங்க ளிறை. 6

ஆனு வறிவா யகலா னடியவர்க்கு
வானுடர் காணுத மன். 7

எங்கு மெவையு மெரியுறுநீர் போலேகந்
தங்குமவன் ருனே தனி. 8

நலமில னண்ணுர்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன் 9

*உன்னுமுள தைய மிலதுணர்வா யோவாது
மன்னுபவந் தீர்க்கு மருந்து. 10

## 2. உயிரவைநிலை

பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை. 11

திரிமலத்தா ரொன்றதனிற் சென்ருர்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர். 12

மூன்றுதிறத் துள்ளாரு மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை. 13

கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னே செயல். 14

---

* 'மணஞ்சேரி மருந்தினை உன்னுவார் வினையாயின ஓயும்' (அப்பர்)

பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற. 15

ஒளியு மிருளு முலகு மலர்கட்
டெளிவி லெனிலென் செய. 16

சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை
உய்த்தல்சத சத்தா முயிர். 17

இருளி லிருளாகி யெல்லிடத்தி னெல்லாம்
பொருள்க ளிலதோ புவி. 18

ஊமன்கண் போல வொளியு மிகவிருளே
யாமன்கண் காணு தவை. 19

அன்றளவு மாற்றுமுயி ரந்தோ வருடெரிவ
தென்றளவொன் றில்லா விடர். 20

## 3. இருண்மலநிலை

துன்றும் பவத்துயரு மின்புந் துணைப்பொருளும்
இன்றெனப தெவ்வாறு மில். 21

இருளான தன்றி யிலதெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள். 22

ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது. 23

அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி
இன்றளவு நின்ற திருள். 24

பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங்
†கணவர்க்குந் தோன்றாத கற்பு. 25

பன்மொழிக ளென்னுணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது. 26

இருளின்றேற் றுன்பெ னுயிரியல்பேற் போக்கும்
பொருளுண்டே லொன்றாகப் போம். 27

ஆசாதி யேல்லேவ காரணமென் முத்திநிலை
பேசாது ‡கவ்வும் பிணி. 28

ஒன்று மிகினு மொளிகவரா தேலுள்ள
மென்று மகலா திருள். 29

விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து. 30

## 4. அருளது நிலை

அருளிற் பெரிய தகிலத்தில் வேண்டும்
பொருளிற் றலையிலது போல். 31

பெருக்க நுகரவினை பேரொளியா யெங்கும்
அருக்கனெனன் நிற்கு மருள். 32

ஊனறியா தென்று முயிரறியா தொன்றுமிவை
தானறியா தாரறிவார் தான். 33

---

† கணவற்குந், ‡ அகவும் (அகப்படுத்தும்) என்பதும் பாடம்.

பாலாழி மீனுளும் பான்மைத் தருளுயிர்கள்
மாலாழி யாழு மறுத்து. 34

அணுகு துணையறியா வாற்றேனி லேந்தின்
உணர்வை யுணரா வுயிர். 35

தரையை யறியாது தாமே திரிவோர்
புரையை யுணரா புவி. 36

மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்
[தோர் ஞானந்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம். 37

வெள்ளத்து ளுவற்றி யாங்கு விடிந்திருளாங்
கள்ளத் தலைவர் கடன். 38

பரப்பமைந்து கேண்மினிது பாற்கலன்மேற் பூனை
கரப்பருந்த நாடுங் கடன். 39

இற்றை வரையியைந்து மேதும் பழக்கமிலா
வெற்றுயிர்க்கு வீடு மிகை. 40

## 5. அருளுரு நிலை

அறியாமை யுண்ணின் றளித்ததே காணுங்
குறியாக நீங்காத கோ. 41

அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி யதனைச்
சகத்தவருங் காண்பரோ தான். 42

அருளா வகையா லருள்புரிய வந்த
பொருளா அறியா புவி. 43

பொய்யிருண்டசிந்தைப் பொறியிலார்போதமாம்
மெய்யிரண்டுங் காணூர் மிக. 44

பார்வையென மாக்களைப் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் ‡காணூர் புவி. 45

† எமக்கெ னெவனுக் கெவைதெரியு மவ்வ
தமக்கவனை வேண்டத் தவிர் 46

விடனகுல மேவினுமெய்ப் பாவகனின் மீளுங்
கடனிலிருள் போவதிவன் கண். 47

அகலர்த் தருமருளை யாக்கும்வினை நீக்குஞ்
சகலர்க்கு வந்தருளுந் தான். 48

ஆரறிவா ரெல்லா மகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின். 49

ஞான மிவனொழிய நண்ணியிடு நற்கலனல்
பானு வொழியப் படின். 50

## 6. அறியுநெறி

நீடு மிருவினையு நேராக நேராதல்
கூடுமிறை சத்தி கொளல். 51

ஏக னநேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யாறுதி யில். 52

செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்பயனுஞ்
உய்வா னுளனென் றுணர். [சேர்ப்பவனும் 53

---

‡ காணு. † எவ்வ தெரியும் அவ்வ தவிரும் என்க.

ஊனுயிரால் வாழு மொருமைத்தே யூனொடுயிர்
தானுணர்வோ டொன்றுந் தரம். 54

தன்னிறமும் பன்னிறமுந் தானுங்கற் றன்மைதரும்
பொன்னிறம்போன் மன்னிறமிப் பூ. 55

கண்டொல்லை காணுநெறிகண்ணுயிர்‡நாப்பணிலை
யுண்டில்லை யல்ல தொளி. 56

புன்செயலி னேடும் புலன்செயல்போ னின்செயலை
மன்செயல தாக மதி. 57

ஓராதே யொன்றையுமுற் றுன்னுதே நீமுந்திப்
பாராதே பார்த்தனைப் பார். 58

களியே மிகுபுல னுக்கருதி ஞான
வொளியே யொளியா வொளி. 59

கண்டபடி யேகண்டு காணுமை காணுமை
கொண்டபடி யேகொண் டிரு. 60

## 7. உயிர் விளக்கம்

தூநிழல்ஆர் தற்காருஞ் சொல்லார் தொகுமிது
தானதுவாய் நிற்குந் தரம். [போல் 61

தித்திக்கும் பால்தானும் கைக்கும் திருந்திடுநாப்
பித்தத்திற் றுன்றவிர்ந்த பின். 62

காண்பா னொளியிருளிற் காட்டிடவுந் தான்கண்ட
வீண்பாவம் * எந்நாள் விடும். 63

---

‡ நாப்பணொளி. * என்னய்; விழும்.

ஒளியு மிருளு மொருமைத்துப் பன்மை
தெளிவு தெளியாச் செயல். 64

கிடைக்கத் தகுமேநற் கேண்மையார்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானை யின்று. 65

வஞ்ச முடனொருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல். 66

தனக்குநிழ லின்று வொளிகவருந் தம்ப
மெனக்கவர நில்லா திருள். 67

உற்கைதரும் பொற்கை யுடையவர்போ
னிற்கை யருளார் நிலை. [லுண்மைப்பீ 68

ஐம்புலனாற் றுங்கண்ட தன்று லதுவொழிய
வைம்புலனார் தாமா ரதற்கு. 69

தாமே தருமவரைத் தம்வலியி னாற்கருத
லாமே யிவனா ரதற்கு. 70

## 8. இன்புறுநிலை

இன்புறுவார் துன்பா ரிருளி லெழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின். 71

இருவர் மடந்தையருக் கென்பயனின் புண்டா
மொருவ னொருத்தி யுறின். 72

இன்பதனை யெய்துவார்க் கீயு ‡மவற்குருவ
மின்பகன மாதலினா லில். 73

‡ அவர்க்கு.

தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலைநீ யேகமெனக் கொள். 74

ஒன்றுலு மொன்று திரண்டாலு மோசையெழா
†தென்றுலொன் றன்றிரண்டு மில். 75

உற்றுரும் பெற்றுரு மோவா துரையொழியப்
பற்றுரு மற்றுர் பவம். 76

பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமினி
நீயொன்றுஞ் செய்யாது நில். 77

ஒண்பொருட்க ணுற்றுர்க் குறுபயனே யல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண். 78

மூன்றுய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றுத வின்பமதென் சொல். 79

இன்பி லினிதென்ற லின்றுண்டே லின்றுண்டாம்
அன்பி னிலையே யது. 80

## 9. ஐந்தெழுத்தருணிலை

அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்
பொருணூல் தெரியப் புகின். 81

இறைசத்தி பாச மெழின்மாயை யாவி
யுறநிற்கு மோங்காரத் துள். 82

ஊன நடன மொருபா லொருபாலா
ஞானநடந் தானடுவே நாடு. 83

---

† என்றுலு மோரிரண்டுமில்.

விரியமந மேவியவை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும். 84

மாலார் திரோத மலமுதலா மாறுமோ
மேலாசி மீளா விடின். 85

ஆராதி யாதார மந்தோ வதுமீண்டு
பாராது மேலோதும் பற்று. 86

சிவமுதலே யாமாறு சேருமேல் தீரும்
பவமிதுநீ யோதும் படி. 87

வாசி யருளியவை வாழ்விக்கு மற்றதுவே
யாசி லுருவமுமா மங்கு. 88

ஆசின்நவா நாப்ப ணடையா தருளினல்
வாசியிடை நிற்கை வழக்கு. 89

எல்லா வகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து. 90

## 10. அணைந்தோர் தன்மை

ஓங்குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்து [ளின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்.

ஐந்தொழிலுங் †காரணர்க ளாந்தொழிலும் [போகநுகர் 92
வெந்தொழிலு மேவார் மிக.

எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரொன்
றல்லா தறியா ரற. 93

---

† காரணங்கள்.

புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார்
தலனடக்கு மாமை தக. 94

அவனையகன் றெங்கின்று மாங்கவனு மெங்கும்
இவனையொழிந் துண்டாத லில். 95

உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேது மில். 96

உறுந்தொழிற்குத் தக்க பயனுலகந் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன். 97

ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சுடும். 98

மும்மை தரும்வினைகண் மூளாவா மூதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம். 99

கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக. 100

திருவருட்பயன்

முற்றிற்று.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# உமாபதி தேவநாயனர்

அருளிச் செய்த

# வினா வெண்பா

---

## நேரிசை வெண்பா

நீடு மொளியு நிறையிருளு மோரிடத்துக்
கூட லரிது கொடுவினையேன்—பாடிதன்மு
ஞென்றவார் சோலை யுயர்மருதைச் சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ. 1

இருளி லொளிபுரையு மெய்துங் கலாதி
மருளி னிலையருளு மானும்—கருவியிவை
நீங்கி லிருளா நிறைமருதைச் சம்பந்தா
வீங்குனரு ளாலென் பெற. 2

புல்லறிவு நல்லுணர்வ தாகா பொதுஞான
மல்லதில துள்ளதெனி லந்நியமாந்—
[தொல்லையிருள்
ஊனமலை யாவா றுயர்மருதைச் சம்பந்தா
ஞானமலை யாவாய் நவில். 3

கனவு கனவென்று காண்பரிதாங் காணி
னனவி லவைசிறிது நண்ணு —முனைவனருள்
தானவற்றி லொன்று தடமருதைச் சம்பந்தா
யானவத்தை காணுமா றென். 4

அறிவறிந்த வெல்லா மசத்தாகு மாயின்
குறியிறந்தநின்னுணர்விற்கூடா—பொறிபுலன்கள்
தாமா வறியா தடமருதைச் சம்பந்தா
யாமா ரறிவா ரினி. 5

சிற்றறிவு முற்சிதையிற் சேர்வாரின் றுஞ்சிறிது
மற்றதனி னிற்கிலருண் மன்னுவாந் —துற்றமுகின்
மின்கொண்ட சோலை வியன்மருதைச் சம்பந்தா
வென்கொண்டு காண்பேனி யான். 6

உன்னரிய நின்னுணர்வ தோங்கியக்காலொண்
தன்னளவு நண்ணரிது தானுகு—மென்னறிவு[கருவி
தானறிய வாரா தடமருதைச் சம்பந்தா
யானறிவ தெவ்வா றினி. 7

அருவே லுருவன் றுருவே லருவன்
றிருவேறு மொன்றிற் கிசையா—வுருவோரிற்
காணி லுயர்கடந்தைச் சம்பந்தா கண்டவுடல்
பூணுமிறைக் கென்னும் புகல். 8

இருமலத்தார்க் கில்லை யுடல்வினையென் செய்யு
மொருமலத்தார்க் காரை யுரைப்பேன்—
[திரிமலத்தார்
ஒன்றாக வுள்ளா ருயர்மருதைச் சம்பந்தா
வன்றாகி லாமா றருள். 9

ஒன்றிரண்டாய் நின்றொன்றி லோர்மையதா
[மொன்றாக
நின்றிரண்டா மென்னிலுயிர் நேராகுந் —
[துன்றிருந்தார்
தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா யானாகி
யோங்கியவா றெவ்வா றுரை. 10

காண்பானுங்காட்டுவதுங்காண்பதுவு நீத்துண்மை
காண்பார்கணன்முத்தி காணார்கள்—காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச்
[சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர். 11

ஒன்றி நுகர்வதிவ னூணு முறுதொழிலும்
என்று மிடையி லிடமில்லை—யொன்றித்
தெரியா வருண்மருதைச் சம்பந்தா சேர்ந்து
பிரியாவா றெவ்வாறு பேசு. 12

அருளா லுணர்வார்க் ககலாத செம்மைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித்—தெருளா
வினாவெண்பா வுண்மை வினாவாரே லூமன்
கனாவின்பா லெய்துவிக்குங் காண். 13

வினா வெண்பா

முற்றிற்று.

உ

சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# உமாபதி தேவநாயனர்

அருளிச் செய்த

# போற்றிப்ப:்றொடை

---

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளி ராங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்ப - னுமன்னும் [கோன்
வேதம்வே தாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன்
நாதநா தாந்த நடுவேதம் - போதத்தால்
ஆமளவுந் தேட அளவிறந்த வப்பாலைச்
சேம வொளியெவருந் தேறும்வகை - மாமணிசூழ்
மன்று ணிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலைபோற்றி - குன்றாத
பல்லுயிர்வெவ் வேறு படைத்து மவைகாத்து
மெல்லை யிளைப்பொழிய விட்டுவைத்துந் -
[தொல்லையுறும் 5

அந்தமடி நடுவென் றெண்ண வளவிறந்து
வந்த பெரிய வழிபோற்றி - முந்துற்ற
நெல்லுக் குமிதவிடு நீடுசெம்பிற் காளிதமுந்
தொல்லைக் கடலேன்றத் தோன்றுவரு - மெல்லாம்
ஒருபுடை யொப்பாய்த்தா னுள்ளவா றுண்டாய்

அருவமா யெவ்வுயிரு மார்த்தே - யுருவுடைய
மாமணியை யுள்ளடக்கு மாநாகம் வன்னிதனைத்
தானடக்குங் காட்டத் தகுதியும்போன்-ஞானக்
கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தால்[இவ்
எண்ணஞ் செயன்மாண்ட வெவ்வுயிர்க்கு -
முன்னுடிக் 10

கட்புலனாற் காணார்தங் கைக்கொடுத்த
[கோலேபோற்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண்-முற்பால்
தனுகரண மும்புவன முந்தந் தவற்றான்
மனமுதலா வந்தவிகா ரத்தால்- வினையிரண்டுங்
காட்டி யதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு
மீட்டறிவு காட்டும் வினைபோற்றி - நாட்டுகின்ற
வெப்பிறப்பு முற்செ யிருவினையா னிச்சயித்துப்
பொற்புடைய தந்தைதாய் போகத்துட் -
[கர்ப்பமாய்ப்
புல்லிற் பனிபோற் புகுந்திவலைக் குட்படுங்கால்
எல்லைப் படாவுதரத் தீண்டியதீப் - பல்வகையா 15

லங்கே கிடந்த வநாதியுயிர் தம்பசியால்
எங்கேனு மாக வெடுக்குவென - வெங்கும்பிக்
காயக் கருக்குழியிற் காத்திருந்துங் காமியத்துக்
கேயக்கை, கான்முதலா யெவ்வுறுப்பு - மாசறவே
செய்து திருத்திப்பின்பி யோகிருத்தி முன்புக்க
வையவழி யேகொண் டணைகின்ற - பொய்யாத
வல்லவமே போற்றியம் மாயக்கா ரன்மறைப்ப

நல்ல வறிவொழிந்து நன்குதீ - தொல்லையுரு
வக்காலந் தன்னிற் பசியையறி வித்தமுவித்
துக்காவி சோரத்தா யுண்ணடுங்கி -
மிக்கோங்குஞ் 20

சிந்தை யுருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப்-பந்தித்த
பாசப் பெருங்கயிற்றுற் பல்லுயிரும் பாலிக்க
நேசத்தை வைத்த நெறிபோற்றி - பாசற்ற
பாலைப் பசும்பதத்தும் பாலனு மப்பதத்து
நாளுக்கு நாட்சகல ஞானத்து - மூள்வித்துக்
கொண்டாள வாளக் கருவிகொடுத் தொக்கநின்று
பண்டாரி யான படிபோற்றி - தண்டாத
புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனையில்
அன்புசேர் கின்றனகட் டைந்தாக்கி - முன்புள்ள 25

வுண்மை நிலைமை யொருகா லகலாது
திண்மை மலத்தாற் சிறையாக்கிக் - கண்மறைத்து
மூலவருங் கட்டிலுயிர் மூடமா யுட்கிடப்பக்
கால நியதி யதுகாட்டி - மேலோங்கு
முந்திவியன் கட்டிலுயிர் சேர்த்துக் கலைவித்தை
யந்த வராக மவைமுன்பு - தந்த
தொழிலறி விச்சை துணையாக மானி
னெழிலுடைய முக்குணமு மெய்தி - மருளோடு
மன்னு மிதயத்திற் சித்தத்தாற் கண்டபொருள்
இன்னபொருளென் றியம்பவொண்ணு-வந்நிலை
[போய்க் 30

கண்டவியன் கட்டிற் கருவிகளீ ரைந்தொழியக்
கொண்டுநியமித்தற்றைநாட்கொடுப்பப்-பண்டை
யிருவினையான் முன்புள்ள வின்பத்துன் பங்கள்
மருவும்வகை யங்கே மருவி - யுருவுடனின்
றோங்கு நுதலாய வோலக்க மண்டபத்திற்
போங்கருவி யெல்லாம் புகுந்தீண்டி - நீங்காத
முன்னை மலத்திருளுண் மூடா வகையகத்துள்
துன்னுமிரு ணீக்குஞ் சுடரேபோ - லந்நிலையே
சூக்கஞ் சுடருருவிற் பெய்து தொழிற்குரியர்
ஆக்கிப் பணித்த வறம்போற்றி - வேட்கைமிகு 35

முண்டிப் பொருட்டா லொருகா லவியாது
மண்டியெரி யும்பெருந்தீ மாற்றுதற்குத் -
[திண்டிறல் சேர்

வல்லார்கள் வல்ல வகையாற் றொழில்புரிதல்
எல்லா முடனே யொருங்கிசைந்து - செல்காலை
மூட்டாமற் செய்வினைக்கும் முற்செய்வினைக் குஞ்
[செலவு

புட்டோலை தீட்டும் படிபோற்றி - நட்டோங்கு
மிந்நிலைமை மானுடருக் கேயன்றி யெண்ணிலா
மன்னுயிர்க்கு மிந்த வழக்கேயாய் - முன்னுடைய
நாளுள் வரையி லுடல்பிரித்து நல்வினைக்கண்
வாளுளின் மாலா யயனாகி - நீணாகர் 40

வானாடர் கோமுதலாய் வந்த பெரும்பதத்து
ஞான விதத்தா னலம்பெறுநாள் - தான்மாள
வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட -
[விற்றைக்கும்

இல்லையோ பாவி பிறவாமை யென்றெடுத்து
நல்லதோ ரின்சொ னடுவாகச் - சொல்லியிவர்
செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு - மையறருஞ்
செக்கி னிடைத்திரித்துந் தீவாயி லிட்டெரித்துந்
தக்கநெருப் புத்தூண் தழுவுவித்து - மிக்கோங்கு 45

நாராசங் காய்ச்சிச் செவிமடுத்து நாவரிந்து
மீராவுன் னூனைத்தின் னென்றடித்தும் - பேராமல்
அங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம்
வெங்கோப மாருத வேட்கையரா - யிங்கொருநாள்
எண்ணிமுதற் காணுத வின்னற் கடுநரகம்
பன்னெடுநாட் செல்லும் பணிகொண்டு -
[முன்னுடிக்
கண்டு கடன்கழித்தல் காரியமா மென்றெண்ணிக்
கொண்டுவரு நோயின் குறிப்பறிவார் -
[மண்டெரியிற்
காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணுரிக்க நன்னிதிய
மீய்த்துத்தாய் தந்தைதம ரின்புறுதல் — வாய்த்த
[நெறி 50

யோடியதே ரின்கீ ழுயிர்போன கன்றுலே
நீடுபெரும் பாவமின்றே நீங்குமென - நாடித்தன்
மைந்தனையு மூர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை நமன்றூதர் - வெஞ்சினத்தால்
அல்ல லுறுத்து மருநரகங் கண்டுநிற்க
வல்ல கருணை மறம்போற்றி - பல்லுயிர்க்கும்

இன்ன வகையா லிருவினைக்க ணின்றருத்தி
முன்னைமுத லென்ன முதலில்லோ – னல்வினைக்கண்
எல்லா வுலகு மெடுப்புண் டெடுப்புண்டு
செல்காலம் பின்னரகஞ் சேராமே - நல்லநெறி 55

யெய்துவதோர் காலந்தன் னன்பரைக்கண்
[டின்புறுதல்
உய்யு நெறிசிறிதே யுண்டாக்கிப் - பையவே
மட்டாய் மலராய் வருநாளின் முன்னைநாண்
மொட்டா யுருவா முறைபோலக் - கிட்டியதோர்
நல்ல பிறப்பிற் பிறப்பித்து நாடும்வினை
யெல்லை யிரண்டு மிடையொப்பிற் - பல்பிறவி
யத்தமதி லன்றே வளவென்று பார்த்திருந்து
சத்தி பதிக்குந் தரம்போற்றி - முத்திதரு
நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமல மொன்றினையு
முந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப்-பின்னன்பு 60

மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப் - பூவலயந்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை - யன்ன
[வனுக்
காதிகுண மாதலினு லாடுந் திருத்தொழிலுஞ்
சோதி மணிமிடற்றுச் சுந்தரமும் - பாதியாம்
பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியு மதிக்கொழுந்து - மச்சமற
வாடு மரவு மழகார் திருநுதன்மேல்
நீடுருவ வன்னி நெடுங்கண்ணும் - கேடிலயங் 65

கூட்டுந் தமருகமுங் கோல வெரியகலும்
பூட்டரவக் கச்சும் புலியதளும் - வீட்டின்ப
வெள்ளத் தழுத்தி விடுந்தா ளினுமடியார்
உள்ளத் தினும்பிரியா வொண்சிலம்புங் -
[கள்ளவினை
வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும்
ஒன்றுமுருத் தோன்றும லுள்ளடக்கி-யென்றும்
இறவாத வின்பத் தெமையிருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து - நறவாருந்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதனென்று
பேரிலா நாதனொரு பேர்புனைந்து-பாரோர்தம் 70

உண்டி யுறக்கம் பயமின்ப மொத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி - மிண்டாய
வாறு சமயப் பொருளுமறி வித்தவற்றிற்
பேறின்மை யெங்களுக்கே பேருக்கித் - தேறுத
சித்தந் தெளியத் திருமேனி கொண்டுவரும்
அத்தகைமை தானே யமையாமல் - வித்தகமாஞ்
சைவ நெறியிற் சமய முதலாக
வெய்து மபிடேக மெய்துவித்துச் - செய்யதிருக்
கண்ணருளா னோக்கிக் கடியபிறப் பாற்பட்ட
புண்ணு மிருவினையும் போயகல-வண்ணமலர்க் 75

கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாய நெஞ்சுருக்கி
மெய்த்தகைமை யெல்லாம் விரித்தோதி -
[யொத்தொழுகுஞ்
சேனு ரிருள்வடிவுஞ் செங்கதிரோன் பானிற்பக்
கானு தொழியுங் கணக்கேபோ - லாணவத்தின்

ஆதி குறையாம லென்பா லணுகாமல்
நீதி நிறுத்து நிலைபோற்றி - மேதக்கோர்
செய்யுஞ் சரியை திகழ்கிரியா யோகத்தால்
எய்துஞ்சீர் முத்திபத மெய்துவித்து – மெய்
[யன்பாற்
காணத் தகுவார்கள் கண்டாற் றமைப்பின்பு
நாணத் தகுஞான நன்னெறியை – வீணே 80

யெனக்குத் தரவேண்டி யெல்லாப் பொருட்கு
மனக்கு மலரயன்மால் வானோர் – நினைப்பினுக்குந்
தூரம்போ லேயணிய சுந்தரத்தா னென்றலைமேல்
ஆரும் படிதந் தருள்செய்த – பேராளன்
தந்தபொரு ளேதென்னிற் றூன்வேறு நான்வேறாய்
வந்து புணரா வழக்காக்கி - முந்தியென்றன்
உள்ளமென்று நீங்கா தொளித்திருந்து தோன்றி
[நிற்குங்
கள்ளமின்று காட்டுங் கழல்போற்றி-வள்ளன்
[மையால்
தன்னைத் தெரிவித்துத் தன்றாளி னுட்கிடந்த
வென்னைத் தெரிவித்த வெல்லையின்கண் –
[மின்னாரும் 85

வண்ண முருவ மருவுங் குணமயக்கம்
எண்ணங் கலைகாலமெப்பொருளு-முன்னமெனக்
கில்லாமை காட்டிப்பின்பெய்தியவா காட்டியினிச்
செல்லாமை காட்டுஞ் செயல்போற்றி –
[யெல்லாம்போய்த்

தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருளாகி
யெம்மைப் புறங்கூறி யின்புற்றுச் - செம்மை
யவிகாரம் பேசு மகம்பிரமக் காரர்
வெளியா மிருளில் விடாதே - யொளியாய்நீ
நின்ற நிலையே நிகழ்த்தி யொருபொருள்வே
றின்றியமை யாமை யெடுத்தோதி - யொன்றாகச்
90
சாதித்துத் தம்மைச் சிவமாக்கி யிப்பிறவிப்
பேதந் தனிலின்பப் பேதமுறுப் - பாதகரோ
டேகமாய்ப் போகாம லெவ்விடத்துங் காட்சிதந்து
போகமாம் பொற்றாளி னுட்புணர்த்தி-யாதியுடன்
நிற்க வழியா நிலையிதுவே யென்றருளி
யொக்க வியாபகந்தன் னுட்காட்டி - மிக்கோங்கு
மாநந்த மாக்கடலி லாரா வமுதளித்துத்
தான்வந்து செய்யுந் தகுதியினால் - ஊனுயிர்தான்
முன்கண்ட காலத்து நீங்காத முன்னோனை
யென்கொண்டு போற்றிசைப்பேன் யான். 95

---

போற்றி திருத்தில்லை போற்றி சிவபோகம்
போற்றியவன் மெய்ஞ்ஞானப் புண்ணிய நூல் - [போற்றியெங்கள்
வெம்பந்த வாழ்க்கைவிட வேறுய்வந் துண்ணின்ற
சம்பந்த மாமுனிபொற் றாள்.

போற்றிப்பஃறொடை

முற்றிற்று.

உ

சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# உமாபதி தேவநாயனர்

அருளிச் செய்த

# உண்மை நெறி

மண்முதற் சிவம தீருய் வடிவுகாண் பதுவே ரூபம்
மண்முதற் சிவம தீருய் மலஞ்சட மென்றல் காட்சி
மண்முதற் சிவம தீருய் வகையதிற் ருனி லாது
கண்ணுத லருளால் நீங்கல் சுத்தியாய்க் கருத
[லாமே. 1

பாயிருணீங்கிஞானந் தனைக்காண்ட லான்ம ரூபம்
நீயுநின் செயலொன் றின்றிநிற்றலே தரிசனந்தான்
போயிவன் தன்மை கெட்டுப் பொருளிற்போ
யங்குத் தோன்ருு
தாயிடி லான்ம சுத்தி யருணூலின் விதித்த வாறே.

எவ்வடி வுகளுந் தானு யெழிற்பரை வடிவ தாகிக்
கெளவிய மலத்தான் மாவைக் கருதியே யொடுக்கி
[யாக்கிப்
பெளவம்விண் டகலப் பண்ணிப் பாரிப்பானெருவ
[னென்று
செவ்வையேயுயிரிற் காண்டல்சிவரூபமாகுமன்றே.

பரையுயிரில் யானெனதென் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது
[முகமாம்
உரையிறந்த சுகமதுவே முடியாகு மென்றிவ்
வுண்மையினை மிகத்தெளிந்து பொருள்வே
[றென்றின்றித்
தரைமுதலிற் போகாது தன்னிலைநில் லாது
நற்பரையி னின்றழுந்தா தற்புதமே யாகித்
தெரிவரிய பரமாநந் தத்திற் சேர்தல்
சிவனுண்மைத் தரிசனமாச் செப்பு நூலே. 4

எப்பொருள்வந் துற்றிடினு மப்பொருளைப்
[பார்த்தங்
கெய்துமுயிர் தனைக்கண்டிங் கவ்வுயிர்க்கு
[மேலா
மொப்பிலருள் கண்டுசிவத் துண்மை கண்டிங்
குற்றதெல்லா மதனலே பற்றி நோக்கித்
தப்பினைச்செய் வதுமதுவே நினைப்புமது தானே
தருமுணர்வும் புசிப்புமது தானே யாகும்
எப்பொருளு மசைவில்லை யெனவந்தப்பொருளோ
டிசைவதுவே சிவயோக மெனுமிறைவன்
[மொழியே. 5

பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றி
[வரினுஞ்
சாதிநெறி தப்பிடினுந் தவறுகள்வந் திடினுந்
தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய்
[நிற்கின்

நாதனவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து
நானுபோ கங்களையுந் தானுகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானுக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி யிதுவே.6

---

எண்ணும் அருள்நூல் எளிதின் அறிவாருக்(கு)
உண்மை நெறிவிளக்கம் ஓதினுன் - வண்ணமிலாத்
தண்காழித் தத்துவனுர் தாளே புனைந்தருளும்
நண்பாய தத்துவநா தன்.

என்னும் வெண்பாவைக் கொண்டு இந்நூலைத் தத்துவ நாதர் அருளியதென்பர். உண்மைநெறி என்பது நூற்பெயர்; உண்மைநெறிவிளக்கம் என்பது தத்துவநாதர் கொடுக்கும் விளக்கம் என்க.

உண்மைநெறி

முற்றிற்று.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபர்தம்

# உமாபதி தேவநாயனர்
அருளிச் செய்த

# கொடிப்பாட்டு †

---

ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன் றுமேலிடி
[லொன்
ஞெளிக்கு மெனினு மிருளட ராதுள் ளுயிர்க்
[குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும் படிகொடி கட்டினனே. 1

பொருளாம் பொருளேது போதேது கண்ணே
திருளாம் வெளியே திரவே — தருளாளா
நீபுரவா வையமெலா நீயறியக் கட்டினேன்
கோபுர வாசற் கொடி. 2

வாக்காலு மிக்க மனத்தாலு மெக்காலுந்
தாக்கா துணர்வரிய தன்மையனை — நோக்கிப்
பிறித்தறிவு தம்மிற் பிறியாமை தானே
குறிக்குமரு ணல்கக் கொடி. 3

---

† சிவஞான பாடியம் சூ. 9. அதி. 3

அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்து [நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்தும் — [நெஞ்சழுத்திப்
பேசு மெழுத்துடனே பேசா வெழுத்தினையுங்
கூசாமற் காட்டக் கொடி. 4

அந்த மலமறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த அறிவை அறிவித்தங் — கிந்தறிவை
மாறாமல் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறாமல் கூறக் கொடி. 5

கொடிப்பாட்டு

முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

உமாபதி தேவநாயனர்

அருளிச் செய்த

# நெஞ்சு விடு தூது

---

கலிவெண்பா

## இறைவனியல்பு

பூமேவு முந்திப் புயல்வண்ணன் பொற்பமைந்த
நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன் - றுமேவிப்
பன்றியு மன்னமுமாய்ப் பாரிடத்தும் வான்பறந்து
மென்று மறியா வியல்பினு - னன்றியும்
இந்திரனும் வானேரு மேனேரு மெப்புவியு
மந்தர வெற்பு மறிகடலு - மந்திரமும்
வேதமும் வேத முடிவும்விளை விந்துவுடன்
நாதமுங் காணு நலத்தினு - னேத
வரியா னெளியா னளவிறந்து நின்ற
பெரியான் சிறியான்பெண் பாகன் - தெரியா 5
வருவா னுருவா னருவுருவு மில்லான்
மரியான் மரிப்பார் மனத்தான் - பரிவான
மெய்யர்க்கு மெய்யன் வினைக்குவினை யாயினுன்
பொய்யர்க்குப் பொய்யாப்பொய் யாயினு-னையன்

படநாகம் பூண்ட பரமன் பசுவின்
இடமாய் நிறைந்த விறைவன் - சுடரொளியான்

## உயிரியல்பு

என்றுமுள னன்றளவுமி யானு முளனாகி
நின்றநிலை யிற்றரித்து நில்லாமற் - சென்றுசென்று
தோற்றியிடு மண்டஞ் சுவேதசங்கண் மண்ணின்
[மேற்
சாற்றுமுற் பீசஞ் சராயுசங்கட் - கேற்றபிறப் 10
பெல்லாம் பிறந்து மிறந்து மிருவினையின்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன் - கல்லா
வுணர்வின் மிசையோ டுலகா யதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு - கணையிற்
கொடிதெனவே சென்று குடிபழுதே செய்து
கடிய கொலைகளவு காமம் - படியின்மிசைத்
தேடி யுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி யிடையு மனந்தனக்கு - நாடியது
போன வழிபோகும் † புந்திக்கும் புந்தியுடன்
ஆன திறலா ரகந்தைக்கு - மேனி 15
யயர வயர வழிய வழியும்
உயிரின் றுயர முரையேன் - வயிரமே

---

† வழியோடும்.

## தலையினியல்பு

கொண்டதொரு காமனுக்கும் கோபனுக்கும்
[மோகனுக்கும்
மண்டு மதமாச் சரியனுக்கும் - திண்டிறல்சேர்
இந்திரியம் பத்துக்கு மீரைந்து மாத்திரைக்கும்
அந்தமிலாப் பூதங் களைந்தினுக்கும் - சிந்தைகவர்
மூன்றுகுற்ற மூன்றுகுணம் மூன்றுமலம்
[மூன்றவத்தை
யென்றுநின்று செய்யு மிருவினைக்குந் - தோன்றாத
வாயுவொரு பத்துக்கும் மாறாத வல்வினையே
யாய கிளைக்கு மருநிதிக்கும் - நேயமாம் 20

இச்சை கிரியை யிவைதரித்திங் கெண்ணிலா
வச்சங் கொடுமை யவைபூண்டு - கச்சரவன்
சீரினிலை நில்லாமல் திண்டாடும் பல்கருவி
வாரியகப் பட்டு மயங்கினேன் - தேருங்கால்
உன்னை யொழிய வுறவில்லை யென்னுமது
தன்னை யறிவைத் தனியறிவை - முன்னந்
‡ தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவரென்று-நிலைத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள் ளுவருரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல் - ஐவர்க்கு 25

மாவதுவே செய்தங் கவர்வழியைத் தப்பாமல்
பாவமெனும் பௌவப்பரப்பழுந்திப்-பூவையர்தம்

‡ திருக்குறள் 348.

கண்வலையிற் பட்டுக் கலவிக் கலைபயின்றங்
குண்மை யறிவுணர்ச்சி யோராமல்-திண்மையினல்
நாவிற் கொடுமை பலபிதற்றி நாடோறும்
சாவிற் பிறப்பிற் றலைப்பட்டிங் - காவிநிலை
நிற்கும்வகை பாராய் நிலையான நெஞ்சமே
பொற்பினுடன் யானே புகலக்கேள் -
[வெற்பின்மிசை

இறைவனது நிலை

வந்திருக்க வல்லான் மதியாதார் வல்லரணஞ்
செந்தழலின் மூழ்கச் சிரித்தபிரான்-அந்தமிலா 30
வேத முடிவில் விளைவில் விளைவிலொளி
யாதி யமல னிமலனருட் - போத
அறிவி லறிவை யறியு ம்வர்கள்
குறியுள் புகுதுங் குணவ - னெறிகொள்
வெளியில் வெளியில் வெளியன் வெளியி
லொளியி லொளியி லொளியன் - ஒளியி
லளியி லளியி லளிய னளியில்
அளவி லளவி லளவன் - அளவிறந்து
நின்ரு னனைத்து நிறைந்தா னினைப்பவர்பாற்
சென்ருன் தெரியத் தெரியாதான் - குன்ரு 35
விளக்காய் நிறைந்த விரிசுடரான் விண்மேற்
றுளக்காம னின்றபெருஞ் சோதி - யுளக்கண்ணுக்
கல்லாது தோன்ரு வமல னகிலமெலா
நில்லாம னின்ற நிலையினுன் - சொல்லாரு
மீசன் பெருமை யிருவினையே னுன்றனக்குப்
பேசுந் தகைமையெலாம் பேணிக்கேள் - பாசம்

தசாங்கம் :—

## 1. மலை

பலவுங் கிடந்து பரிந்தருள்சேர் பண்பாற்
குலவி விளங்குகுணக் குன்றே - னிலகவே

## 2. ஆறு

செய்ய தருமச் செழுங்கிரியின் மீதிழிந்து
வையம் பரவ மகிழ்ந்தெழுந்தங் - கையம் 40

களவுபயங் காமங் கொலைகோபங் காதி
அளவில்வினை யெல்லா மழித்திங் - குளமகிழத்
தொம்மெனவே யெங்கு முழங்கிச் சுருதிபயில்
செம்மைதரு மாக்மங்கள் சேர்ந்தோடி -
[மும்மலத்தின்
காடடங்க வேர்பறித்துக் கல்விக் கரைகடந்தங்
கோடுபல பூதத் துணர்வழித்து - நீடுபுகழ்
மெய்வாய்கண் மூக்குச் செவியென்னப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாவழித்து - நையுமியல்
வாக்குப்பா தம்பாணி பாயுருபத் தம்பலவு
நீக்கிச் செறிந்து நிறைந்தோடிப் - போக்கரிய 45

பந்தமெனுஞ் சோலை பறித்துப் பரந்தலைக்கு
மந்தமனம் புத்தியுட னங்காரஞ் - சிந்தைவிழ
மோதி † யலைக்கு மருணீர்மை முக்குணமுங்
காதி யுரோமமெலாங் கைகலந்து - சீதப்

---

† யருணீர்மையோங்கி விறன் முக்குணமும்.

புளக மரும்பிப் புலன்மயக்கம் போக்கி
விளைவில் புலன்முட்ட மேவிக் - களபதன
மாதர் மயக்க மழித்துவளர் மண்டலத்தின்
சோதியொரு மூன்றினையும் சோதித்து - நீதியினுல்
ஆதார மாறினுஞ்சென் ருறியடல் வாயுக்கண்
மீதான பத்து மிகப்பரந்து - காதிப் 50

பிறுதிவியப் புத்தேயு வாயுவா காய
வுறுதி நிலமைந்து மோடி - மறுவிலா
நான்முகன்மா லீசன் மகேச னலஞ்சிறந்த
தான்முக மைந்தாஞ் சதாசிவமு - மானதொரு
விந்துநா தங்கடந்து சுத்த வெறுவெளியில்
அந்தமிலாப் பாழடங்கத் தேக்கியபின் - முந்திவரு
மவ்வறிவுக் கப்பாலுஞ் சென்றகண்ட முள்ளாக்கிச்
செவ்வறிவே யாகித் திகைப்பொழிந்தங் -
[கெவ்வறிவுந்
தானுய வீடருளித் தன்னிற் பிரிவில்லா
வூனுகி யெவ்வுயிர்க்கு முட்புகுந்து - ‡மேனியிலா 55

வஞ்சவத்தை யுங்கடந் தாயபெரும் பேரொளிக்கே
தஞ்சமெனச் சென்று † தலைப்பட்டு - வஞ்சமறத்
தானந்த மில்லாத தண்ணளியா லோங்கிவரு
மானந்த மென்பதோ ராறுடையான் - ஆனந்தம்

‡ 'வடிவிலா முடிவில் வாழ்க்கைக்கு இம்மை நின்று
உருகுகின்றேன்' (திருமுறை 4 - 78 - 5) † தலைப்பெய்தி.

## 3. நாடு

பண்ணும்பயன்சுருதி யாகமங்கள் பார்த்துணர்ந்து
நண்ண வரியதொரு நாடுடையான் - எண்ணெண்

## 4. ஊர்

கலையா லுணர்ந்து கருத்தழிந்து காம
நிலையான தெல்லாமும் நீத்தங் - கலைவறவே
தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தால்
ஓட்டற்றுவீற்றிருக்கு மூருடையான்-நாட்டத்தால்

## 5. தார்

தெண்ணீ ரருவிவிழச் சிந்தைமயக் கந்தெளிந்
துண்ணீர்மை யெய்தி யுரோமமெலா - நண்ணும்
புளகம் புனைமெய்யர் பொய்யிற்கூ டாமல்
உளகம்பங் கொண்டுள் ளுருகி - யளவிலா
மாலா யிருக்கு மவர்மனத்தை வாங்கவருண்
மேலாய் விளங்கலங்கன் மெய்யினுன் - மேலாத

## 6. குதிரை

வானம் புவன மலைகடலேழ் பாதாள
மூனைந்து பூதத் துயிருணர்ச்சி - ஞானமா
யெல்லாமா யல்லவா யெண்ணுவாரெண்ணத்துள்
நில்லாம னிற்குநீள் வாசியான் - சொல்லாரும்

## 7. யானை

பர்தாள மூடுருவிப் பாரேழும் விண்ணேழு
மர்த்தர மாகி யகண்டநிறைந் - தோத
அரிதா யெளிதா யருமறையா றங்கத்
துருவா யுயிரா யுணர்வாய்ப் - பெரிதாய
வெய்யதுயர்ப் பாசமற வீசியே வெம்பிறவித்
துய்ய கடலைத் துகளெழுப்பி - யையமுறுங்
காமக் குரோத†மத மாச்சரியங் காய்ந்தடர்த்துச்
சாமத் தொழிலின் றலைமிதித்து - நாமத்தாற்
கத்துஞ் சமயக் கணக்கின்விறற் கட்டழித்துத்
தத்தம் பயங்கொலைகள் தாங்கழித்தே-தத்திவரும்
பாசக் குழாத்தைப் படவடித்துப் பாவையர்த
மாசைக் கருத்தை யறவீசி - நேசத்தா
லானவே கங்கொண் டருண்மும் மதத்தினு
லூனையார் தத்துவங்க ளுள்புகுந்து - தேனைப்
பருகிக் களித்துயர்ந்து பன்மறைநாற் கோட்டான்
மருவித் திகழ்ஞான வானையா - னிருமுச்

## 8. கொடி

சமையங் கடந்து தனக்கொப் பிலாத
சுமைதுன்ப நீக்குந் துவசன் - கமையொன்றித்

† லோபமோக மதங்காய்ந்தடர்ந்து.

## 9. முரசு

தம்மை மறந்து தழலொளியுள் ளேயிருத்தி
இம்மை மறுமை யிரண்டகற்றிச் - செம்மையே 75
வாயுவை யோடா வகைநிறுத்தி வானத்து
வாயுவையு மாங்கே யுறவமைத்துத்—*தேயுறவே
என்று மொருதகைமை யாயிருக்கு மின்பருளே
நின்று முழங்கு நெடுமுரசோன் - அன்றியும்

## 10. ஆணை

மாலு மயனும் வகுத்தளித்த வையமெலாஞ்
சாலுமிதற் கப்பாலு மெப்பாலு - மேலே
யுலகு முலகா லுணரவொண்ணு வூரு
மிலகி நடக்குமெழி லாணையான் - அலகிறந்த

### இறைவன் பெருமை

காட்சியான் காட்சிக்குங்‡ காணுன் கலைஞான
வாட்சியா ளுட்சிக்கு †மாயிலான் - சூட்சியான் 80

பாரும் திசையும் படரொளியா லேநிறைந்தான்
றாருந் தலையுமிலாத் தோன்றலான் - வேராகி
வித்தாகி வித்தின் §விளைவாகி மேவுதனுச்
சத்தாதி பூதங்க டாமாகிச் – சுத்த
வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக் கப்பா
லுறுபொருளாய் நின்ற வொருவன் -
[பொறியிலியேன்

---

* தேயுவால். ‡ காணுக். † ஆயினன். § முளையாகி.

## ஞானசாரியர்

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியென் றம்பிரா - னம்புவியோர்
போற்றுந்திருவடியென்புன்றலைமீதேபொறித்தோ
னேற்றின் புறத்தமைத்த வெங்கோமான் -
[சாற்றுவார் 85

சாற்றும் பொருளான் றனிமுதல்வன் றூனல்லான்
வேற்றின்ப மில்லா விளங்கொளியான் -போற்றுங்
குருவேட மாகிக் குணங்குறியொன் றில்லாப்
பெருவேட மாய்நிறைந்த பெம்மான் - கருவேடங்
கட்டுமுருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையா
னெட்டுமவர்க் கெட்டா வியல்பினுன் - மட்ட
[விழ்தார்

## குருபதேசம்

வானேன் பவனி வரக்கண்டு வல்வினையே
னேனேரு மேத்துதல்கண் டேத்தினேன் -
[ருனென்னைப்
பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தை
[யெல்லாம்
நீத்தா னினைவுவே ருக்கினு - னேத்தரிய 90

தொண்ணூற் றறுவர்பயிறூக்கிற் றுவக்கறுத்தான்
கண்ணூறு தேனமுதங் காட்டினுன் - வெண்ணீறும்
வேடமும் பூசையுமே மெய்யென்றூன் பொய்யென்
மாடையும் வாழ்க்கை மனையுமே - நாடரிய [றூன்

வஞ்செழுத்தி னுள்ளீ டறிவித்தா னஞ்செழுத்தை
நெஞ்சழுத்தி நேய மயலாக்கி - யஞ்செழுத்தை
யுச்சரிக்குங் கேண்மை யுணர்த்தியதி லுச்சரிப்பு
வைச்சிருக்கு மந்த ‡வழிகாட்டி - யச்சமறச்
சென்று விளக்கை யெழத்தூண்டிச் செஞ்சுடரி
ஞென்றி யொருவிளக்கி னுள்ளொளியாய் - நின்ற
95
பெருவிளக்கின் பேரொளியி னுள்ளே பிரச
மருவு மலர்போன் மதித்தங் - கருவினிருக்
கொள்ளா வருளைக் கொளுத்திக் குணங்குறியொன்
றில்லா விடத்தே யிளைப்பாற்றி - விள்ளாத
வுள்ள முதலாக வுற்றதெல்லாம் வாங்கவருள்
வெள்ள மயலளித்து மேவினன் - கள்ள
மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கிமன மெல்லா
மிறப்பித்தா னென்பிறவி யீர்த்தான் -
[விறற்சொல்லுக்
கெட்டானை யார்க்கு மெழுதா வியற்குணங்க
ளெட்டானை யாற்று வெழுத்தினன் - மட்டாரும்
100
பாடலா ராடலார் பண்பலார் நண்பலா
ராடலா ராட லகன்பதியாங் - கூடலார்
காணக்கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்
பாணர்க் கிலகு பலகையிட்டான் - சேணிற்
சிறந்த வுருவான் றிருமாலுக் கெட்டா
னிறைந்த திருவுருவாய் நிற்போன் - கறங்குடனே

‡ வழியாக்கி.

சூறைசுழல் வண்டு சுழல்கொள்ளி வட்ட†மன
மாறில் கருணையினுன் மாற்றினு - ணீறணிந்த
மெய்ய னமல னிமலனருள் வீடளிக்கு
மையனறி வுக்கறி வாயினுன் - பொய்யர்பாற் 105

பொய்மையாய் நின்ருன் புரிந்தவர்தந்
[நெஞ்சத்துண்
மெய்மையாய் நின்று விளங்கினுன் - கைமழுவா
னத்தன்பால் நீசென் றடையு மிடத்தையெல்லாஞ்

## அடையும் இடம்

சித்தஞ்சேர் நெஞ்சமே செப்பக்கேள் - நித்தலுமே
பூசிமுடித் துண்டுடுத்துப் பூங்குழலார் தங்கலவி
யாசைதனிற் பட்டின்ப வார்கலிக்கு - ணேசமுற
நின்று திளைக்கு மிதுமுத்தி யல்லதுவே
ருென்று திளைக்கு மதுமுத்தி - யன்றென்
றிலகா விருளலகை போலிகலே பேசு
முலகா யதன்பா லுருதே - பலகாலுந் 110

தாம்பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண்
[டாங்கதுவே
நான்பிரம மென்பவர்பா னண்ணுதே -
[யூன்றனக்குக்
கொன்றிடுவ தெல்லாங் கொலையல்ல
[வென்றுகுறித்
தென்றுமற மேதெய்வ மென்றென்று - வென்றிப்

---

† அன்ன பிறப்பிறப்புச் சுழல்களை என்பது கருத்து.

பொறையே யெனும்புத்தன் பொல்லாத
[புன்சொன்
மிறையே விரும்பி விழாதே - நிறைமேவி
வாழ்பவர்போன் மண்ணுடலின் மன்னுமுரோ
மம்பறித்துத்
தாழ்வுநினை யாதுதுகில் தானகற்றி - யாழ்விக்கு
மஞ்சு மகற்று மதுமுத்தி யென்றுரைக்கும்
வஞ்சமணன் பாழி †மருவர்தே-செஞ்சொல்புனை
115

யாதிமறை யோதி யதன்பயனென் றும்மறியா
வேதியர்சொன் மெய்யென்று மேவாதே -
[யாதியின்மே
லுற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே - நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே - நீட
வழித்துப் பிறப்ப தறியா தரனைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே - விழித்தருளைத்
தந்தெம்மை யாண்டருளுஞ் சம்பந்த மாமுனிவ
னந்தங் கடந்தப்பா லாய்நின்றோ-னெந்தைபிரான்
120

வீற்றிருக்கு மோலக்க மெய்தியடி வீழ்ந்திறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென - வார்த்தகரி
யன்றுரித்தாய் நின்பவனி யாதரித்தா ரெல்லாரும்
வென்றிமத னம்புபட வீழ்வரோ - நின்றிடத்து

---

† மதியாதே

நில்லாத செல்வ நிலையென் றுனைநீங்கிப்
பொல்லா நரகம் புகுவரோ - பல்லாருங்
கத்துஞ் சமயக் கணக்கிற் படுவரோ
சித்தம் பலகாற் றிகைப்பரோ - முத்தம்
பொருத நகைமடவார் புன்கலவி யின்ப
மருவி மயங்கி வருவரோ - விருபொழுது 125

நாளிருபத் தேழு நவக்கிரக மும்நலியுங்
கோளிதுவென் றெண்ணிக் குறிப்பரோ - வேளை
யெரித்த விழியாய்நின் னின்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல் - வருத்தமெலாந்
தீரா யெனவுரைத்துச் செங்கமலப் பூந்திருத்தா
டாரா யெனப்பலகால் தாழ்ந்திறைஞ்சி-யேராரும்
பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே
யீங்கொன்றை வாரா யினி.

---

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் தார்வாங்கி — அம்புந்தும்
வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாமகல
நெஞ்சமே வாராய் நினைந்து.

நெஞ்சுவிடு தூது

முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

## உமாபதி தேவநாயனுர்

அருளிச் செய்த

# சங்கற்ப நிராகரணம்*

### விநாயகர் வணக்கம்

திருந்திய அருந்தவம் பொருந்துபன் முனிவர் (1)
கமையாக் காத லமையாது பழிச்சு
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்
தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை 5
வாட்டரு மும்மை நாட்ட நால்வாய்ப்
பாச மங்குசந் தேசுறு மெயிறெண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்
தங்கதங் கடகம் பொங்கிழை யார
நிறைமணிச் சுடிகைக் கறையணற் கட்செவி 10
கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாட்
களிறுத னிருகழல் கருதா
வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே.

---

* இச்சங்கற்ப நிராகரணம் அந்தாதித் தொடையாய்ப் பதின்மூன்றகவலாலாகியது. பதின்மூன்றினும் மிக்கதாகக் கொண்டதும் உண்டு.

## பாயிரம்

பெருங்கட லுதவுங் கருங்கடு வாங்கிக் (2)
கந்தரத் தமைத்த வந்தமில் கடவுள்
பாலரை யுணர்த்து மேலவர் போலக்
கேட்போ ரளவைக் கோட்படு பொருளா
லருளிய கலைக ளலகில வாலவை 5
பலபல சமயப் பான்மைத் தன்றே யஃதா
லந்நூற் றன்மை யுன்னிய மாந்தர்
இதுவே பொருளென் றதனிலை யறைதலின்
வேற்றோர் பனுவ லேற்றோர்க் கிசையா
மாறு பாடு கூறுவ ரதனாற் 10
புறச்சம யங்கள் சிறப்பில வாகி
யருளின் மாந்தரை வெருளுற மயக்கி
யலகைத் தேரி னிலையிற் றீரும்
ஈங்கிவை நிற்க நீங்காச் சமய
மூவிரு தகுதி மேவிய தாமும் 15
ஒன்றோ டொன்று சென்றுறு நிலையி
லாறும் மாறு வீறுடைத் திவற்று
ளெவ்வ மில்லாச் சைவநற் சமயத்
தலகி லாகம நிலவுத லுளவை
கனக மிரணியங் காஞ்சன மீழந் 20
தனநிதி யாடகந் தமனிய மென்றிப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும்
வாய்ந்த நூல்க ளாய்ந்தன ராகி
யாசா ஞகி வீசிய சமத்துடன் 25

ஏழஞ் சிருநூ றெடுத்த வாயிரம்
வாழுநற் சகன மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த வற்புத ஞானி
யாரும் விழவிற் பொற்றே ராலயத்
தேரு வெண்மர் நிரையி லிருப்ப 30
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட வொருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணையம் பதிதிகழ்
மெய்கண் டவனருள் கைகண் டவர்களி
லொருவ ரொருதலை மருவி யிருப்ப 35
வஞ்சப் பிறவிக் கஞ்சிவந் தொருவ
னேதிறை யருளென வீதெனு மாயா
வாதியை யயலினர் மறுதலைத் தருடர
மற்றவ ரயலின ரவருரை மறுத்துச்
சொற்றர வயலின ரவருந் தொலைவுற் 40
றின்னே யெவரு முன்னே கழியுழி
யாங்கய லிருந்த வருளின ரழகிது
நீங்கள்சங் கற்ப நிராகரித் தமையென
மற்றவ ருரைத்த சொற்றரு பொருள்கொடு
வாத செற்ப விதண்டையு மேதுவு 45
மோது †நால்வகை யுவமையுந் திகழ்தர
வருள்சேர் மாந்தர் வெருள்சே ராமற்
றற்கமுங் விடையமுங் கற்க
நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே.

---

† சிவப்பிரகாசம் - 100

# நூல்

## மாயாவாதி சங்கற்பம்

### பெத்தத்தியல்பு

நவிற்றிய நிரையி னவித்தையி ஞேனுரை (3)
நித்த னறிவன் சுத்த னகண்டித
னிருவி கற்பனிர்த் தத்துவ னிரஞ்சனன்
சொல்வகை யெவையுந் தொடராத் தூய்மணி
வரம்பில் வேதச் சிரந்தரு பரம்பொருள் 5

சத்தா யெவையுந் தாஞ யவித்தை
தொத்தா துயர்ந்த தொல்சுடர் மூவா
வின்ன தன்மைய னேக னநேகன்
கன்னற் பெருஞ்சுவை தன்னிற் பிறவாப்
பெற்றியி னிருந்து பொற்பணி யியல்பினின் 10

வான்வளி யனனீர் மண்மருந் தன்ன
மான தாது வாறைங் கோசத்
தொகுதி யாக்கைப் பகுதிய தொருபுடை
சுத்தி வெள்ளி யொத்தென மித்தையிற்
ருனென லாகுந் தன்மைத் துலூதையிற் 15

சின்னூற் றகைமையின் வேற்றுமை மரீஇய
தென்னப் பன்மைய தெனினிலே பழம்பூத்
தோஞர் வயிரந் தருத்தருந் தொன்மையின்
வாஞ ரந்திரை நுரைதரு வாய்மையிற் 20
கூடு மசித்தைச் சித்துத வாதெனி

னெற்பதர் பலாலத் திற்பரந் தருமிது
தன்னியல் பென்றும் விளையாட் டென்றும்
முன்னுள மறைகண் மொழிதலி ளெருநூற்
பன்மணி நிலையும் பசுப்பா லெனவும்
பலவக னீரி லலர்கதி ரெனவுங் 25

கூவ லாழி குளஞ்சிறு குழிகால்
வாவி யாவையும் வருபுன லெனவு
மவ்வவற் றடங்கி யாடியு ணிழலெனத்
தோன்றி யாக்கைநற் காந்தத் திரும்பும்
கனவிற் றீங்குங் கங்குலிற் கயிறும் 30

புனலிற் றேன்றும் பேய்த்தேர்ச் செய்தியு
மன்ன துன்பி னன்னிறப் பளிங்கெனப்
பதினற் கரணத் தொருமூன் றவத்தை
நாளு நாளு நயந்துறு மிருபயன்
தன்னிற் சாராத் தொன்மைத் தன்மை 35

தர்ப்பண நிழற்கட் குற்றிபாய்ந் தற்றே

## சீவன்முத்தியியல்பு

இவ்வியற் பந்தப் பௌவம தகல
விண்முத றந்த கொண்மூப் படலத்
திருளற வுதித்த காறக விவேகந்
தன்னிற் றேன்றிச் சாதக மனத்தையு 40

மன்னகப் பிரிப்பு மடியிழை வாங்கலும்
போல ஞானம் பொய்யறக் கழீஇத்

தானே தானுய்த் தன்னிற் றன்னைத்
தானே கண்டு தன்னல முற்று
வசையி றத்துவ மசிபதத் தெளிவா 45

லகமே பிரம மாயின னெனவறிந்
தசல ஞகிநற் சலம்சல மதியெனக்
கண்டிடும்

### பரமுத்தியியல்பு

உடலம் விண்டகல் கடந்து
மங்குலஃ துடைதர வெங்குமாந் தகைத்தே
இவ்வகை யுணர்ந்து செய்தொழி லருத 50

மடவோர் தாமுங் கடஞ வியற்றுங்
கன்ம காண்டத் தொன்மைப் புரிவாற்
ரேற்றிய வித்தை மேற்கடை யரணியி
லெழுந்தெரி யவற்றை விழுங்கிய தென்னத்
தன்ஞெழிந் துள்ள தாஞ யழியு 55

மந்நிலை யன்றி யழிவறு முத்தி
யேயா தென்றுதன் னியல்பை
மாயா வாதி வகுத்துரைத் தனனே. 3

### மாயாவாதி சங்கற்ப நிராகரணம்

பிரமாணமறுப்பு :-

### வேதம் சுயம்பன்று

4

உரைதரு பிரம மொன்றெனு முரைக்கண்
வருபிர மாண மறையெனி லருமறை

யொன்றென்ற தன்றி யிருபொரு ளுரைத்த
னன்றன் றபேத நாடிய பொருளேற்
பேதமு மபேதமு மோத வேண்டா 5

பேத மெனினு மபேத மெனினும்
பேதா பேத மெனினு மமையுநின்
னீனயமி லுரையிற் பையவந் துளதாந்
திகழ்பிர மாண விகழ்வுமுண் டன்றிப்
பெத்தம் பேத முத்தி யபேதமே 10

லநவத் திதமா மவையிரு திறனு
மினியப் பழமொழி யிரண்டல வொன்றே
யன்றியும் பெத்தம் பேதத் தறைதலு
மொன்றிய முத்தி யபேதத் துரைத்தலும்
பழுதா மித்திறம் பதையா தாய்கமற் 15

றெழுதா மறையெனு மிப்பிர மாண
மாருரை தானே யாயின தேலுன
தேக மநேக முறுமியம் பாமற்
சத்த ரூபந் தகாதெனில் வானத்
தொத்தொலி யுறமு மெனில்வறி துதியா 20

தன்றியும் பதமும் பாழியு மனைத்து
மின்றியோ ரொலியா யெழுந்திடு மதனுக்
கறிவில துருவில தறியா தறையா
தன்றியு மவ்வகை யகண்டித மதுவிது
வென்றது குறிப்ப தெவ்வகை யாவு 25

மொன்றெனு முரையு மொழிந்தனே யன்றே
யருமறை பிரம வுரையெனி லதற்குத்
தந்த தாலு முதனவில் பொறியில
தென்னிலோ ருடற்கண் மன்னிய வலகை
யறைந்தற் றென்ப தார்சொல தமலத் 30

திறம்பெற் றின்றே செய்தோர் பெயராற்
சுயம்பு வென்றுல கியம்புமென் றறியினித்
‡ தற்கீட் டலைவரைத் தான்ருேழு துரைக்குஞ்
சொற்கேற் புரவல னேவ லமைச்சரை
யடிகண் மற்றெங்குடிமுழு தாண்மினென் 35

றேத்தி யிறைஞ்சிக் காப்பர்க ளென்ருங்
கீச ஞஞ்செயப் பேசின னன்றி
யினையவை பிறரிற் கனவினு மிலனே
தன்னைத் துதிக்குஞ் சொன்னலந் தானுமத்
துறையறி வாணர்க் கறைவதொன் றன்றியுந் 40

தனக்குத் தானே தன்னலம் பகரா
தசத்துக் குரையா தார்குரை யுயிர்க்கெனி
லுரைபிர மாண மிறைபிர மேய
நீபிர மாதா நின்பிர மிதியென
நால்வகை யுளதுன தேகநன் றன்றே 45

நற்பிர மாண நிற்பதொன் றன்ரு
லப்பிர மேயமு மதனியல் பன்றே

---

‡ தற்கீழ்த் தலைவரை

பிரமேய மறுப்பு:-

**பிரமம் பிரமேயமன்று**

கன்னற் சுவையி லந்நிய மிலதா
லினிமை தோன்ருத் தனிமைத் தென்றனே
யறிவிற் குவமை யசத்தாங் கட்டி 50
பிறிவித் தொட்டினும் பேறதுரேதே
தற்பர விரிவுபொற்பணி தகுமெனிற்
† செய்வோ ரின்றிச் செய்வினே யின்மையிற்
பொன்பணி யாகை தன்பணி யன்றே
செய்வோர் போலச் செயப்படு பொருண்முதற் 55
செய்வோ ரேயாச் செய்யவும் படுமே
சுத்தி வெள்ளியிற் ரேன்றிற் ருயினுஞ்
சத்துல கேதுந் தாரா தருமெனி
னுலக மித்தையென் ரேரா துரைத்தனே
நிலவுநின் மரபு நினேந்திலே யாங்கொல் 60
விவகா ரத்தில் வேண்டுவது முலகம்
பரமார்த் தத்திற் பகரா மென்னிற்
பரத்துள தேலிவை யும்பர மார்த்தம்
பரத்தில தேலொழி முன்பகர் மாற்ற
மதன்முதல லிதுவென வுதவுக வன்றியும் 65
விவகரிக் குங்காற் றிகழ்பர மார்த்த
நிலேயது தெரியி னிதுநீ நீயேற்
றெறியா தாயி னஃதுந் தெரியா

† சிவஞா போதம் சூ. 1. உரை.

துரையா ரளவையு மொழிந்தனை யன்றே
யளவை காண்டல் கருத லுரையென 70

வுளதவை மூன்றின் மொழிவழி நுழையி
னின்பிர மேய மென்ப தெனுங்கொல்

## பிரமிதி மறுப்பு

பொற்பிதிர் பிதிர்ந்தும் பொன்னே யாநின்
றற்பர மசித்தைத் தருமா றென்னெனிற்
சிலம்பி நூறரு நலம்போற் றேன்று 75

மென்றனை யதுவ தன்றெழி லன்றியு
மொன்றத னியல்புல கோரியல் பன்றெனப்
பலமிலை பழம்பூப் பாதவந் தருநீர்
திரைநுரை திவலை சிலதரு மிவைபோற்
றுனே பலவா மெனநீ சாற்றினை 80

சத்தசத் தாகவுஞ் சத்தினி லசத்தின்
கொத்துள தாகவுங் கூறின ரிலரால்
வித்திலை கனிநனி விழுதா றருநெறி
சத்தல தொன்று தான்றர வேண்டு
நெற்பதர் பலாலத் திற்குபா தானமென் 85

காரண மின்றிக் காரியம் பிறவா
பாரிடை யொருபடம் பண்ணவும் படுமே
யந்தமில் பிரம மவித்தைகா ரணமெனத்
தந்தனை யவித்தை தானெய் துறுத
றன்னியல் பென்னில் வன்னிதன் வெம்மையிற் 90

சத்தின தியல்புஞ் சத்தே யசத்தெனில்
வைத்தத னியல்பெனும் வழக்கொழி யன்றியு
மிருள்பொதி விளக்கென வருமரு விளக்கிற்
கருமை பயந்த பெருகொளி தகுமெனிற்
றன்னியல் பன்றத னுபாதி வசத்தான் 95

மன்னிய தன்றிமை தான்றனின் மாயா
தொன்று னசுத்த னன்று மன்றே
யாங்கொரு காலத் தோங்கிய தாயி
னந்தமி லவித்தை வந்தணை வதற்கோ
ரேது வேண்டும் புயலியல் பென்னின்வீ 100

டோத வேண்டா வொழிந்தோ ரினுமுறுங்
களங்கம துறவுறு மவித்தைதற் கவித்தல்
விளங்கிய பிரம விளையாட் டாயி
னவித்தை யென்பதொன் றன்னியந் தன்னி
லுதிக்கு மென்றமுன் னுரையு மறந்தனை 105

நுண்ணூற் குடம்பை நுந்துழி போலுட்
படுநெறி யதனுல் விடுநெறி யிலதாற்
தலைமையு மறிவு மிலதென வித்தையை
விடுத்தெடுத் தாணரும் வேற்றே ரன்றே
யொளிகொ டாமிரங் குளிகைபெற் றுங்கத 110

னவித்தையை வித்தை தவிர்க்குமென றுரைக்கி
னித்த னறிவன் சுத்தனென் றுரைத்த
வித்தக மென்னீ வித்தையும் வேறென்
றெம்ம னேரி லொருவ னின்னிறை
யம்ம சைவந் தவனீ யன்றே 115

## பிரமாதா மறுப்பு:— பெத்தம்

பன்மணி பசுநற் பாத்திர மெனவு
நன்னூல் பானீர் நற்கதி ரெனவு
முடலையு முணர்வையு முவமித் தனையேற்
றடமணி சரடொடு தாங்கூ டலவே
யுணர்வுணர் வொழியி னுலகுணர் வுறினின் 120
பாலும் பசுவுஞ் சாலுஞ் சாலக்
கலம்பல வன்றிச் சலம்பல விலதெனக்
காணுந ரின்றி வீணின் விளம்பினை
யாடியு ணிழல்போற் கூடுதல் கூறிற்
றன்னிழல் கொண்டு தற்பணஞ் சலிக்கின் 125
மன்னிழல் கொண்டுடல் வந்தகன் றிடுமே
மன்னயக் காந்த மென்னவுடல் பிரம
சன்னிதி யளவிற் சலித்திடு மாயி
னகண்டிதன் சன்னிதி யலதில தெவையு
நடந்திட வேண்டுங் கிடந்திடப் பெறுவே 130
காந்தத் திரும்பு காட்டுநர்ப் பொறிலயஞ்
சேர்ந்திடு நீக்குஞ் செயலதற் கிலதே
கனுத்துயர் கயிற்றர வெனுச்சில தொடுத்தனை
கனவின் பயனு நனவின் பயனும்
வினையின் பயனவை பொய்யென வேண்டா 135
வுடன்மா ருட்டக் கடனது கருதுக
வுற்ற புற்று மற்றதிற் கயிறு
முடலுங் கூடச் சடமென வறிதி
யறிவு கயிறென் றறியா தன்றே
யச்சம தடைதல் கொச்சமை யுடைத்தே 140

யின்னு மக் கனவி லிருளுறு கயிற்றிற்
பின்னுநின் பிரமம் பிரமித் திடுமே
துன்னிய வினையிற் செம்மலர்ப் பளிங்கெனத்
தானுந் தகைமை யானுன் மலரென
வொருபய னன்றிப் பலபயன் மரீஇய 145

திருவினை தருபய னெனநனி வேண்டி
லாண்ட வித்தையு மவித்தைகொ டாக்கையு
மீண்டிரு வினையு மியம்பினை பரத்தைக்
கள்வரைப் பிணிக்குங் காவல ரெனமுய
ன்றுல்வினைத் தொடக்கிற் றேன்றுடற் சிறையிட் 150

டிருவினை யூட்டு மெம்மா னம்மா
னருவினை யுடற்க ணவத்தைக ளுரைத்தனை
யாருறு பவர்பர மகண்டித மடங்கா
தோர்வில துடல்சட முறுநெறி யாதெனின்
மன்னிய கரண மாருட் டத்திற் 155

பன்னின மென்னி னிவையோ பரமோ
முதவிய தாயி னிவைபிறழ் வெய்தா
திவையெனி லுனது மொழிபழு துளதே
யுடற்படு பிரம முறுமெனிற் சாளரத்
திடத்தகு முறுவிர னுதியளி யெறிதுய 160

ரங்குலி தானே யருந்திடி லுடற்கட்
டங்கிய வறிவு தனித்துறு மன்றே
தற்பண நிழற்கட் குற்றிபாய்ந் தற்று
னற்கணிற் றுயர நணுகாத் தகைத்தெனி
னின்மொழி விரோதமுங் காட்சி விரோதத் 165

தன்மையு முறுமவை தவறில வாகா
யாமுடைப் பதிவகை யாவரும் பலகலை
‡ சொல்லுத லெளிதரி தத்தொழில் புரிவெனப்
புல்லிய பழமொழி புதுக்கினை யன்றே
யகண்டித மெனநீ பகர்ந்தமை தனக்குப் 170

பந்த மிதுவெனத் தந்தமை கருதில்
வானி னடக்குங் காலினைப் பிடித்துப்
பருவிலங் கிட்ட வொருவனீ யன்றே

## சீவன்முத்தி மறுப்பு

பந்தம தகல வுந்து விவேகம்
வான்வளி யெனத்தனிற் றூனே தோன்றின் 175

முன்புள தாயின் மயங்கா திலதெனிற்
பின்புள தாகா திலதுள தெனின்வெளி
மலரது தருமனல் மரக்கணின் றூகித்
தருவது தகுமெனிற் றூனே தோன்றூ
விறகி னுதித்த கனறகு மாயி 180

னவித்தையி னுதித்த வித்தை யம்மரத்
துதித்த விவேகம் வித்தையென் றுரைத்த
வெந்தழ லனைய விவேக முதித்த
திந்தன மனைய திறையிலன் றற்றே
யிற்படப் பிரிப்பின் மெய்ப்படு மெவற்றையு 185

---

‡ 'சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ் சொல்லிய வண்ணஞ் செயல்' என்பது திருக்குறள். 664

மிதுவன் றிதுவன் றெனக்கழி காலை
யதுவே தானே யாயின தென்றனை
வித்தை முன்ன ரவித்தையு மவித்தைமுன்
வித்தையு நில்லா வியனெளி யிருளென
விருளல வொளிக்கு மொளியல விருட்கு 190

மொருகா லத்து மொருபய னிலதா
லிரண்டையு நுகரு முரண்டரு விழியென
வித்தையு மவித்தையு முய்த்ததொன் றுளதே
தானே தானு மானுற் பயனென்
றன்னிற் றன்னைத் தானே காணிற் 195

கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே
தன்னல மதனைத் தானே நுகரு
மென்னின் முன்னல மெய்தா திருந்ததென்
கட்டி போலெனக் கதறினை யின்பம்வந்
தொட்டிடும் வித்தை யுடையயா யிடினே 200

தத்துவ மசியென வைத்தமுப் பதத்திற்
கொன்றே பொருளென் றன்றே பகர்வது
நீபுலி யாயினை யென்றுங் குணரி
லாயினை யென்றது மாகுவ மைத்தா
னேயா யினமே லாயா யென்று 205

லகமே பிரம மாயின தென்றூற்
சகமே யறியத் தான்வே றன்றே
யுண்மையிற் சலமில வுடற்சஞ் சலமுறும்
வெண்மதி போல விளங்கிடு மென்றனை
யசல னுகிச் சஞ்சல சலத்துச் 210

சலன மேவின மௌனமதி காண
வேண்டும தன்றிக் காண்பவர் பிறரே
வீண்டுன தேக மென்செய்த தியம்புக

### பரமுத்தி மறுப்பு

உடல்விடக் கடத்துட் படுவெளி போலெனில்
விட்டென் பெறவுடற் பட்டென் படமற் 215

றிகலற வொருவ னிவ்வகை தெளியி
லகிலமு முத்தி யடைந்திட வேண்டு
மறிந்தோர் முத்தி யடைந்தோ ராயின்

பிறிந்தோ ருயிர்பல பேதத் தன்றே

### பிரமஞானம் வாரா தென்றது

கன்ம காண்டங் காரண மாக 220

மன்னும் விவேக மென்னி லவித்தைக்
கேது காரண மோதினை யில்லை
யிதற்குங் காரணம் விதித்தல்வேண் டின்றே
யரணியி லுதித்த கனலவை கவர்வென
விரதத் துதித்த விவேக மழித்தல் 225

வருந்தி யாயினுந் திருந்திய வேத
நீதி யெல்லா நீத்துப் போதமொன்
றறியார் தாமு மவ்வழி நடத்தல்
பொறியோ போத நெறியோ விதுபவ
நீங்கிடு நெறிதரு பாங்கினைப் பழித்த 230

னன்றி கொன்ற லன்றே யன்றியு
ஞால நீதியு நான்மறை நீதியும்
பாலருன் மத்தர் பசாசரி லெனவு
முறங்கி னேன்கை வெறும்பாக் கெனவுந்
தானே தவிரா தாளுற் புரியா 235

தொழிந்திடி னிரயத் தழுந்துத றிடமே
யுய்த்தோ னன்றி முத்தி யுரைத்தல்
பித்தோ பிரமஞ் செத்தோ பெறுவ
துடலையு நீயே சடமெனச் சாற்றுனை
வையினும் வாழ்த்தினும் கொய்யினும்
[கொளுத்தினும் 240

வணங்கினும் முதைப்பினும்பிணங்குதல்செய்யாப்
பிரமத் தன்மை பெறுவதெக் கால்
மிருக்கு நாள்சில வெண்ணினூல் கதறித்
தருக்கம் பேசித் தலைபறி யுற்றுக்
கண்டோ ரீந்த பிண்டமுண் டலறிப் 245

பன்னே யாக்கை தன்னே யுற்றுடல்
விடவரு மென்று நடுநடு நடுங்கி
விட்டோர் தெய்வத் தொட்டின் றன்றியும்
யானே யெவரு மானே னென்றலி
னவ்வவர் சீறி யவ்வவர் வாளுட் 250

செவ்விதி னிரயஞ் சேர்த்துவ ரதனுல்
மாயா வாதப் பேயா வுனக்குத்
தேவரி லொருவருண் டாக
மேவரு நரகம் † விடுத்தலோ வரிதே.

---

† விடுதலோ.

## ஐக்கியவாதி சங்கற்பம்

### பெத்தநிலை

அரிதேர்ந் துணராப் பெரியோ னுரைத்த (5)
பதிபசு பாச விதிமுறை கிளக்கில்
ஈச னேக னெண்ணிலி பசுக்கள்
பாச மிருவகைப் பரிசின துலகத்
தாயவ னுயிர்க்கு மாயையி னருளால் 5

இருவினைத் தொகையி லுருவினைத் தருமாற்
கருமுகி லடர விரிதரு கதிர்போ
ன்றறிவா முயிரிற் பிறியா தேயு
மீட்டு மிருபய னூட்டிடு நியதிக்

### முத்திநிலை

கொருபொழுது திருபயனுகர்வுற மருவுத 10
லின்மை யாதன் முன்னிய காலைச்
சத்தி நிபாத முற்றிறை யருளா
லுருவுகொ டுலகு தெரிவுற மருவி
மாசுறுந் தூசு தேசுற விளக்குந்
தன்மையி னுணர்த்தும் புன்மைக ணீங்கி 15

நீரு நீருஞ் சேருந் தகைமையி
னறிவினோ டறிவு செறிவுறப் பொருந்தி
யொன்று மென்பதை யுலகோர்
நன்று முத்தி யென ‡ நவின் றனரே. 5

‡ நவிற்றினரே.

## ஐக்கியவாதி சங்கற்ப நிராகரணம்
## பெத்தநிலை மறுப்பு

முத்தி யென்ப தெவனே சுத்த (6)
வறிவெனிற் பாசஞ் செறியா மாயை
யுருவிரு வினையால் வருமிரு வினையு
முருவா லன்றி மருவா திவற்றின்
முந்திய தேதோ வந்தணை வதற்கோ 5
ரேது வேண்டுந் தானியல் பென்னின்
வீடுற் றவரினுங் கூடக் கூடு
மீங்கிவை நிற்க நீங்காக் கருவிகள்
கொண்டறி வறியக் கண்டது மன்றி
மருவிய வுருவு துயில்பெறுங் காலைச் 10
சிறுபொறித் தறுகட் கறையணற் சுடிகைத்
துத்திக் கடுவுட் டுளையெயிற் றுரகக்
கொத்தயல் கிடப்பினுங் குவைதரு நவமணி
யொருபாற் றுதையினும் பெருகார் வத்திலே
டச்சமு மணுகாக் கொச்சமை யென்னே 15
கருவி யாவும் பிரிவுறு நிலையேற்
பொறிபுல ஞதி குறைவற நிறைந்து
காட்சிய தளிக்கு மூட்சியின் முன்னர்க்
கொடுத்தோ ராழி விடுத்தவர் நாடிக்
கொள்வோர்க் காணு துள்கி மீண்டுழித் 20
தந்தவர் கண்டாங் கந்தமி லதனைத்
தருக வென்னும் பெருமதி பிறங்கும
தறிவி லாமையென் றனையது மலமாக்
குறிகொ ளாள ரறைகுவ ரன்றே

## முத்திநிலை மறுப்பு

அறிவிற் கறிவு செறியவேண் டின்றே 25
யுண்மையி லிருமையு மொளியே யெனிலொரு
தன்மை யாகமுன் சாற்றின ரிலரே
முன்பு நன்றுட னென்றிய காலை
யின்ப மெய்துதற் கிலதுயி ராதலி
னீயலை பொருத மாயா வாதி 30
யாயினை யமையு மருணிலை கேண்மதி

## பாடாணவாதி சங்கற்பம்

### பெத்தநிலை

மூல மலத்தாற் சாலு மாயை
கருமத் தளவிற் றருமுரு விறைவன்
செறிந்தி பயனு நுகர்ந்திடு முயிர்க
ளிருளுறு மலத்திற் பருவரற் படுதலி 35
னிடையிரு நோக்குந் தடைபட் டோரிற்
றுயருறு மதனுற் செயிருறு துன்பம்

### முத்தநிலை

கொத்தை மாந்த ருய்த்துறுந் துயில்போற்
காட்சி யென்னக் காணுத் துயர
மாட்சியை முத்தி யெனவகுத் தனரே. 40

## பாடாணவாதி சங்கற்ப நிராகரணம்

வகுத்துரை பெருகத் தொகுத்திடு முத்தி (7)
நன்று நன்றிரு ளொன்றிய மலத்தா

முளத்திற் குறுபொறி செறிபுல னுகர்தல்
விளக்கிற் றிகழு மேன்மைய தன்றே
கருவிக ளகல்வுழி மருவிய துயரமு 5
நன்றென லாகுந் துன்றிய படலத்
திடைதடைப் பட்ட சுடர்விழி மாந்தர்
படல நீங்குதல் கடனு தலினே
காட்சி யென்னக் காணுத் துயர
மாட்சியை முத்தி யெனவகுத் துரைக்கிற் 10
† கரணு பாவ மரணங் கருமர
மேய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே
யனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா
தனிதரு துயர மெனுமிது திடமே
பாடாணத்திற் கூடா முத்தி

**பேதவாதி சங்கற்பம்**

ஈசன தருளாற் பாசத் தொகுதி
செறிவுறு செம்பிற் கறையுறு களிம்பு
குளிகை தாக்க வொளிபெற் ருங்கு
நித்த சுத்த முத்த ராக
வைத்தன ருலகின் மறைவல் லோரே. 20

**பேதவாதி சங்கற்ப நிராகரணம்**

மறைக ளாகமத் துறைகண்மற் றெவையு (8)
நாசமில் பதிபசு பாசமென் றுரைத்த
லயர்த்தோர் குளிகைச் சயத்தாற் றும்பிரக்
காளித நாசம் பாசத் தேய்த்தல்
கூடா தன்றியுங் குளிகை சீருண 5

---

† 'கரணந் தப்பினல் மரணம்' என்பது ஒரு பழமொழி.

28

நீடா தழித்த நிலைநிலை யாதலிற்
பேத வாத மோதுதல் பிழையே
யின்னு மின்னுயி ரேமங் குளிகை
த்ன்னி லந்நியந் தருவது திடமே
வீடித் திறத்தினிற் கூடக் கூடா 10

### சிவசமவாதி சங்கற்பம்

பாசமும் பசுவு மீசனு மென்றிம்
மூவகை யுணர்வுந் தான்முதன் மையவாய்ப்
பாச வைம்புலன் றேசுற வுணர்த்தப்
பசுத்தனி ஞானம் புசித்திடு மன்றே
யினைய ஞானம் பிரிவுற வெரியாச் 15
செந்தழ றகுநெறி யந்தமி லுயிரு
மறிவா யொன்று மறியா தன்றே
யிவ்வா றெழுகு மேனை யுயிர்க்கு
முன்னோன் றனது முதிரொளி ஞான
மறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த 20
வண்டென வுயிரைக் கொண்டிடு முயிரது
தன்னை நோக்கித் தானது வாகி
யைவகைத் தொழிலு மெய்வகை யுணர்வும்
பிரியா வாறு பெற்றுத்
திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே. 25

### சிவசமவாதி சங்கற்ப நிராகரணம்

### பெத்தநிலை மறுப்பு

சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமு (9)
மொருகா லன்றித் தெரிவுற நிற்கி
லொண்பொருள் காணும் பண்பினுக் கொருகாற்
பரிதியு மதியு மெரிதரு விளக்கும்
வேண்ட லின்றே காண்டகு காலை 5

யொன்ருென் ருக நின்றறி வுறுமெனி
லந்நிய மறியா மன்னுயிர் பொறிபுலன்
ருேனே வறியா தலைவர்க் குலகினை
யாஞு வறிவா லறியவேண் டின்றே
கொழுந்தழ றகுமெனி லழுந்திடு மவத்தையிற் 10
றிரியாத் தலைவர் தெரியாத் தன்மைவந்
தெய்தலாகா மெய்யுறு பொருட்கு
முன்னர்க் கீடந் தன்னென வெடுத்த
வேட்டுவ னியல்பு கூட்டல் பெருதே
வண்டிறும் பெடாவுட் கொண்டது தனக்கு 15
மந்திர வாதந் தந்தது மிலதே
யெடுத்திடு மதனு லடுத்ததென் றறையிற்
கருமயிர்க் குட்டி யிருசிறைப் பறவை
யாயின தெடுத்த தாயர்சாற் றிலரே
பிறவிப் பேதத் துறையிவை கிடக்க 20
வேயு மித்திற னுயுங் காலை
யோகத் தகுதி யாகத் தகுமே
ஞான மின்மையென் ருேதுவ தெவனெனில்
உயிரு முணர்வும் பயிலுத லின்றி
வேட்டுவ னுருவ மென்புழு வுணர்வு 25
கூட்டுத லானுருக் கூடுத லானு
முத்தியி லிறையிற் பற்றுத லின்றித்
தன்னுரு வணைந்த பின்னத னுணர்வு
மாறுத லானு மூறுடைத் தன்றே
யீசன தியல்பரு ளெய்துயி ரியற்றல் 30
பேசுத றவறெனப் பெருமறை யறைய
வைந்தொழி லுயிருந் தந்திட றகுமோ
யாவதென் முன்னு ‡ ணுவலர் பெருமான்

‡ நாவலர் பெருமான் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்

பண்டொரு முதலை யுண்டமைந் தனைவர
வழைத்தன னென்றாய் பிழைப்பில ததூஉந் 35
தந்திட வேண்டு மென்றன ரன்றே
யின்னவை கிடக்க முன்னவன் றன்மை
யெய்தின ரெல்லாச் செய்தியுஞ் செய்வ
ரிரும்பெரி யெய்தித் தருஞ்செய றகவெனிற்
பொருணிலை கிடக்க வொருதிட் டாந்தப் 40
பேறே யாயிற் சீருக் கதுவிய
புனலொரு புடைசேர் கனறகு மாயினும்
வேறொரு பொருளை நீறாக் கிலதே
நெருப்பெனு மிதனி னுருத்தனி காட்டுக
வங்கியு மொன்றிற் றங்கிநின் றல்லது 45
தன்றொழி னடத்தா தென்றறி யினிநீ
யிரும்பனற் செய்தி தரும்பரி சுளதோ
வதுவெனோ ரலகை பொதிதருங் காலை
யதன்செய லனைத்து மிவன்செய லாமா
லவனிவ னாகி லிவனவன் செய்திக் 50
கென்னவை யென்னிற் பின்னுறு செயலு
மதன்செய லன்றி யிவன்செய லாகி
லிவன்செயல் பேயின் றன்செய லாகி
யிருந்த வாவெனத் தெரிந்திட வேண்டும் 55
தெரியா தாகிற் புரியிற் கடுங்கன
லெரிந்த தென்னு மிதுதகு மன்றியு
மவனிவ னாகி லிவனவன் செய்தி
யென்று செய்வா னென்றிய மதத்தா
யெல்லா மறிதல் செல்லா துயிர்கள் 60
சிற்றறி வெனுமிச் சொற்றவ றாகு
மென்பதெ னலகை தன்பத மடைந்தோர்
கொண்ட வாறு கண்டன மென்னின்

மூங்கை யந்தருற் றோங்கிய குணங்குறி
செய்வதெ னின்னும் † பௌவமுற் றழுந்தினு
நாழி கொள்ளா தாழியி னலைபுன 65
நானாழி' என்னுஞ் செய்யுள்.
லதனாற் கருத்து முதலுள தாக
வேண்டு மன்றே யீண்டினி யமையு
மெல்லா மெனுமிச் சொல்லாற் படும்பொரு
ளனைத்துந் தாக்காத் தனிப்பரத் துற்றவர்க்
கெவ்வகை யுணர்வு செய்வதென் செப்புக 70
வொன்றி னொன்றா மொன்றா துலகி
னின்ற போதுயிர் நேரா மன்றே
முத்தி யுற்ற நற்றவ ரவையிடைச்
சேர்வ ரென்றனை சார்தரு முத்தி
சாலோக் கியமோ சாயுச் சியமெனிற் 75
பந்த முற்ற கந்தல கழித்த
வறிவினோ டறிவு பிறியாப் பெற்றி
வேண்டு மென்றதற் கீண்டிவ ரிவ்வா
றிருப்ப ரென்பதற் குருத்தான் வேண்டு
மண்ணல தருளி னண்ணி யிருப்பினுஞ் 80
சீவன் முத்தரென் றோதின ரகன்று
நீங்கியு முருவ நீங்கா தாயி
னோங்கிய முத்தி யாவதென் னுரைக்க
செடியுட லணுகாக் குடிலை கொடுக்குமென்
றோதினை நீயே பேதாய் பகட்டுர 85
வொளிர்சினை முச்சித் தளிரெனு மிதுதகு
மிச்சா ரூப நச்சின ரென்னின்

---

† 'ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலி, னாழிமுகவாது நானாழி' என்னுஞ் செய்யுள்.

மும்மலத் தேது மின்மைய தன்றே
யிதுவளர் முத்திப் பதமென வியம்புவ
ரீங்கிவை நிற்க 90

### சங்கிராந்தவாதி சங்கற்பம்

நீங்கா தொளிருயிர்
விளக்கென நிற்கு மளப்புறு மறிவின்
றிறைவர்க் கேது மறியவேண் டின்றே
மன்னு மான்ம சந்நிதி யளவிற்
காந்த பசாசத் தேய்ப்ப வாய்ந்த
வுயிருட லியக்குஞ் செயலுறு பூட்டைப்
பலவகை யுறுப்பு மிலகிய தொழில்போ
லைம்பொறி புலன்க ளின்புறு மன்றே
யினைய வாய்தலி னிகழ்தரு பயனவை
யந்தக் கரண முந்தி யுணர்ந்திடு
மிவையகல் வுழியைம் பொறிபுல னிகழா 100
வுயிர்நீங் கிடினுடல் செயலில தன்றே
யிவ்வகை வினையின் செவ்விதி நடத்தும்
பழமல நீங்க நிகழுங் காலை
யேற்றோர் முகவொளி தோற்றுங் கலனெனத்
தலைவன தருளுயிர் நிலவிடு நிலவக்
காட்டத் தங்கி மாட்டத் தங்கிய
தன்மையு மளத்துப் புல்வையி னீப்பும்
போன்றது வாகித் தோன்றிடு மதனாற்
பசுகர ணங்கள் சிவகர ணங்க
ளாக மாறி யறிவு 110
மேக மாமுயி ரியானென தின்றே.

## சங்கிராந்தவாதி சங்கற்ப நிராகரணம்

இன்றுன துரையி னன்றி யுயிரொளிர் (10)
தீபம் போலத் தாபந் தரினிருள்
செறியுந் தன்மையெ னறிவில தாகி
லொளியென † வுரைத்த தெளிவதற் கேதாஞ்
சந்நிதி யளவின் மன்னுஞ் செயலுடல் 5
காந்தம் போல வாய்ந்த தென்ற
தன்மையு முணராப் புன்மைய தன்றே
யுயிருட லியக்கிற் றுயில்பெறுங் காலைச்
செய்ததென் மனுதி யெய்துயிர் பொறிபுல
னடத்த வாவியுஞ் சடத்தன வாயிற் 10
பூட்டையிற் பூணி கூட்டல் பெருதே
புலனைம் பொறியி னிலவிடு மென்றனே
யஞ்சு மொருகாற் றுஞ்சா தறிதற்
கழிவென் றருச்செழு மலரிலே யொடுபலங்
கனிதரு வதுபோ லினையவை யைந்து 15
மொன்றென் ருக நின்றறி வுறுமெனி
லொன்றின் பயனளி யொன்றறி யாதா
லிதுவே யல்லது கதுமென விருசெவி
யிருகூற் றெருகாற் றெரியாத் தன்மைவந்
தெய்து மனுதியு மெய்யுயிர்ச் செயலுந் 20
தனக்கில தொருவற் கெனத்தெளி கிலேயே
நோக்கு முகவொளி நீக்கா தானெனக்
கவருந் தன்மை முகுரம் போலக்
கொடுத்தது கோடற் கடுத்துதுண் டன்றே 25
காட்டத் தங்கி கூட்டக் கூடு

† உரைத்தல்

மிந்தனத் தியற்கை வெந்தழ ருங்கா
வுப்பளத் தடுத்த புற்பலா லங்கள்
சடத்த வேனுங் கொடுத்தது கொள்ளுந்
தன்மை யுண்டுனக் கின்மைய தன்றே
யவமுறு கருவி சிவமய மாமெனக் 30
கூறினை யாகம் வேறுருக் கவரா
தென்பதே னவைமுற் றுன்பந் துடைக்குந்
திருவருண் மருவ வுரியன வென்னி
லருளுரு மாயா விருளின தாங்கொல்
சத்த பரிச ரூப ரசநறை 35
யெத்திறத் தினதரு ளியம்புக வன்றியு
* நிறைந்து நீயாய் நின்றனை யேனு
மறைந்தைம் புலனுய் வாரா யென்றுங்
‡ கரண மெல்லாங் கடந்தனை யென்றும்
† மரணமை யைந்தி னப்புறத் தென்றும் 40
முன்னருட் டலைவர் பன்னின ரெனவு
மினையவை யொழிய வறிகுவ தெவ்வா
றென்ற நிற்கலிக் கொன்றிய வின்பங்
கூறுத றகுமருட் பேறினை யன்றே
யேக முயிரறி வாக மொழிந்தனை 45
யிருபொரு ளொருமை மருவிய திலதே
யிவ்வகை கிடக்க மெய்வகை கேண்மதி

ஈசுவர வவிகாரவாதி சங்கற்பம்

பலீறுளைக் குடத்தி னுள்விளக் கேய்ப்ப
வறிவுள தாகு முருவுறு முயிர்கள்
கண்ணு லோசையுங் கந்தமுங் கருத 50

---

* கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி. 48. ‡ திருக்கோத்தும்பி. 9. † திருநாவு. திருவாரூர். பண்-காந்தாரம்.10.

வொண்ணு தென்னு முணர்வுடை மையினு
லவ்வப் புலன்கட் கவ்வப் பொறிகள்
செவ்விதி னிறுவிச் சேர்ந்தவை நுகரு
மூல மலத்தின் பாகம்வந் துதவுழீஇ
யிருடரு மிற்புக் கொருபொருள் கவரத் 55
தீபம் வேண்டு மானவா போல
மோக மாமலம் போக ஞான
விளக்கர னருளாற் றுளக்கறப் பொருந்தி
நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச்
* சலமில னாகிச் சார்ந்தவர்க் கென்று 60
நலமிக நல்கு நாதனை யணைந்து
பூழி வெம்மை பொருந்தா துயர்ந்த
நீழல் வாழு நினைவினர் போலத்
திருவடி நீழல் சேர்ந்து
கருவுறு துயரங் களைந்திருந் திடுமே. (11)

### ஈசுவர வவிகாரவாதி சங்கற்ப நிராகரணம்

இருந்ததுன் கேள்வி திருந்திடு முயிர்க
ளறிவெனில் வாயிற் பொறிபுல னென்னை
மற்றவை பற்றி யுற்றறிந் திடுதலி
னறிவென வழங்கு முயிரென வுரைத்தல்
காணுங் கண்ணினன் கைகொடு தடவிப் 5
பூணும் பொருளின் பெயர்பல புகற
லென்னுங் கிளவி தன்னொடு தகுமே
யவ்வப் புலன்கட் கவ்வப் பொறிகளைச்
செவ்விதி னிறுவலி னறிவெனச் செப்பினை
யறிவி லாமைகண் டனமனை புலற்குப் 10

* 'சலமிலன் சங்கரன்' என்று தொடங்கும் தேவாரம் - திருநாவுக்கரசு. பஞ்சாக்கரப் பதிகம்.

பொறிக ளேவலி னறிவொடு பொருந்திற்
கண்டதோர் பொறியாற் கொண்டிட வேண்டு
முதவிய தொன்ருற் கதுமென வியற்றின
ருண்டோ வென்னிற் கண்டன மேனுட்
கடவுளிற் கடிமலர் முடுகிய மதன 15
னங்க மனங்கந் தங்கிடக் கிடந்தது
வையின் றிரளிற் செய்ய சிறுபொறி
மாட்டி மூட்டின தன்றே மீட்டுந்
தேனமர் தவிசி ஞன்முக னுச்சி
யறுத்ததுங் கருவி பொறுத்தோ வன்றே 20
யீசன தியல்பு பேசுத றவிர்க
காழி மாநகர்க் கவுணியர் கடவுண்
ஞான மாகிய நற்பதி கங்க
ளெழுதுறு மன்பர்த மின்புறு மொழியாற்
களிறென வணைந்த கன்மனப் புத்தன் 25
முருட்டுச் சிரமொன் றுருட்டின ரன்றி
வாய்ந்த வாளொன் றேந்தின ரிலரே
யென்றது மீர்வாள் கொன்றதென் பதுபோற்
றனித்துணை யருளாற் றுணித்தன ரென்ப
வாதலின் வாயி லளவினி லறிதலி 30
லேதமி லறிவுயிர்க் கெய்துத லிலதே
யிருட்கு விளக்கொன் றேந்தினர் போல
மருட்கு ஞான மன்னுத லுளதே
யென்றனை கருவிக ளியாவு மசேதனந்
துன்றிய வுயிருந் துரியத் தன்மைய 35
ளுதலி னந்த ரனைவருங் கூடித்
தீதற வருநெறி தெரியுமென் றற்றே
நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச்
சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடு மென்றனை 40
பாதவ மென்றுஞ் சேதன மின்மையின்

இளைத்தோர் வம்மி னென்பதுந் துன்பம்
விளைத்தோர் தம்மில் வெறுப்புமொன் றிலதே
பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம்
வெய்ய பூழியி னுள்ளுற வழுங்கி
யாற்றுத லின்றி யாறியங் கினர்முன் 45
றேற்றிடு மென்று சொல்லவு மிலதா
லிவ்வகை கடவுட் கியம்புதல் தவறே
பாச ஞானப் பழிவழி யொழிக
வீசன தருள்வழி யியம்புவன் கேண்மதி

நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்பம்

புவன மியாவையும் புனிதன துருவாஞ் 50
சிவமுஞ் சத்தியு மெனத்தெளி யவற்று
ளசேதன மென்றொன் றறைதற் கிலதது
சேதந னுகர்பொழு திரண்டுமோர் திறத்தே
யிதுவெனு மொன்றை யதுவாய்ப் படுத்துப்
பொதுமையி னிற்கும் போதமென் றறிக 55
பொற்பணி பேதம் புரைவழி யொருவழி
நற்பொனிற் றிகழ்வென நயப்பதொன் றன்று
லாவது மாகா தொழிவது மெனுமிப்
பாவக முண்மை பாரா தோர்க்கே
பாரா தோரெனப் பல்லுயிர் பகர்தலி 60
னாராய்ந் துரைக்கி னவைபிற வல்ல
பலபல பேத மிலவென் போருமில்
கண்ணின தொளியைக் கண்ணின தெனிலது
திண்ணிய விருளிற் செறிபொரு டெரித்தலு
மின்மை மின்மினி யெனவிரு கண்மணித் 65
தன்மை தானுந் தாவில ததனாற்
கண்ணின துருவு மதிற்கதி ரொளியும்

நண்ணருஞ் சத்தி சத்தர்க ணடிப்பே
[1] யுலகே ழெனத்திசை பத்தென வொருவன்
பலவாய் நின்ற படியிது வென்றும் 70
[2] ஊனு யுயிரா யுணர்வா யென்றும்
[3] மானக் கண்ணே மணியே யென்றுந்
[4] தாமே தாமாய்ச் செய்தன ரென்றும்
[5] நாமே சிவமாய் நண்ணின மென்றுங்
[6] காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வு 75
மோயா துண்போன் றானே யென்றும்
[7] அறிவோன் றானு மறிவிப் போனும்
அறிவா யறிகின் றோனு மறிவுறு
மெய்ப்பொரு டானும் வியந்திது வெனப்படு
மப்பொரு ளியாவு மவனே யென்றுந் 80
[8] தாய்தலைப் பட்டங் கொன்றாய்த் தென்றும்
[9] ஏதம தறநான் கெட்டே னென்றும்
மின்னு மின்னு மிறையோ னளித்தவை
பன்னி லெண்ணரும் பான்மைத் தாதலிற்
றருபொருள் கொள்பொரு டருவோன்
[கொள்வோன்

---

[1] திருவாசகம். திருத்தோணோக்கம். 5
[2] திருநாவு. தே. திருவானைக்காத்தாண்டகம். 2
[3] திருநாவு. தே. திருவாவடுதுறை தாண்டகம். 1
[4] திருஞான. திருப்பிரம. திருத்தாளச். 7
[5] திருவாசகம். திருத்தெள்ளேணம். 4
[6] திருநாவு. தே. நின்ற திருத்தாண்டகம். 5
[7] பதினொராந் திருமுறை. காரைக்காலம்மை. அற்புதத் திருவந்தாதி. 20
[8] கருவூர்த் தேவர் திருவிசைப்பா. கங்கைகொண்ட [சோ. 7
[9] திருவாசகம். திருத்தெள்ளேணம். 18

ஒருபொரு ளிவ்விய லுவப்பென வுணர்க
நுகர்பொருள் சத்தி நுகர்வோன் சத்தனென்
றிகலறு முணர்வுவந் தெய்துத லரிதே
நானவ னெனுமிது நவைவழி நல்வழி
தானவ னுகை யிதுசா யுச்சிய 90
மித்திறன் றெளிய வுய்த்திடு மளவு
மியாதொரு வகையி னீதிய தாகத்
தானறி வழியே தலைநின் றென்று
மூனுயிர் சிவத்தி லொடுங்கிட நடத்தி
மூடு முழுமலம் வீடுங் காலைக் 95
கருவிக ளளவிற் புரிதரு மறிவு
சாக்கிரங் கனவு நீக்கமில் சுழுனை
துரிய மென்றவை பயிறரு மறிவு
துரியா தீதந் திரியாத் தன்மையி
லிறையரு ளுதவுங் கறையற மாறி 100
யறிவே யாகும் பிறியாக் கருவிக
ணிறைமுத லவத்தையி லறிவில தாகத்
துரியா தீதத் தோற்றந்
திரியா ததுநற் சிவகதித் திறனே.

## நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்ப நிராகரணம்

(12)

திறம்பெற நீயிங் கறைந்தமை கருதிற்
புவன மியாவையும் புனிதன துருவெனி
லவன்முதற் காரண மன்று மென்னி
னிமித்த காரண நிகழ்த்துக வெனநீ
யவனே காரண மனைத்துமென் றறைந்தனை 5
மண்டனிக் குலாலன் றண்டசக்க ராதி
காரண மூன்று மோர்பே ரணைந்ததித்

தாரணி யதனிற் கண்டது சாற்றுக
வத்த னியற்று மித்தொழில் பிறர்க்கோ
தனக்கோ வீணே வெனக்கீ தியம்புக 10
வீணெனிற் பித்தர் மாண்பறுந் தொழில்போற்
றலைமையு மறிவு மிலதென விகழ்வர்
தனக்கெனி லஃதுமு னிற்பதொன் றன்றே
தன்போ லறிஞருந் தலைவரு மிலரான்
மின்போ னிலைமையை வேண்டலும் பழுதே 15
பிறர்க்கெனிற் பிறரும் பிறர்க்காம் பொருளும்
பொருட்கமை கருவியு மதற்குபா தானமுஞ்
செய்கையு மென்றோ ரைவகைத் தானொடு
மாறுச் சைவர் கூறு ரென்று
னின்சித் தாந்த மவசித் தாந்த 20
மென்சித் தான்ற வசித்தைமற் றீனு
தசித்தில தென்னி லசித்ததென் னுலகி
லுலகா யதனும் பூதக் கூட்டஞ்
சலமேற் கொப்புட் டகுமெனச் சாற்றினன்
தீய கருமச் சீனர்சா வகர்பிறர் 25
நேய மில்லென நிகழ்த்தின ரிலரே
காண்டல் விரோத நிற்பிறர் கணித்தில
ரீண்டுன துரைக்குமற் றியார்கரி யுடலுஞ்
சித்தோ சித்தின் சேர்வாற் சித்தெனிற்
கடப டாதியு முடற்கட் சிதைவென் 30
தாபர வுயிர்போற் றநுவொழிந் திவற்றின்
மேவிய வுணர்வு விரவிடு மென்னிற்
சடத்துயிர் போலெனச் சாற்றினே யாகலி
னுடற்குயி ரிறையை யொழிந்துண் டன்றே
தருதிட் டாந்தமுந் தாட்டாந் திகமும் 35

ஒருபொரு ளாகி லுவமை பெருதே
யொன்றே யாகி லுடற்கிறை தாபரத்
தொன்றிய நிலேயில் விசேடமென் னுரைக்க
பூதச் சேர்வைப் பேதமென் றறையிற்
சேர்வைப் பேத மென்கொடு செப்புக 40
கருமத் தளவில் வருமெனிற் பித்த
ருரையிற் றிகழு முணர்வொழிந் தனேயே
கருமஞ் செய்வோன் கடவுளன் றுடலு
மருவினின் றிருவினே வளரா நுகரா
கடவுளு முடலின் கண்படா றுஞ்ச 45
லிடர்நல முறுத லிறங்குத லேறுத
லெவ்வகை யேனுஞ் செய்கையின் ருதலும்
பலகலே யுலகி னிலவுத லானு
மெண்ணரும் பொருளு மிரவியு மொழியக்
கண்ணென வொன்று காண்கையி ளுலும் 50
பாசப் பகுதியு மீசனு மொழியப்
பசுவு முண்டென் றிசையவேண் டின்றே
யிதுவெனு மொன்றை யதுவாய்ப் படுத்துப்
பொதுமையி னிற்கு மாயையின் பொற்பெனப்
பொற்பணி யாவும் பொன்னுந் தன்மையி 55
னிட்கள சகளத் திருவுரு நிலேயு
மீச னேயெனப் பேசுவ ரன்றி
யுருவுரு வாகி வருமுல கென்னி
லனேத்து மாயை யெனத்தெளி கிலேயே
யாவது மாகா தொழிவது மிலதெனும் 60
பாவக முலகா யதனது பான்மை
கட்கொலே வெகுளி காமங் களவுக
ளுட்படு மிவைவிட மொழியா தாரிலர்

சோம பானஞ் சுராபா னங்க
ளாமென மறைக ளார்செவிப் பறைந்தன 65
மறையோன் புலைச்சியை மருவு மென்பது
முறையோ வெனிலது புனைமொழி யென்னிற்
சாதி பேத நீதிநீ தவறினு
மேதியை யேறு விழையா விரும்புங் 70
கண்ணின துருவு மதிற்கதி ரொளியு
நண்ணருஞ் சத்தி நாடக மெனிலதற்
கேதுவும் பயனு மோத வேண்டும்
நின்மொழி விரோதமு நீடுல கியற்கையுந்
தன்மசாத் திரமுஞ் சகலமு மென்செயும் 75
‡ உலகே ழெனவிறை பலவாந் தன்மை
கடமொடு சாரவங் கலச மாதிக
ளடலுறு குயவ னுயின னென்றாற்
றானே யாகா வவைதா னுகா
னுயின னென்ப தாக்கின னெனவே 80
யானு யென்ப தனைத்து மவ்வகை
தானு காமையைச் சாற்றிடு மென்க
தாமே யெனுமித் தனியே காரம்
அழிந்தில ரதுவே யாய்த்தில ரதுவிட்
டொழிந்திலர் பிரிவில ரெனுமிவை யுணர்த்துங் 85
காயும் பழமுஞ் சுவையு நுகர்வ
தாயவன் றானு மவன்முதற் றென்னும்
அகிலமுந் தெளிய வறிவோன் றானும்
அகிலமு மறிஞரை யறிவிப் போனும்
அறிஞர்க் கறிவா யறிகின் றோனும் 90
அறிவிற் கறிபொரு ளாவோன்றானு

‡ திருவாசகம் - திருத்தோணோக்கம். 5.

மகிலமு மேனி யானவ னென்னுந்
தருபொருள் கொள்பொருள் தருவோன்
[கொள்வோ
னொருபொரு ளாயி னுவப்புண் டெங்க
நுகர்வோன் தனக்கு நுகர்பொருள் வேண்டிற்
றிகலறக் கிடையா திருந்ததெ னிரையமும் 95
வேண்டா ராயினு மெய்யுறு வியாதிக
ளீண்டா தொழிபா திறைக்கிவை யீடல
சத்தியுஞ் சிவமுந் தாமே நுகருமென்
றித்திற னுணர்வுவந் தெய்துவ தெவர்க்கோ
தமக்கே யென்னிற் ருமுண ராமையு 100
மமைப்பற வுணர்தலு மவர்க்கடை வன்றே
நானு மவனு நவையு நலனுந்
தானவ னுகையு நின்சா தனத்தில்
சகயோ கத்தைச் சாயுச் சியமெனப்
பகர்வது பதிபசு பாசத் தவர்க்கே 105
யாதொரு வகையென வோதிய திறைநூல்
சொன்னவற் றென்றன் றென்னில்வீ டெளிதே
தானறி வழியே தலைப்பொருள் பிடித்து
மேனிகழ் பலமும் வீடளித் திடுமே
நிலையாக் கருவியை நிலையாக் கருதிப் 110
புலையா டுதலு முலகா யதன்பொருள்
குட்டிய மின்றிநற் கோல மெழுதுத
லிட்டம தாயிற் கருவியு மிடங்களுங்
கருத்துற வுரைக்கத் தெரித்திடு மதீதத்
தறிவொன் றில்லோர்க் கிறையரு ளுதவுதல் 115
பிறிவறி வரிய செறியிரு ளிடத்தோ
ரந்தகர்க் காண வந்தோ ரெம்மை
நீவிருங் காண வேண்டு மென்றுங்
கெடுத்தோர் தீபங் கொடுத்ததை யொக்கும் 120
இச்செயற் கிறைவன் கொச்சைய னன்றே

கருவி வசத்திற் றெரிவுறக் காண
வேண்டுந ரிலரா லீண்டறி வியாவுஞ்
சிவமே யென்று செப்பினை யவமுறு
பொறிபுல னறியா வறிவது பிரம
மென்றோர்க் குன்போ லிடர்ப்பட லிலதே 125
யேற்றங் கருவி யிருபதோ டிரண்டும்
போற்றுமைந் தவத்தையும் புகறிரி மலமு
மீசனு முயிரும் பேசினை யஃதொழிந்
தொன்றே யாகு மென்றநின் னியல்பு
தாயர் மனைவியர் தாதியர் தவ்வைய 130
ராயவ ரெவரையு மோர்மையிற் காணுங்
கோகழி தூர்த்தர் கொடுந்தொழி றகுமே
யாக மற்றத னருணிலை தன்னிலை
யேக நாயக னாகிய விறைநிலை
நாசமில் பாசம் வீசிய வியனிலை 135
யினையவை யொன்று நினைவினு மின்றி
யுண்டெனு முணர்விற் கண்டது கருதி
விழுக்கெனும் புலன்வழி யொழுக்கமு மதுவாக்
கொண்டு பண்டையி லெண்டரு மடங்கு
வந்தவர் செய்த தந்தையை யன்றே 140
புன்மைக ணீங்க வுண்மை கேண்மதி

## சைவவாதி சங்கற்பம்

அறிவா யறியு மறிவுயிர் கேவலத்
தறிவில னிருளொடும் பிரிவில னண்ணல்
கலைமுத லாக நிலவிய கருவிகள்
விளக்கென வுதவுந் துளக்கறப் பொருந்தி 145

இருவினை நுகர்வில் வருவினை செய்து
மாறிப் பிறந்து வருநெடுங் காலத்
திருண்மல பாகமுஞ் சத்தி நிபாதமு
மருவுழி யருளுரு மன்னவ னணைந்து
செல்கதி யாய்ந்து பல்பணி படுத்திக் 150
கருவியு மலமும் பிரிவுறப் பிரியா
ஞான நல்கலுந் தானது நோக்கித்
தன்னையு மதனையுந் தன்முதற் பொருளையு
மின்னவென் றறியா விருவரு முயங்கி
யொன்ரு யுறுபய னுவப்பு 155
மின்ருய் நிற்கு மிதுசிவ கதியே.

## சைவவாதி சங்கற்ப நிராகரணம்

இதுகதி யாக முதலறி வுயிரேற்
பொறிபுல னீங்க வறிவுயி ரன்றே
யடைகாய் நூறி னிடைசேர் சிவப்பென
விந்தியத் தொகையின் வந்தறி வொன்றுநின்
றின்ரு மென்ற லன்றே யெந்தை 5
யறிவில னதீதச் செறிவிலென் றுரைத்த
நின்மொழி விரோதமும் பின்முன் மலைவு
மன்வயி னிகழா மலமிரு ளிறையொளி
யான்மா விளக்கிற் றகுமருட் கலாதிக
ளீனமி லிவனிடத் தெவ்வா றிசைந்தன 10
விசைந்த தாயினு மிசையா தாயினு
மசைந்திடு முத்தி சாதன மவமே
சத்தி நிபாதமோ தகுமல பாகமோ
வுய்த்த காரண காரிய மோதுக
பாகங் காரண மாகின் மற்றது 15

கருவி வசத்திற் றெரிவுறக் காண
வேண்டுந ரிலரா லீண்டறி வியாவுஞ்
சிவமே யென்று செப்பினை யவமுறு
பொறிபுல னறியா வறிவது பிரம
மென்றோர்க் குன்போ லிடர்ப்பட லிலதே 125
யேற்றங் கருவி யிருபதோ டிரண்டும்
போற்றுமைந் தவத்தையும் புகறிரி மலமு
மீசனு முயிரும் பேசினை யஃதொழிந்
தொன்றே யாகு மென்றநின் னியல்பு
தாயர் மனைவியர் தாதியர் தவ்வைய 130
ராயவ ரெவரையு மோர்மையிற் காணுங்
கோகழி தூர்த்தர் கொடுந்தொழி றகுமே
யாக மற்றத னருணிலை தன்னிலை
யேக நாயக னாகிய விறைநிலை
நாசமில் பாசம் வீசிய வியனிலை 135
யினையவை யொன்று நினைவினு மின்றி
யுண்டெனு முணர்விற் கண்டது கருதி
லிழுக்கெனும் புலன்வழி யொழுக்கமு மதுவாக்
கொண்டு பண்டையி லெண்டரு மடங்கு
வந்தவர் செய்த தந்தையை யன்றே 140
புன்மைக ணீங்க வுண்மை கேண்மதி

### சைவவாதி சங்கற்பம்

அறிவா யறியு மறிவுயிர் கேவலத்
தறிவில னிருளொடும் பிரிவில னண்ணல்
கலைமுத லாக நிலவிய கருவிகள்
விளக்கென வுதவுந் துளக்கறப் பொருந்தி 145

இருவினை நுகர்வில் வருவினை செய்து
மாறிப் பிறந்து வருநெடுங் காலத்
திருண்மல பாகமுஞ் சத்தி நிபாதமு
மருவுழி யருளுரு மன்னவ னணைந்து
செல்கதி யாய்ந்து பல்பணி படுத்திக் 150
கருவியு மலமும் பிரிவுறப் பிரியா
ஞான நல்கலுந் தானது நோக்கித்
தன்னையு மதனையுந் தன்முதற் பொருளையு
மின்னவென் றறியா விருவரு முயங்கி
யொன்ரு யுறுபய னுவப்பு 155
மின்ருய் நிற்கு மிதுசிவ கதியே.

### சைவவாதி சங்கற்ப நிராகரணம்

இதுகதி யாக முதலறி வுயிரேற்
பொறிபுல னீங்க வறிவுயி ரன்றே
யடைகாய் நூறி னிடைசேர் சிவப்பென
விந்தியத் தொகையின் வந்தறி வொன்றுநின்
றின்ரு மென்ற லன்றே யெந்தை 5
யறிவில னதீதச் செறிவிலென் றுரைத்த
நின்மொழி விரோதமும் பின்முன் மலைவு
மன்வயி னிகழா மலமிரு ளிறையொளி
யான்மா விளக்கிற் றகுமருட் கலாதிக
ளீனமி லிவனிடத் தெவ்வா றிசைந்தன 10
விசைந்த தாயினு மிசையா தாயினு
மசைந்திடு முத்தி சாதன மவமே
சத்தி நிபாதமோ தகுமல பாகமோ
வுய்த்த காரண காரிய மோதுக
பாகங் காரண மாகின் மற்றது 15

காலா வதியிற் கர்யா வதியின்
மேலா மென்னும் வினையுறு மவதியிற்
றுயரென வுயிர்க்குத் தோன்றிடு மவதியி
னயமிகு மிறைவ னல்கிடு மவதியி
லேதிற் கூடு மோதுக விருவினை 20
யொத்த வெல்லையில் வைத்தன ரென்னி
லருவினை தூக்க வருவினை நில்லா
வொருவினை புரிகா லிருவினை யாகா
வொப்புறு மாறு செப்புக தேசிக
னருளுரு வென்ற பொருளினை யாயின் 25
மாயா வொருவன் மாயா வுருவினை
யேயா னேய்ந்தவ ரெம்ம னோரே
பல்பணி ஞான காரண மென்னிற்
றொல்பணி தொறும்பயன் றொடுப்பத னாலு
மொருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரு 30
மரச ராய தருணத் தலைவரு
முதிர்பர சமயத் திதமுறு மரசரு
ஞானம் பெற்ற நன்மையி னாலு
மீனமில் பணியருட் கேதுவன் றென்றான்
ஞானேற் பத்தி நிமித்தமித் தொழிலென 35
வேனோர்க் கிறைநூ லியம்பிற் றென்னுங்
கருவியு மலமும் பிரிவுற வருடரு
மென்றனை கேவலத் தேது மறிவிலன்
றுன்றிய சகலத் தருணிலை தோன்றா
வெவ்வ வத்தையி லிறையருள் பெறுகுவஞ் 40
செவ்விய ஞான தரிசந மாவது
நால்வகை மாயைப் பால்வரு ஞானம்

பண்டை ஞான மிதுவறி தாவரக்
கண்ட ஞான மிதுவரக் காணி
லீன ஞானிக ளென்போர் யாருமின் 45
ஞான வேற்றுமை நாடலு மரிதே
தானு ஞானமுந் தலைவனு மென்றனை
ஆனபி னிவனு மிவனது ஞானமும்
பாசமும் பாச ஞானமு மென்றிவை
பேசுவ ரொன்றுப் பெற்றிய வாகலின் 50
மும்மைப் பொருட்கு மும்மைத் தன்மை
செம்மைத் தென்னிற் செலவுக ளெழுதுக
இருவருங் கூடி யொருபய னுய்த்தென்
றருளினை யிவ்வா றபேதிக ணிலையே

## சித்தாந்த சைவாசாரியர் அநுக்கிரகம்

பதிபசு பாச முதிரறி வுகளுட 55
ஞரு முன்னர்க் கூறுப் பின்ன
ரிருபொரு ணீத்துமற் றெருநால் வகையு
மீனமின் ஞாதுரு ஞான ஞேயமென்
றிசைய மூன்றுய்ப் பசுபதி யென்றவற்
றிரண்டா யிரண்டு மொன்றிஞென் றுகத் 60
திரண்டாம் பயனெனுந் திருவரு டௌியிற்
† சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் [தொன்று
மென்றிறை யியற்கை யியம்புதல் தகுமே

---

† திருவாசகம் 392.

ஒன்று மென்ற லன்றியு முவப்பு
மின்று மென்று லென்பய னியம்புக 65
வென்றனை வினவு மியாவும் விளங்க
வென்றிகொள் கருத்தின் விரும்பினை யாயி
னதிக்கரை யானெனக் கொதித்தல மந்து
வெண்ணெயம் பதிதிகழ் மெய்கண்ட வனரு
ளுண்ணிலை யுடையோ னொருவ னுரைத்த 70
தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமி ழுண்மையை
யருளுட னுய்ந்து கொள்ளத்
‡ திருவருள் வினவ றிருந்திடு மன்றே. (13)

---

‡ திருவருட் கேள்வி என்றுணர்க.

சங்கற்ப நிராகரணம்

முற்றிற்று

மெய்கண்ட சாத்திரம்

பதினான்கும்

முற்றும்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# துகளறு போதப் பொருள்வைப்பு முறை

திருவருள் விளையுந் திறம்பல வெனினும்
ஒருவகை யிருபத் தெட்டுடன் பிறவும்
ஆமவை பூதம் ஐந்தின் பழிப்பே
தாமிட மாகச் சார்பொறி யறுத்தல்
எழுவளி முயற்சியி னியைந்திடும் பொருள்களிற்
சுழல்வுறு மந்தக் கரண சுத்தியும்
பலகுணம் விடுக்கும் பகுதியைத் தோற்றும்
கலைமுத லேழும் கழன்ற நிலையும்
சுத்த தத்துவ தூடண மைந்தும்
தத்துவா தீதமுஞ் சார்முத்திச் சகலமும்
சகல தெரிசனந் தானருட் கேவலம்
திகழ்கே வலத்தின் தெரிசன மதீதம்
தன்னுண்மை யொடுசை தன்னிய தெரிசனம்
என்னும் பன்மூன் றெனவரு மவத்தையும்
உரைதரு ஞான தெரிசனத் தோடும்
பரைதெரி சனமே பரையில் வியாத்தி

---

16 ஆவது அடி பரையில் யோகம் பரையில் போகம் என்றிருத்தல் வேண்டும்.

நிருமல சாக்கிரஞ் சாக்கிரா தீதம்
பகர்சுத் தாவத் தைசுக ரூபத்
தோடு சொல்சுகா தீதம் பகர்சிவப்
பேறு பரமா னந்த தெரிசனம்
பரமா னந்த யோகம் போகம்
பரமா னந்த மேலீ டவசம்
ஆனவிப் பதினைந் தவத்தை கூடத்
தான் எழுநான்கு எனச் சாற்றிய பின்னர்
அஞ்செழுத் தியல்பும் அருளாந் தேசிகர்
தஞ்சிறப் பறிந்து சாரும் புதல்வர்
அவர்பணி நிற்றலு மாதியி லியற்றும்
தவநெறி மூன்றுஞ் சதமெனு மளவில்
துகளறு போதச் சுருதியிற் சென்ற
அகலிடத் தவருக் கருள் கூர்ந் துரைத்தனன்
கங்கைமெய் கண்ட கடவுளர் கருணையின்
இங்கெமக் கருளிய விறையோ னிருவகைத்
துறவும் பூண்ட தோன்றலோர் கணத்தின்
அறுபது முனிவர்க் கழகிய மன்றுள்
ஆடிய பாதம் அருள்சிற் றம்பல
நாடி யென்றுயர் ஞானதே சிகனே.

---

**அவத்தரம் இருபத்தெட்டு எனக் கொண்டவர்**
**அவத்தை ஐந்தனுள் அடக்கும் வகை**

சாக்கிரந்தான் ஈராறு சார்சொப் பனம்ஆறு
நீக்குஞ் சுழுத்தியொன்று நேர்துரியம் — நோக்கி
ஒருமூன் றதீதந்தான் ஓராறும் நாலேழ்
தருமே துகளறுபோ தம். 1

## துகளறு போதப் பாடற் பகுப்பு

பாயிர மூன்றும் பூத மேழும்
பொறியின் மூன்றுங் கரணங் கலாதி
சுத்த தத்துவம் தத்துவா தீதம்
சகலம் கேவலம் தரிசனம் அதீதம்
தன்னுண்மை யாம் ஒன் பதும் இவ் விரண்டாம்
சைதன்னிய மூன்றும் ஞான மாறும்
பரையி னுலும் வியாத்த மொன்றும்
யோக மொன்றும் சாக்கிர மிரண்டும்
அதீத மொன்றும் பரையா தீதம்
இரண்டும் சுத்த வவத்தை யொன்றும்
சுகசொ ரூபம் நாலும் அதீதம்
இரண்டும் சிவப்பே ருறும் பரமா
நந்தம் நாலும் யோகம் இரண்டும்
போகம் அஞ்சும் மூன்றுமே லீடாம்
அவசம் இரண்டும் அணுவும் அட்சரம்
குருதுதி சீடன் முத்தன் குருவழி
திருமேனி யருமை குருவே குருபணி
அதுவது ஒன்றும் யோகம் மூன்றும்
கிரியை நாலும் சரியை மூன்றும்
ஆக நூறாய் அறைந்தனர் போதம்.

### முப்பது அவதரமாக் கொண்டவர் ஐந்தவத்தையுள் அடக்கும் வகை

சாக்கிரம் பத்தொன் பதுகனவு தான்ஒன்று
தூக்குசுழி ஒன்று துரியம் எட்டு — நீக்கித்
துரியாதீ தம்ஒன்று சுத்தவத்தை முப்பான்
சரியித் துகளறுபோ தம். 3

---

காப்புடன் சேரின் நூறுபாடல் ஆகும்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

சீகாழிச் சிற்றம்பல நாடிகள்

அருளிச்செய்த

# துகளறு போதம்

## காப்பு

எல்லாம்பொய் என்றே எனைக்காட்டி எம்பிரான்
சொல்லாத பேரறிவு தான்சொல்லி — நல்லதொரு
அற்புதமாம் ஆனந்தம் ஆங்கருத்தல் செப்புதற்குக்
கற்பகத்தின் தாளிணையென் கண்.

## நூல்

### பாயிரம்

பதிபசு பாசந் தெரிந்தந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேரும் — கதிவழங்கும்
மெய்கண்டான் சந்தானம் மேவிச் சிவானந்தம்
கைகண்டார் காணூர் கரு. 1

உற்ற சரியை ஒழியாத நற்கிரியை
குற்றமிலா யோகக் குறிநெறியும் — முற்றிப்
பிறந்தார்கள் தாம்அறியப் பேசுகே னன்றிப்
பிறந்தார் அறியாத பேறு. 2

எல்லாம் கழற்றி இறைவ னெடுங்கலக்க
வல்லார்கள் சொன்ன வழிபலவும் — சொல்லரிய
தம்பிரான் ஆகமத்தில் சாற்றும் அவதரமும்
எம்பிரான் தந்தான் எமக்கு. 3

## 1. சன்மார்க்கம் (சாக்கிரம் 1-19)

### 1. பூதப்பழிப்பு

மண்ணுக் குயிராகி வந்துரத்துத் தான்தரிக்கும்
எண்ணும்உரோ மாதிஇதன் காரியமாம் —
பிறவுங் கடினமாய்ப் பேசியது தானும் [கண்ணில்
துறவுமுதற் பூதத் தொழில். 4

நீர்க்குயிராய் நின்றே நெகிழ்ந்து குளிருமே
பார்க்கில்நீ ராதி பகர்கருமம் — கார்க்குரிய
வெள்ள முதலாகும் மெய்யுணரில் அப்புத்தான்
அள்ள விடப்படா தாம். 5

வன்னிக் குயிராகி வந்துசுட்டு ஒன்றுவிக்கும்
பன்னுபசி யாதி பயில்கருமம் — மன்னும்
விளக்காகிப் பந்தமாய் வேறாகி நிற்கும்
துளக்கமிலாத் தேயுத் தொழில். 6

தேடப் பிரித்துத் திரட்டுவிக்கும் செய்கருமம்
ஓடல்முதல் ஓவா உயிர்மருத்து — நாடில்இவை
அல்லவாம் வாயு அருட்குருவால் காண்பதன்றிச்
சொல்லவா ராதே துணிந்து. 7

இரந்தரமாய் நின்றே இடங்கொடுக்கும் வானம்
பரந்த குரோதமுதல் பார்க்கின் — விரிந்த
கருமமாய் வேருகும் காணலாம் உண்மைக்
குரவனுல் என்றே குறி. 8

வட்டம் அறுகோணம் மாயாத முக்கோணம்
இட்ட பிறைசதுர மேவடிவம் — எட்டரிய
வேதன்மால் மிக்க விடையோன் மகேசனுடன்
ஆதி அதிதெய்வ மாம். 9

இப்படியே பூதத் தியல்பு தனைத்தெளிந்தே
அப்படிநீ நில்லாமல் ஆங்கறிந்திட் — டெப்படியும்
தோன்றுமல் தேசிகன்றன் சொன்னபடி
ஊன்ருய் அதுவாம் உடம்பு. [கண்டிருந்தால்

## 2. பொறியறவுணர்தல்

பூத வுடம்பாய்ப் பொருந்தும் பொறிபுலன்கள்
நாதனரு ளாலேநீ நாடிஅவை — ஏதமெனத்
தத்தம் உருவுணரத் தான்அகலும் அப்போதே
சத்தமுத லாகிவிடும் தான். 11

சத்தாதி ஐந்தினையும் சந்தித்து நீஅகல
அத்தால் வரும்பயன்கள் ஆங்ககலும்—எத்தாலும்
காணுமல் அவ்விடயம் கைகழலக் கைகழலும்
நாணுப் பிறப்பின் நவை. 12

வாக்காதி அத்துடனே நீங்கவச ஞதிவிடும்
நீக்காத உட்கரணம் நீங்குமே — தாக்கி
மனது முதலாக வந்தவந்த போது
தனது செயல் உணரத் தான். 13

## 3. அந்தக் கரண சுத்தி

மன்னும் மகாரம் மனஞ்செலுத்தும் புத்தியினை
உன்னும் உகாரம் உபகரிக்கும் — முன்னுகும்
ஆங்காரந் தன்னை அகாரம் செலுத்தியிடும்
நீங்காத சித்தம்விந்து நேர். 14

அந்தக் கரணம் அகல அதிற்கூடுந்
தொந்தக் கலாதித் துரிசறுமே - பந்திக்கும்
சித்த மயலறுத்துத் தீர உனக்கேறல்
ஒத்த படியே உணர். 15

## 4. கலாதி ஞான நிராகரணம்

பொங்கு புலனருந்தப் போதந் தருமாயை
தங்குகலை யாதி தருஞானம் — இங்கிதனை
நீங்குபடி மாணவக நின்போதம் ஒன்றிரண்டு
தூங்குபடி நில்லாய் துணிந்து. 16

காலம் நியதி கலையாதி தத்துவங்கள்
சாலஅறி விச்சைதொழில் தான் பூத்தல்—மூலமா
மாயை மயக்கல் வரைத்தல் வினைகூட்டல்
ஆயவிட லாமென் றறி. 17

## 5. சுத்த தத்துவ தூடணம்

ஆன அதனுல் அழுந்திஞல் ஆசதற்கேன்
ஈன வயிந்தவத்தின் எல்லேகாண் — ஊனமிலாப்
போகம் தருமாஞல் பொல்லாதோ புண்ணியத்தின்
ஆகம் துணேயாஞர்க் காம். 18

சுத்தவித்தை யாதிமுதற் சொன்னஏழ் தத்துவமும்
ஒத்து நடத்தியிடும் ஓவாமல் — வித்தைசெயல்
ஏறிக் குறைந்தொத்தல் எப்போதும் பார்த்திடவே
மாறிப் பிறந்தகலு மாறு. 19

## 6. தத்துவாதீதம்

மண்முதலா நாதாந்த மாய்வந்த தத்துவத்தின்
உண்மையறிந் தெல்லாம் ஒழிந்தாயே—எண்ணில்
[இவை
தத்துவா தீதமெனச் சாற்றுங்காண் சைவமறை
அத்துவா எல்லாம் அற. 20

இப்பரிசே ஐந்துசுத்தி எய்தியதால் எப்போதும்
செப்பரிய மாயாதி தீருமே — அப்பரிசே
ஆங்கவற்றி ஞேடே அழியும் வினே மலந்தான்
நீங்கவற்ருே நீங்கா நிலே. 21

## 7. சகல தரிசனம்

நின்றுநின்று வந்த நிலேதோறும் நீஅறிந்த
தன்றிஅவை தன்னே அகன்ருயே—இன்றிவைதான்
முத்தி படுஞ்சகலம் முன்னம் படுஞ்சகலம்
பெத்தமது என்றுநீ பேசு. 22

அஞ்சு வகையாக ஆருறும் நீத்ததற்பின்
விஞ்சிவரும் ஆணவத்தின் மேலீடு — வஞ்சமறச்
சாற்றில்அது கேவலமாம் தான்கழித்துப்
சாற்றில் அதுசகலந் தான். [போந்தநிலை

## 8. கேவலம்

அன்றிவந்த தத்துவங்கள் எல்லாம் அகன்றிடவே
ஒன்றிநின்ற ஆணவந்தான் ஒன்றுமே—
[என்றுந்தான்
நீங்கா இருள்விழிபோல் நிற்குமே ஆன்மாவும்
பாங்காக ஆங்கே பதிந்து. 24

பகலிழந்த வான்போல் பரவுமலம் நீயாய்
இகலறவே நின்ருய் இழந்தாய் — அகலறிவு
வாடாத முத்தியினில் வாய்த்தஅருட் கேவலம்நீ
நாடாத கேவலமுன் ஞள். 25

## 9. கேவல தரிசனம்

ஒன்றுந் தெரியா ஒழியா இருளாகி
இன்றளவும் நின்ற திதுவோதான் — ஒன்ருகிச்
செம்பிற் களிம்புபோற் சேர்ந்துநின்ற
அம்புநிழல் போலென் றறி. [ஆணவந்தான்

கருவி கரணம் கழன்றும் கழலா
இருளின் பெருமையிது என்ஞே — இருள்தான்
விடிகைக் கிருண்ட மிகுதிபோல் மாசு
மடிகைக் கிருண்டதுகாண் மற்று. 27

## 10. கேவலாதீதம்

வானில் இரவிவர வல்லிருள்போ மாறுபோல்
ஈன இருள் அகல்வ தெக்காலம் — மானே
அறிந்தாய் இருளென் றறியாமை தன்னைப்
பிறிந்தாயோ இல்லையோ பேசு. 28

இந்த இருள்ஒழிய ஏதும்நான் காண்கிலேன்
இந்த இருள் அகல்வ தெப்படியோ — இந்த
அறியாமை நின்றால் அதனைநீ காணாய்
அறியா தறிந்தனையோ அன்று. 29

## 11. தன்னுண்மை

அந்த மலமாம் அறியாமை கண்டாயே
அந்த அறிவுநீ ஐயனே — தொந்தஇருள்
போனதே உன்னைவிடப் போக்கித் திரோதைஅரு
ளானதே கண்டாய் அறி. 30

வைத்த அவதரங்கள் எல்லாம் உடன்வந்தும்
அத்தகைமை கண்டும் அறியாயால் — முத்தனாய்ப்
பாச அறிவும் பதியறிவும் அன்றியே
ஆசறவே நின்றவன்நீ யாம். 31

## 12. சைதன்னிய தரிசனம்

கண்ணில்இருள் போனாலும் கண்தன்னைக் காணா
[போல்
எண்ணும்இருள் போனால் எனைஅறிய —
[வொண்ணாதோ
கண்போற் சடமோநீ காட்டியதுங் கண்டறிந்த
ஒண்போதம் நீயென் றுணர். 32

இருட்கும் ஒளிக்கும் இடமாகும் வான்போல்
அருட்கும் மருட்கும் அகமாய்ச் — சுருக்கமிலா
நீசத் தசத்தன்று நேரே சதசத்த
ஞய்சத் ததுஅசத்த தாம். 33

அறியும் அறிவுநீ அன்றே உனக்குச்
செறியுமலம் நின்றதோ செப்பாய் — அறிவுதனைப்
பாராதே பார்த்தறிந்து பாசப் பழக்கமதில்
வாராத தன்றே வழக்கு. 34

## 13. ஞான தரிசனம்

அறிந்தறிந்து வந்த அவதரங்கள் தோறுஞ்
செறிந்தறிய நின்றதெது தேரின் — பிறிந்ததனின்
நின்றதறி யாமை நிகழ்த்தியது நீக்கிஉனை
இன்றறிய வைத்ததருள் என். 35

அந்த அருள்உனக்கிங் காதார மாய்அல்லின்
இந்துஎன எறித்திட் டேகமாய் — முந்தி
உனைஉனக்குத் தான்விளக்கி ஓவா துணர்த்தும்
தனை உனக்குக் காட்டுமே தான். 36

எல்லாம்பொய் என்றிங் கிருந்தேனும் நானன்றே
நல்லாய் எனைஅறிந்தேன் நானன்றே —
[சொல்லாடும்
நான்பிரமம் அன்றி நடுவே உணர்த்துதற்கு
வான்பிரமம் உள்ளதோ மற்று. 37

அன்றுமுதல்இன்றளவும் அண்ணல்அறிவிப்பதன்றி
இன்றறிவேன் நான்என் றியம்புவதென்—என்றும்
அவத்தை தனில்உணர்த்தி ஆங்கருத்தி இன்றித்
தவத்தில் உணர்த்தினர்ஆர் தான். 38

உன்அறிவை நீயே உணர்வையே யாமாகில்
இந்நெடுநாட் பாசத் தியையாயே — உன்அறிவை
நீங்கா அறிவாகி நீரும் இரதமும்போல்
ஆங்காண் அரனுர் அருள். 39

உன்அறிவுக் குள்ளே உணர்வாய் ஒழியாத
தன்அறிவு தான்உனக்குத் தாரகமாய்ப்-பின்னமற
ஒன்ருய் ஒழியாமல் உள்ளடங்கி உள்ளபடி
நின்ருல் அதுஆவை நீ. 40

## 14. பரை தரிசனம்

இச்சைஉயிர்க்கிரங்கல் ஞானம் இசைந்துணர்த்தல்
வைச்ச கிரியை வயநடத்தல் — நிச்சயமாஞ்
சத்தியிவை மூன்றினையுந் தந்ததொரு சத்திகாண்
முத்தனே பார்நீ முயன்று. 41

கிரியைஅறி விச்சை கிளர்ந்தசத்தி ஏதோ
பெரியபரா சத்தியெனப் பேசாய் — தெரியிலதிங்
காரும் அறியா அகண்டபரி பூரணமாய்ப்
பேரறிவாய் நிற்கும் பெற. 42

அந்த அறிவும் அறிவன்றே இப்போது
தந்த அறிவும்அது தானன்றே — அந்த
அறிவிற் கிளைத்ததுகாண் அவ்வறிவிங் கேதோ
நிறைவிற் கிளைப்பற்ற நேர். 43

அறிவார்க் கறிவித்தங் கல்லாத தாகா
அறிவாய் விகற்பம் அறியா — அறிவேகாண்
கண்பெற்ருர் கண்ட கதிரொளிபோல் கண்டதனை
விண்பற்ருய் நில்லதிலே மேல். 44

## 15. பரையில் வியாத்தம்

விண்ணில் கதிரோன் விளங்கி விரிந்ததுபோல்
கண்ணில் கதிரோன் கலந்ததுபோல் — நண்ணிப்
பரைநிறைவில் நீயும் பதிவையே யாகில்
உரையிறந்திட் டொன்ருவை உற்று. 45

## 16. பரையில்யோகமும், 17. பரையில்போகமும்

விண்ணில் விகற்பமற மேவியகால் நின்றதுபோல்
நண்ணும் பரையதனில் நண்ணியே—எண்ணிறந்து
நீருறங்குந் தன்மைபோல் நிற்கைபரை யோகம்
சீருறலே போகமெனச் செப்பு. 46

## 18. சுத்தபராயோகமும், 19. சுத்தபராபோகமும்

### முத்திசாக்கிரம்

நீங்காத பேரறிவின் நீங்காமற் கண்டநீ
நீங்காமல் நின்றபடி நின்றதனின் — நீங்காமல்
நின்றுவிட லன்ருேதான் நின்மலன்றன் பேரறிவில்
ஒன்றுபடல் என்றறிநீ உற்று. 47

எத்திசையும் ஒன்ருய் இறையறிவி லேஅழுந்தல்
சுத்தபரா போக மெனத்துணிநீ — சத்தியமே
அத்தன்மை கண்டால் அதுமுத்தி சாக்கிரமாம்
சித்த மயல்அறவே தேர். 48

## 20. சாக்கிராதீதம் (முத்தி) சொப்பனம்

நின்ற அறிவறிகை நீங்காமை சாக்கிரமாம்
அன்றி அவிழ்தல் அதீதமாம் — சென்றறிவின்
நீங்காமல் நின்று நெடிது துயில்கொளவே
வாங்கா தறிவாய் வர. 49

## 21. பரையிலதீதம் (முத்தி) சுழுத்தி

இவ்வறிவு காண்டல் இருள்தீருஞ் சாக்கிரமாம்
அவ்வறிவு காணு ததீதமாம் — இவ்விரண்டும்
பாராமல் நிற்றல் பரையி லதீதமாம்
ஆரா அறிவகன்ற தால். 50

ஈசனறி வாகிஎலாம் இன்று கழன்றகன்ருய்
பாசமிக வைத்ததனிற் பற்ருதே — கூசாமல்
நேராக நீங்கிஅதில் நின்ற சுவடறவே
வாராய் சிவமேல் வர. 51

## 22. சுத்தாவத்தை (முத்தி) துரியம் 22-29

அறிவடையச் சென்றங் கதீதமாய் நின்ற
குறியிறந்திட் டொன்றுங் குறியா — நெறியேது
சுத்தவத்தை மைந்தாஉன் தொல்லைமலம்
அத்துடனே செல்வதது வாம். [இல்லைஇல்லை

## 23. சுகரூபம்

பைய இருந்து பதைப்பற்ற பின்உனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே — ஐயனே
கண்டாய் சிவபூமி காட்சி யறக்கலந்து
கொண்டாள்வன் கண்டாய் குறித்து. 53

விழுந்த அவதரத்தில் விஞ்சு சுகந்தான்
எழுந்ததிது எங்கே இறைவா — மொழிந்தருளாய்
மாமணியிற் சோதி மலர்ந்த பிரபைபோல்
ஆமரன்றன் பாலே அது. 54

துன்பமற்ற இந்தச் சுகப்பிரபை தன்னையே
இன்பசத்தி என்றறிநீ எப்போதும் — அன்புறவே
நின்றதிலே ஆறி நிலாவும் நிலர்வும்போல்
மன்றல் தரமணந்து வாழ். 55

தேனூரும் இன்பச் சிவவடிவம் இப்படியோ
வானுடர் காணாத மன்னவனே — ஞானா
இதுவும் ஒரு சத்தி இறைவர்க்கங் கானால்
எதுமுத்தி சொல்லாய் இனி. 56

## 24. சுகாதீதம்

இந்தச் சுகத்தில் இனிநீ விழியாமல்
அந்த அறிவின் அயர்ந்ததுபோல் — தொந்தமறப்
போதாய் இதுவே சுகாதீதம் பொய்யற்றோர்க்
காதார மான அருள். 57

ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரான்
அன்றி ஒருபொருளும் ஆகாதே — நின்றழுந்திச்
சொல்லரிய இந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்லவன்தா னுமே நிலை. 58

## 25. சிவப்பேறு

எல்லாம் கழன்ற இடமே சிவமென்று
சொல்லா டுவர்கழன்ற தூயோர்கள் — நல்லாய்
நின்றபடி தானே நிலையா நிலையுதனில் [கேள்
நின்றுவிடு நேராக நீ. 59

வானகத்தில் வானும் மணத்தில் மணமும்போல்
ஆன்சிவப் பேற்றில் அழுந்திஅது — தானுகும்
ஆண்டகுரு நாதா அடியேன் பெருவாழ்வை
மீண்டுசொல உண்டோ விதி. 60

நீயுஞ் சிவமாகி நின்ருயோ நின்றிலையோ
ஆயஅடி யேனே அதிகாரம் — நாயனே
ஒன்றன் றிரண்டன் றிரண்டொன்று தானன்று
நின்றதொரு தன்மை நிலை. 61

சாற்றில் அதற்குவமை தாடலைபோற் சன்மார்க்க
வேற்று விதிபலவும் வேண்டாவே — போற்றரிய
நித்தனே சுத்தனே நித்தியா னந்தனே
அத்தனே முத்தனே ஆங்கு. 62

அந்தச் சுகத்துக் கதீத அவத்தையென்பர்
பந்தமற்ற முத்திப் பயனறியார் — அந்தோ
பிறியாத இன்பப் பெருமானைப் பெற்றும்
அறியாத வாதனையால் ஆங்கு. 63

நின்ற நிலைசிவமாய் நின்ருயே நின்மலனும்
என்றும் பயனுய் இருந்தானே — அன்றே
அவனுக் கிதமே தவனுகி நின்ற
இவனுக் கிதமே தினி. 64

## 26. பரமாநந்த தெரிசனம்

அன்றே தொடங்கி அனைத்துயிரும் தானுகி
ஒன்ருகி நின்றவருக் கின்பூட்டிக் — குன்ருமற்
கொண்டுவிட வன்ருேநம் கோமாற் கிதமென்று
† பண்டைமறை சொல்லும் பரிந்து. 65

† 'கண்டுகொள் நீ இந்தக் கருத்து.'

பார்க்கரிய இந்தப் பரம சுகந்தனையே
சேர்ப்பன்உயிர்க் கென்றிறைவா செப்பினையே —
[மாற்றரிய
ஆனந்தம் ஆருயிர்கட் கண்ணல் அருத்துவது
தானெங்குப் பெற்றவா சாற்று. 66

பெற்றருந்தி இன்பம் பிறர்க்கும் அருத்தினனோ
உற்றபர மானந்தம் உள்ளதோ — மற்றிதுதான்
என்றுநீ கேட்கில் இறையுருவம் ஆனந்தம்
‡ என்றுரைக்கும் ஆகமநூல் இன்று. 67

ஆனபர மானந்தம் ஆகின்ற எல்லையே
ஊனமிலா உண்மைதனில் ஒன்றுபடல்—ஈனமறத்
தானான போது தணவா தெழுந்தசுகம்
மானே அதுவா மதி. 68

## 27. பரமானந்த யோகம்

விளைந்தபர மானந்த வெள்ளந் தனிலே
துளைந்துதுளைந் தாடிஅதில் தோன்று —
[வளைந்துன்னை
நீர்போல் அமிழ்த்தியதன் நீள்நிழல்போ லேகரந்து
பார்போல் தரிப்பாகும் பார். 69

பாராதே அந்தப் பரம சுகந்தன்னை
நேராகத் தானு நிழல்போலத் — தீராச்
சுபாவம் அதுவாகித் தோன்றிமறை யாதே
அபாவமாய் நில்லாய் அதில். 70

---

‡ 'அன்றிவே றொன்றில்லை யாம்'

## 28. பரமானந்த போகம்

நின்றபர மானந்தம் நேரே யனுபவித்தங்
கொன்றுபட உள்ளுருகி ஓவாமல் — என்றும்
மதுவுண்ட வண்டுபோல் மாளாச் சுகத்தைப்
புதிதுண் டிருந்துவிடிப் போது. 71

பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
உருகிஅடி யேன்அருந்த ஊட்டும் — குருவே
அழியாத இன்பம் அரன்அருந்தான் என்னும்
வழிஏது சொல்லீர் மகிழ்ந்து. 72

சர்க்கரைதான் ஆர்க்கும் தரும்இரதம் அவ்விரதம்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்கால் —
[சர்க்கரைக்கின்
றின்புருவம் அன்றி எழிலுருவம் வேறுண்டோ
இன்புருவ மேஇறைக்கும் என். 73

நாவார் இரதமது நாஅருந்தல் அல்லாதிங்
காவா இரதம் அறியுமோ — ஓவாப்
பரமசுகம் உன்பால் பலிப்பதே அன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன். 74

இந்தச் சுகம் ஆன்ம லாபம் எனஅறிநீ
அந்தச் சுகம் ஒழிந்திங் காராதே — இந்தச்
சுகமெலாம் அந்தச் சுகமாக்கில் உன்றன்
அகமெலாம் ஆனந்த மாம். 75

## 29. பரமாநந்த மேலீடு

அண்ணலும்ஆ னந்தம் அருளும்ஆ னந்தம்உயிர்
எண்ணிலா ஆனந்தம் எவ்வுலகும் — பண்ணி
அளித்தழிப்பா ராகும் அவர்களும்ஆ னந்தம்
களித்ததுவே எப்போதும் காண். 76

எங்குநிறைந் தானந்தம் எல்லாம் அமிழ்த்திமிகப்
பொங்கிக் கரைபுரண்டு பூரணமாய் — எங்கும்
வளைத்த உலகுயிரும் வாய்த்த சுகமாம்
அளத்திற் புகுந்ததுபோல் ஆங்கு. 77

கண்டஇட மெல்லாம் கருணைக் கடலமுதம்
மொண்டுகொள லாய்நிறைந்த முத்திதனைப் —
திருமால் அயனறியாத் தேசிகனார் பாதம் [பண்டே
தருமாம் அடியேற்கும் தான். 78

## 30. பரமாநந்த அவசம்

### (முத்தி) துரியாதீதம்

பரமபர மானந்தம் பார்கீழ்மேல் மற்றும்
அரவம்வா ராதே அகலும் — புரணமாய்
ஆங்கே அமிழ்ந்தி அவசமாம் ஆனந்தம்
நீங்கா ததுவாகி நில். 79

உற்றபர மானந்தத் தொன்றாய் அதில்உறங்கி
முற்றுவதே முத்திமுடி வென்றுரைக்கும் —
[குற்றமிலா
வைதிக சைவம் வழிநூல் புராணமற்றுஞ்
செய்வனநூ லெல்லாம் தெளி. 80

### அணு வகை

ஒன்றிரண்டு மூன்றுமலம் உள்ளஉயிர் மூவர்க்கும்
சென்றிவன்போல் நேரே சிவமாகி — நின்றநிலை
இவ்வகையே ஆளும் எழிற்குருவாம் ஈசனே
அவ்வகையை நீஇங் கறி. 81

### பஞ்சாக்கர தெரிசனம்

அஞ்செழுத்தும் அண்ணல்அருள் ஆன்மாத்
[திரோதமலம்
மிஞ்சி நமத்துரந்து மெய்யருள்வாத் — தஞ்சச்
சிகாரத்தில் யவ்வைவிடுந் தீதிலா இன்பப்
புகாரில் புகுந்தருந்தப் போய். 82

### குரு துதி

பற்றிநின்ற பாசம் பறித்தகல வேவிழித்திட்
டுற்றஉயிர் காட்டி உணர்வுணர்த்தி — மற்றுஞ்
சிவப்பேறு தந்து சிவபோக வாரி
புகப்பே றளித்தவரைப் போற்று. 83

### சீடரிலக்கணம்

இரவு பகல்நிழல்போல் இட்டபணி செய்து
குரவர்புகழ் வாயாரக் கூறித் — திருமுன்
வீழுந்துவிழி நீர்பொழிய மெய்விதிர்த்து நின்று
தொழுந்தவத்தோர் காணுஞ் சுகர். 84

### முத்தனுக்கும் முத்தியின்மைக்கு ஏது

ஆகமுதல் நீங்கி அருளிற் கலந்துசிவ
போகம் விளையப் புணர்ந்தாலும் — வேகத்
தெரிவாய் நிரயத் திருப்பர் குருசொற்
பிரிவார் உலகிற் பிரிந்து. 85

### குரு வழிபாடே பொருளெனக் கூறல்

ஆகம் உயிர்பொருள்கொண் டன்றே அருள்
[அளித்துச்
சோகமெனப் பாவிக்கச் சொன்னுரைத் —
[தாகத்தோர்
வேண்டு பொழுதெல்லாம் வேண்டுபொருள்
பூண்டு தொழ லன்றே பொருள். [வந்ததுபோல்

### திருமேனியருமை கூறல்

அன்றுமுத லாகவே ஆருயிர்கட் காருயிராய்
நின்றருளும் தம்பிரான் நீங்காமல் — என்றும்
கருவாய்ப் பிறப்பைக் கழற்றினரோ தாமே
குருவாய் அருளாமற் கூறு. 87

### குருவே சிவமெனல்

பாசம் பசுபதியைப் பாரித்துப் பார்த்தனரே
ஆசில் அகலறிவாய் ஆங்ககன்று — பேசரிய
ஆனந்தம் பெற்றார் அருட்குருவே ஈசனென்பர்
மோனமே முற்றும் முயன்று. 88

### குருபணி செய்வாரை வழிபடுதல்

கருவேலை தன்னைக் கடப்பர் உலகில்
மருவாத இன்பத்துள் வைத்த — குருவின்
அடியார் அடியார் அடியார் அடியார்
அடியாரைச் சார்ந்த அவர். 89

## 2. சகமார்க்கம்

### யோகம்

சன்மார்க்கம் ஈதாம் சகமார்க்கம் சாற்றுங்கால்
பன்மார்க்கம் வாயுப் பகர்கருவி — தன்மார்க்கஞ்
சால ஒடுக்கித் தடுத்து வளியிரண்டும்
மாலறவே நிற்கை மகிழ்ந்து. 90

அந்த மனத்தாலே ஆதாரம் ஆறினையும்
சந்தித் ததிற்பொருள்கள் தான்அறிந்தி —
[டிந்துவிலே
ஓவா ஒளிவைத் துருகும்அமு துள்நிறைக்கில்
ஓவா ஒளியாம் உரு. 91

நின்ற ஒளியுருவின் நீங்காமல் நிற்கவே
என்றும் அழியாமல் இன்புற்றுக் — கொன்றை
[யந்தார்த்
தாணுவுருப் போலேபின் சாரூப்பி யத்திலே
மாணவக வாழ்வாய்காண் மற்று. 92

## 3. சற்புத்திர மார்க்கம்

### கிரியை

புத்திர மார்க்கம் புகைஒளி மஞ்சனம்பூ
வைத்தமுது தாம்பூலம் மற்றெவையும் —
[உத்தமமாய்த்
தேடிவைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
நாடவத்திற் செல்லாமல் நாள். 93

சுத்திஐந்துஞ் செய்து துகள்தீரும் மந்திரத்தால்
அத்தமது பத்துமுகம் ஐந்தாக — வைத்துவைத்து
வித்தியா தேகம் விதிப்படியில் தாபித்துப்
பத்தியால் மேனிதனைப் பார். 94

பார்த்ததிரு மேனிப் படிகந் தனில்பரனைக்
கோர்த்ததிரு மந்திரத்தால் கொண்டுவந்து —
[பார்த்தருளச்
சொல்லிற் பராக்கறுத்துச் சோதிச் சிவாகமத்தின்
சொல்லிற் படியே தொடங்கு. 95

சோராமல் பூசித்துச் சொன்னபடி நில்இதழித்
தாரார் சமீபத்தில் தான்இருந்து — வாராமல்
தானே பரன் அளிக்குஞ் சங்கரனார் இம்முத்தி
தானே தரினுந் தரும். 96

## 4. தாச மார்க்கம்

### சரியை

தாதமார்க் கம்சாற்றின் சங்கரனார் இன்புற்ற
பூதி திருவேடம் போற்றியே — நீதியினால்
பூங்கா வனஞ்சமைத்துப் பூமாலை புண்ணியற்குப்
பாங்காகச் செய்கை பரிந்து. 97

அலகு திருமெழுக்கிட் டாலயத்தில் அன்பாய்
இலகு திருவிளக்கும் ஏற்றிப் — பலகாலும்
சென்று வணங்கித் திருவடிவா ரஞ்சேர்த்தி
நின்றிடுகை தொண்டர்பணி நேர். 98

கொன்றையந்தார் வேணியற்குக் கோயில்
[பலசமைத்துப்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து — நின்றார்
அவலோகந் தன்னில் அடையார் அடைவர்
சிவலோகந் தன்னிற் சிறந்து.

(காப்பொடு நூறு திருவெண்பாக்கொண்ட)

துகளறுபோதம்

முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# சந்தானகுரவர் தோத்திரம்

## அகச்சந்தான குரவர்

அருட்குழக னெழிற்கயிலை முழுக்காவல்
நந்திபிரான் அடிகள் போற்றி
தெருட்சிபெறு மனக்கமல சனற்குமர
முனிவன்இரு திருத்தாள் போற்றி
இருட்டுமலத் தகல்சத்ய ஞானதரிசனி
சரண இணைகள் போற்றி
மருட்சியறு பரஞ்சோதி யருஞ்சீல
குருபரன்கால் மலர்கள் போற்றி.

## புறச்சந்தான குரவர்

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த
மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
தாராண்ட பல்லடியார்க் கருள்புரிந்த
அருணந்தி நற்றுள் போற்றி
நீராண்ட கடந்தைநகர் மறைஞான
சம்பந்தர் நிழற்றுள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார்
செம்பதுமத் திருத்தாள் போற்றி.

## ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனர்

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவர் இதயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட்
[கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெமேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம்எப்போதும்போற்றல்செய்வாம்

## அருணந்தி சிவாசாரியர்

முப்பொருளின் ஈரியல்பும் ஓரியல்பா
நுவலாது முறைவெவ் வேருய்ச்
செப்புசிவா கமங்களின்றன் பொருளொருமை
பெறவுணர்த்து திறமுன் னூலை
ஒப்பவிரி யாப்பதனுற் சித்தியெனும்
வழிநூலாய் ஒளிர்பிற் காலத்(து)
இப்புவியோர் தெளிந்துய்ய மொழிந்த
அருணந்திசிவன் இணைத்தாள் போற்றி.

## மறைஞானசம்பந்த சிவம்

திருவளருஞ் சாமமறை திகழ்பரா சரன்மரபோன்
விரசுநர்பான் மறையுணர்வு விரிந்தொளிரப்
[புணர்த்துவோன்
மருமமொடு கடந்தையையாள் மறைஞான
[சம்பந்த
குருவணிதன் மருமலர்த்தாள் குறித்துருகிப்
[பரசிடுவாம்.

பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்
பாராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை ஆண்ட
சைவசிகா மணிமருதைத் தலைவன் அந்தண்
கார்மருவு பொழில் புடைசூழ் மதில்மீதே மதியங்
கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையுங்
[கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்த னெந்தை
திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம்.

## உமாபதி சிவம்

அடியார்க் கெளியன் எனத்தில்லை
யண்ணல் அருளுந் திருமுகத்தின்
படியே பெற்றான் சாம்பாற்குப்
பரம முத்தி அப்பொழுதே
உடலுங் கரைவுற் றறைந்திடுவான்
உயர்தீக் கையினை அருள்நோக்காற்
கடிதிற் புரிகொற் றங்குடியார்
கமல மலரின் கழல்போற்றி.

சந்தான குரவர் தோத்திரம்

முற்றும்.

# हिन्दी - गद्यायन

*

श्री आत्मानन्द विष्णुपुरी